ப்ரஹ்மணே நம:

---

# வேதஸமாஜத்தார்

# முதல்விஞ்ஞாபனம்.

இஃது

அர்ச்சையைக்குறித்தது.




சென்னைப்பட்டணம்:
தத்துவபோதினி அச்சுக்கூடத்தில்,
கா. தெய்வசிகாமணிமுதலியாரால்
பதிப்பிக்கப்பட்டது.
கலியுகாதி௵ ௪௯௬௯.

ஸ்ரீ ஹரிணே நம:.

---

# முகவுரை.

## வேதஸமாஜத்தாருடைய வெகுவினயமுள்ள விண்ணப்பம்.

---

அன்புள்ள சோதரர்களே.

புலிபசித்தால் புல்லைத்தின்னுமென்றால் நீங்கள் நம்பமாட்டீர்களே. ஆகிலும் நமது தேசத்தில்பிரகிருதத்தில் சகலமும் சம்பாவியமே யென்பதற்கு ஒரு நிதர்சனம் கூறுகிறோம். கும்பகோணம் ஜில்லாவிலுள்ள பல பண்டிதர்கள் * எங்களைத் தங்களுக்கு எதிரிகளென்று மதித்து சாம, பேத, தான, தண்டமென்கிற நான்கு உபாயங்களில், பேத

---

* கண்டனையியற்றினவர், ஆசூரியவெங்கடேசஷாத்திராசாரியரென்கிற முகலார் சின்னசாமய்யங்காராகிய பண்டித சார்வபவுமன்.

அவரை அந்தக் கண்டனை யெழுதும்படிப் பஞ்சிக்கெஞ்சி வருந்தி வேண்டிப் பிரார்த்தித்துக் கேட்டுக்கொண்ட பண்டித சிம்மங்கள் யாரெனில்;—

க. வாஜபேயம், ஸ்ரீநிவாசபாட்டராசாரியர்.
உ. வாஜபேயம், சடகோபாசாரியர்.
ந. வித்துவான், இராகவாசாரியர்.
ச. வித்துவான், இரகுநாதாசாரியர்.

த்தையும், தண்டத்தையும் மாத்திரம் கைக்கொண்டு, நம்ம அன்பர்களில் பலருடைய அபிப்பிராய நிமித்தம் நாங்க ளனுப்பிய பிரதிக்கியா பத்திரிகையை வியாஜமாகக்கொண்டு, வெகுகாலம் சிரமப்பட்டு, தங்கள் சக்தி யெல்லாம் செலுத்தி, எங்களைத் திட்டி, "வேதஸமாஜகண்டன" மென்கிற ஒரு சிறிய புத்தகத்தை யச்சிட்டுப் பிரசுரப்படுத்தியிருக்கிறார்கள். சாதாரண ஜனங்களுடனும் வாதாடத் திறமற்ற எங்களுடன், பரப்பிரும்மத்துக்கும் இரண்டாவதெனப் பொருந்தாத அகடித கடனா சாமர்த்தியமுள்ள, கும்பகோணத்தில் பாண்

---

ரு. வித்துவான், கிருஷ்ணமாசாரியர்.
சு. திருமாலிருஞ்சோலை ஸ்ரீநிவாசதாதாசாரியர்.
எ. லக்ஷ்மிகுமாரவேதாந்தாசாரியர்.
அ. வாஜபேயம், ஸ்ரீநிவாசாசாரியர்.
கூ. கடலங்குடித்தெரு ஸ்ரீநிவாசாசாரியர்.
க0. ஊர்க்குடி, சக்கரமாசாரியர்,
கக. கவுலி, வியாசாசாரியர்.
கஉ. வித்துவான், ஸ்ரீநிவாசமூர்த்தியாசாரியர்.
கங. வித்துவான், கூஸண்ணாசாரியர்.
கச. ஜங்கமேசுவரம், வேதவியாசாசாரியர்.
கரு. பாண்டுரங்க - குப்பாசாரியர்.
கசு. மன்னார்கோயில், வ - பீமாசாரியர்.
கஎ. பச்சையப்பத்தெரு, ஒ-பி- வெங்கடரமணாசாரியர்.
கஅ. தஞ்சாவூர், குப்பாசாரியர்.
ககூ. வித்துவான், நரசிம்மாசாரியர்.
உ0. ஸ்ரீரங்கம், இரங்கநாதாசாரியார்.
உக. மத்தியார்ஜனம், வெங்கடராமவாஜபேயர்.

டித்தியம் பெற்றவர்களில் அனேகர் சேர்ந்து எங்கள்மீது துவஜமெடுப்பதில் இயற்கையாயும், செயற்கையாயுமுள்ள சக்தி, சாமர்த்திய, சாதுரியங்களையெல்லாம் தொடுப்பதைப் பார்த்தால், ஊர்க்குருவியின்மேல் ராமசரத்தைப் பிரயோகித்ததுபோலும்.

கல்வியிலும், அனுபவத்திலும் வைரமேறியிருக்கும் இப்பண்டிதர்கள் யோசனையேயின்றி உண்மையான சில கேள்விகளைக் கேட்டாலும், இன்னம்பல் முளையாக்குழந்தைகளாகிய எங்கள் விஷயத்தில் அது "நீகொகமாட, நாகொகமூட" (உனக்கொருபேச்சு எனக்கொரு மூட்டை) என்றுகு

---

உ௨. பச்சையப்பத்தெரு,துரைசாமிதாதாசாரியர்.
உ௩. சோலையப்பத்தெரு, குருசுவாமிசாஸ்திரிகள்.
உ௪. சோலையப்பத்தெரு, அநந்ததீக்ஷதர்.
உ௫. சோலையப்பத்தெரு, சுப்பராயசாஸ்திரீகள்.
உ௬. கனபாடி மஹாலிங்கசாஸ்திரிகள்.
உ௭. கனபாடி, ராஜாசாஸ்திரிகள்.
உ௮. கனபாடி, சாமிசாஸ்திரிகள்.
உ௯. மலையாளம், சுப்பாசாஸ்திரிகள்.
௩0. மத்தியார்ஜனம், அண்ணுசாஸ்திரிகள்,

இப்படிக்கு இன்னமனேக பண்டிதர்கள் கேட்டுக்கொண்டதாய் அப்புத்தகத்திற் சொல்லியிருக்கிறது. அவர்கள் பெயர்களை யுரைத்தால் புஸ்தகத்தின் மகிமைகுறைந்துபோகுமென்றோ; ஒப்பாதவர்பெயர்களையுரைத்தால் அவர்கள் கோபிப்பார்களென்றோ; மற்றெந்த ஹேதுவைப்பற்றியோ நமது சினேகிதர் வெகு விவேகத்துடன் அவர்கள் பெயரையெடுக்காமலிருந்துவிட்டார்.

மல்லவா? இப்படியிருக்க அவர்கள் இவ்வளவுப் பிரயாசப்பட்டு சொற்ப மெய்யுடன் விசேஷிப் பொய்களையும், கலந்து வாதிப்பதற்குக் காரணமின்னதென்று எங்களால் அறியக்கூடவில்லை.

எங்கள் முக்கிய உத்தேசியமெல்லாங் கூடி நமது தேசத்தாருக்கு முற்கால் சிறப்பும், சீர்மையும், மேன்மையும், மகிமையுமளித்த ஒருமைப்பாடென்னும் ஒப்பற்ற காப்பழியவே, நமதுக்ஷேமம் குறைந்து, துன்பம் வளர்ந்து, ஒருக்கால் நமது பச்சாத்தாபத்துக்குப் பாத்திரரா யிருந்தவரொல்லாம் நம்மைப் பரிஹசிக்கத்தக்க நிலைமைக்குவந்திருக்கையில், நாம்மாத்திரம் அன்று பார்த்த நிலைமைக் கழிவில்லை யென விருக்கின்றமையால், மறுபடி நமக்கு ஒருமைப்பாட்டை யளித்து முன்னிருந்தகீர்த்தியையும், சவுக்கியத்தையும் மீட்டுக் கொடுக்கத்தக்க உபாயங்களைத் தேர்ந்தெடுத்து அவற்றைப் பயிற்ற வேண்டுமென்பதேயாம். இதற்குச் சாதனமாயுள்ளவற்றில் எங்களுக்கு யுக்தமாய்த்தோன்றுமவை உண்மையில் பழுதுற்றனவாயிருக்கலாமாகையால், எங்களைவிடப் பலமடங்கு அதிகக்கல்விகற்றுக் காலங்கண்ட புத்திமானகள் தீர யோசித்துப் பிசகானவற்றைக் கழித்து, இன்னுமாவ்சியகமானவற்றைச் சேர்த்து, எங்கட்குப் புத்தி சொல்லி, எங்களுடன் கலந்து, எங்கள் நோக்கம்

யைக் கூடிவரும்படியான மார்க்கத்தைக் காட்டுவார்களென நம்பி, எங்களுக்கு முக்கியமாய்த் தோன்றிய சில விஷயங்களைப் பத்திரிகாரூபமாக எழுதிப் பலருக்கனுப்பினோம்.

அவ்வாறு செய்ததில் அப்பத்திரிகையிற் கண்டப் பிரதிக்கிரியைகளில் புத்திமான்களுடைய சோதனையின்மேல் தேறினவற்றை அனைவரும் கலந்து அனுசரிக்க வேண்டுமென்பது எங்கள் கருத்தேயன்றி அப்பிரதிக்கிரியை யெல்லாம் நாங்கள் அவலம்பித்து விட்டோமென்பதல்ல. உண்மையில் அந்தப் பிரதிக்கிரியைகளெல்லாம் தீரத் தெளிந்தவை யென்று நாங்கள் கொண்டிருந்த பக்ஷத்தில் எங்களவாயில் அவற்றை யனுஷ்டித்துக் கொள்வதில் என்னதடையிருந்திருக்கும்? அப்படி யிருந்தும் நாங்கள் அவ்வாறு செய்யவும் இல்லை, செய்யவும்மாட்டோமென்பதற்குள்ள ஹேதுக்களிற் சிறிதை யிதினடியில் உரைக்கிறோம்.

இதுவரையில் நம்ம ஆசாரியர்களுடைய கடாக்ஷத்தினால் நமக்குள்ளேற்பட்டிருக்கும் அனாவசியகமான பிரிவுகளை சாத்தியமானவரையில் இணைத்துப் பிளாஸ்திரிபோட்டு ரணத்தை ஆற்றவேண்டுமென்பதே எங்களுடைய முக்கிய உத்தேசியங்களில் ஒன்றாகவிருக்கையில் இப்போதுள்ள பிரிவுகள் போதாது, இன்னமும் வேதஸமாஜ ஜாதியெ

ன்ருவது, வேதஸமாஜ மதமென்ருவது, ஒன்றை யேற்படுத்தவேண்டுமென்பது எங்கள் கருத்தென ப்பொருந்துமோ ? இதுவே யெங்கள் கருத்தாகில், தர்ம்மாதர்ம்மங்களையும்மறந்து, மானிட வியற்கை யையும் சுவரூபத்தையுமிழந்து, பெற்ருேர் பிறந் தோரையும் அலையவிட்டு, அன்னிய மதத்திற் பிர வேசிக்கத் துணியும் சிறுவர்களைக்காட்டிலும், நா ங்கள் வெகு கொடியவர்களென நாங்களே ஒத்து க்கொள்ள வேண்டியிருக்கும். எங்க ளிஷ்டப்படி நாங்களிருந்து விடுவதே எங்கள் கருத்தாகில், கா லத்தையும், திரவியத்தையும், பாழுக்கிறைப்போ மோ? வீணுக்குப்பேசினுல் வாய்நோவு மென்றெ ண்ணி, பலர்மவுனமாய்க் கரியத்தைச் சாதித்துக் கொள்ளுகிறவாறு, நாங்களும் செய்துகொள்ளத் த டையுணடோ! அல்லது பெற்ருேர்பிறந்தோர் ம க்கள் மனைவிமாருடன் மருவி வாழ்ந்துகொண்டே அவரவர் கருத்துக்கிசைந்தபடி கிரீஸ்துவராயும், துருக்கராயுங், பவுத்தராயும், நாஸ்திகராயும், அ ந்தரங்கமான கொள்கையை அனுஷ்டித்தால் ஆ க்ஷேபிப்போருண்டோ? இதையெல்லாம் சற்று க வனிப்பார்களாகில், அனைவரும் ஒருமித்து அனுஷ் டிக்கவேண்டியது எங்கள் கருத்தேயன்றி, நாங்க ள் மாத்திரம் தனியாய்ப் பிரிய வேண்டு மென்பதல்ல வென்று தானுய்விளங்கும்.

முடியாதகாரியத்தை யோசித்துப் பயனென்ன வென்றாலோ, கடவுளானவர் உலகத்திலுள்ள அனைவரையும் சமமாய்ப்பிறப்பித்திருக்கையில், நமது பரஸ்பரக்ஷேமத்தின்பொருட்டு இயற்கையான சுவாதந்திரியத்திலும் சிறிதை யிழந்து துரைத்தனமென்றும் குடித்தனமென்றும், யஜமானனென்றும் ஊழியனென்றும், ஆசாரியனென்றும் சிஷியனென்றும், இன்னம் பற்பல மேல்வரப்பு கீழ்வரப்புகளையும், நிர்பந்தங்களையும், ஏற்படுத்திக்கொண்டு அவற்றிற்கு உட்படடு நடக்கிறோமல்லவா? பூமியையும், அதிலுள்ள பண்டங்களையும், கடவுள் அனைவர்க்கும் பொதுவாயளித்திருக்கையில், இது என்பூமி, என் தோட்டமென்கிற வியவஸ்தைகளை யேற்படுத்திக்கொண்டு, அந்தவ்வியவஸ்தைகளை மீறுவோர் தங்கள் ஏற்பாட்டினாலே சிக்ஷைக்குட்படவில்லையா? சற்றுயோசித்துப்பார்ப்பவருக்கு இத்தன்மையான எண்ணிறந்த திருஷ்டாந்தங்கள் கிடைக்குமே. ஆகையால் ஒருமைப்பாட்டால் அடையக்கூடாத பொருளொன்றுமில்லையென நம்பலாம். ஆயினும் நாங்களெச்சரிக்கும்விஷயங்கள் இவ்வளவுகடினமானதுமன்று. ஒன்றைப்புதிதாய்ஏற்படுத்துவது உண்மையாய்க்கடினமே. ஆனால்நமக்கத்தன்மையானகாரியமில்லை; ஆதியில் ஏற்பட்ட உருவை மூடிக்கொண்டிருக்கும் பாசியைக் கழுவிப்போக்க வேண்டியதுமாத்திரமே

யாகையால் புத்திமான்கள் மனதுவைத்தால் இது அசாத்தியமானகாரியமல்ல.

ஆனலிது ஒருநாளிலாவது, ஒருமாதத்திலாவது, அல்லது ஒருவருஷத்திலாவது, முடியத்தக்கதென்று நாங்களுரைக்கவில்லை. ஒருகுடும்பத்திலுள்ள இரண்டு சோதரர்களுக்குள் அபிப்பிராயபேதம் ஜனித்தால் அவர்களைச் சமரசப்படுத்தி ஒருமித்து வாழும்படிச் செய்ய எவ்வளவுகாலமும் சிரமமும்பிடிக்கிறதோ அது எல்லோர்க்குந்தெரியும். ஒருகுடும்பத்துக்கே இப்படியாகில், நமது தேசத்திலுள்ள எண்ணிறந்த குடும்பங்களில் அனுவசியகமான எண்ணிறந்தபிரிவுகளேற்பட்டிருக்கையில் அவற்றையெல்லாம் சமரசப்படுத்திஒருமைப்பாட்டை யுண்டாக்கப்பலதலைமுறைகள் பிடிக்குமென்பதை நாங்கள் நன்ருய்யுணர்ந்திருக்கிருேம். ஆகிலும் நமது பூர்வீகக்கிரந்தங்களில் அடியோடு ஆதாரமற்று நவீனமாய்ப் பலயுக்தி யேற்பாடுகளாலுண்டாக்கப்பட்ட மதங்களுக்கெல்லாம் வெகுவிரைவில் பிராசுரியமும், பிராபல்லியமும் உண்டாகியதைப்பார்த்திருந்தும், ஆதியில் நம்மவரனைவர்க்கும் பொதுவாயும், பரிசுத்தமாயும், சகலகவுரவயுக்திப்பிரமாணங்களுக்கும் இசைந்தும், இருக்கிற எங்கள்கொள்கை ஏன் விருத்தியடையமாட்டாதோதெரியவில்லை. அந்தமதங்களை முடிந்தவர்களுக்கு ராஜபலமிருந்தது, எங்கள் கொள்கைக்கு யாருதவியிருக்கிறதென்று சிலர் ஆக்ஷேபிக்கலாம். சுவ

யமகிமையுமற்று, பூர்வப்பிரமாணங்களுக்கு விரோ
தமாயும், தேசக்ஷேமத்துக்கு ஹானியாயும் உள்ள
ஏற்பாடுகளே அப்பிரயோஜகரான அரசர்கள் உத
வியால் விரைவில் பரவியதுகளென்றால், சர்வசிரோ
ஷ்டமான சுருதிப்பிரமாணத்தால், நிர்தோஷமா
னதென்றும், முக்திக்குத்தப்பாதவழியென்றும் ஏற்
பட்டு, வியாசபராசாரதிசத் புருஷர்களெல்லாம் இ
து ஒன்றேகதியென்று அனுஷ்டித்துவந்த சன்மா
ர்க்கத்தை நவீனமாய் தூற்றுக்கொண்டிருக்கும்,
குப்பைகளை வாரி அப்புறம்கொட்டி அவ்வழியை
அனைவர்க்கும் பயன் படுத்தமுயலும் நாங்கள்
சர்வசக்தராகிய ஒன்றான அத்துவிதீய ப
ரம புருஷனுடைய பரிபூர்ண சகாயத்
தைப் பெற்றிருக்கையில், எங்கள் கொள்கை
யும் அதிவேகமாய்ப் பரவிநிலையுறுமென்பதில் ச
ந்தேகமுண்டோ? ௲அ௱௰ வருஷத்தில் உண்மையானப
ரப்பிரும்மமதத்தை நிலைநிறுத்தவேண்டுமென ஆவல்
கொண்ட புகழுடம்பினராகிய ராஜாராம மோஹன
ராயருக்கு அக்காலத்தில் கடவுளொருவர்தவிர ம
ற்றொருவர் உதவியுமில்லாவிடினும், முப்பதுவருஷம்
கழியும் முன்சற்றேறக்குறைய பதினாயிரம்பேர்கள்
சேரடைந்து, அச்சன்மார்க்கத்தில் பிரவேசித்தார்க
ளெனில், கடவுளின் பரிபூர்ணமான கடா
க்ஷத்தையும், அமோகமான வேதப்பிரமாணத்தை

யும்,அன்புகூர்ந்தபிரும்மஸமாஜத்தாருதவியையும்பெற்று, ஆரம்பத்திலே பக்தியுடனும்சிரத்தையுடனும் உழைக்கத்தக்க இருபதுப்பிராணிகள் சேர்ந்து பரப்பிரும்மத்தையே நம்பி ஹேயமார்க்கங்களைவிட்டு முயல்வோமாகில், பயனளிக்க வேண்டிய பளுஎங்கள் அப்பனை பொறுத்ததாகிறது.

இவ்வாறிருந்தும் இதுவரையிலும், இனியும்ஸ்நேக பாவத்தாலே உண்மையைப்பரவச்செய்யவேண்டுமென நாங்கள் நிச்சயித்திருந்தும், எங்கள் கருத்தைப்பிசகாய்க்கிரகித்த நம்ம பண்டிதர்கள் எங்களை வலியபோருக்கிழுக்கின்றமையால், ஆத்மசம்ரக்ஷணார்த்தம் பதில் சொல்லும்படி நேரிடுகிறது. நாங்கள் உண்மையாகவே பிறர்மனம் நோகும்படி செய்யத்துணிந்திருந்தோமாகில் இதுவரையிலே நம்மவரவலம்பிக்கும் கோட்பாடுகளின் கோணல்களைக்குறித்துப் பிரஸ்தாபிக்கத்தடையிருந்திருக்கமாட்டாதல்லவா? இப்போதுதான் அதற்கேன்விடையுரைக்கவேண்டுமென்றுலோ, எண்ணிறந்த ஜனங்களைமலைக்கச்செய்யத்தக்க அனேகபண்டிதர்கள் அநியாய கக்ஷியெடுத்து ,அக்கிரமமாய்எங்களையும், எங்கள்கொள்கையையும் நிந்திக்கத்தலைப்பட்ட இத்தருணத்திலும் நாங்கள் மவுனமாயிருந்தால், நாங்கள் ஆண்பிள்ளைகளல்லவென்று பலர்பழிக்கார்களா? இப்பழியையும் பாராட்டாவிடினும், பொய் மெய்யாகவும், மெய்

பொய்யாகவும் ஏற்படுவதற்குக் காரணமாகுமல்ல
வா? நசுவரமான மண்ணுலகிலுள்ள முச்சாண் ரா
ச்சியத்தின் பொருட்டே கிருஷ்ணன் அர்ஜுனனை
நோக்கி * "ஓ அர்ஜுனா! இந்த அகாலத்தில் நீசரு
"க்கிசைந்து, பரலோகத்துக்கும், கீர்த்திக்கும் ஹா
"னியான இந்தக்குழப்பமுனக்கேன்வந்தது. பகை
"வரைத்தபிக்கின்ற ஓ அர்ஜுனா! பேடித்தனங்
"கொள்ளாதே இது உனக்கடுக்காது. இந்த இழி
"வான மனச்சோர்வையொழித்து எழுந்திருப்பாயா
"க. ஓஅர்ஜுனா! உன்சோகத்துக்குப் பாத்திரமற்றவ
"ர்களைக்குறித்து நீசோகிக்கிறாய். உன்பேச்சோ ஞா
"னிகள் பேச்சை யொத்திருக்கிறது. தெரிந்தவர்க
"ள் மாண்டவர்களுக்காவது, இருப்பவர்களுக்காவ
"து, துக்கிக்கமாட்டார்கள்." என்று உபதேசித்

---

* குதஸ்த்வா கஶ்மலமிதம் விஷமே ஸமு
பஸ்திதம் - அனார்யஜுஷ்டமஸ்வர்க்யம் அகீர்திகர
மர்ஜுன! க்லைப்யம் மாஸ்ம கம: பார்த! நை
தத்த்வய்யுபபத்யதே - க்ஷுத்ரம் ஹ்ருதயதௌர்
பல்யம் த்யக்த்வோத்திஷ்ட பரந்தப! அஶோச்யா
நந்வஶோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ஶ்ச பாஷஸே - க
தாஸூநகதாஸூம்ஶ்ச நாநுஶோசந்தி பண்
டிதா:.

தாராகில், நித்தியமானவும், அகண்டமான வும், மோக்ஷ சாம்பிராஜியத்தை யிழக்கும் படி நேரிடுங்காலத்தில் நாங்கள்மவுனமாயிருந்தால், எங்கள் சளண்டியத்தையும், நபும்ஸகத்துவத்தையும் சரியாய்வர்ணிக்க, இன்னொரு கிருஷ்ணன்வந்தாலல்லவாமுடியும்?

இளம்பிள்ளைகளென்று பெயரிட்டுக்கொண்ட நாங்கள், வேங்கைப்புலிகளைப்போன்ற பண்டிதர்களை யெதிர்க்க முடியுமோவென்றால், எங்களுக்குத்திறமில்லாமை யுண்மையேயாகிலும், நாங்களெடுத்த கக்ஷியின் பலத்தைச் சற்று கவனிப்போமாகில், அதைச்சாதிக்க எங்களிலும் தாழ்ந்தவர்களும் சமர்த்தராவார்கள். நன்றாய் நீஞ்சக்கற்றவனும், சற்று நேரத்தில் மூழ்கிப்போவான்; முற்றும் நீஞ்சத்தெரியாதவனும், தெப்பத்தால் அக்கரை சேர்வான்.

கடைசியாக நாங்கள் உண்மைக்குப்பாடு படுகின்றனமேயன்றி ஜயத்துக்கன்று. நம்ம பண்டிதர்கள் எங்களை ஜயிப்பதினால் எங்களுக்கொரு அவமானமுமில்லை; நாங்களவர்களை வெல்லுவதினால் எங்களுக்கொரு மகிமையுமில்லை. நமது வலதுகை இடதுகையை வெட்டினாலும், இடதுகை வலது கையை யொடித்தாலும் துன்பப் படுவது தேகமே யல்லவா? அப்படிக்கன்றி இரண்டு கைகளும் ஒருமித்து ப்பாடுபட்டால் அதினால் விளையும் நன்மையு

ம் தேகத்தினதேயல்லவா? இவ்வாறே உண்மையை அ
றிந்து ஒருமையாய் வாழவேண்டுமென்கிற கருத்
தைவிட்டு, தோற்றவர்களென்று சிலரை யிகழ்ந்
து, ஜயித்தோமென்று சிலர் கர்வ மடைவார்க
ளாகில், அதினால் தேசத்துக்குத் துன்பமேயன்றி
நன்மைவிளையாதே. வெவ்வேறுஜாதியான இரண்டு
மரங்களைச்செதுக்கி யிணைத்தால் ஒன்றுடனொன்று
இணங்கிப்போகையில், பேதமேயற்றிருக்கும் நாம்
மாத்திரம் பிரிவதற்கு என்னகாரணம் சொல்லக்கூ
டும்? அனைவரும் சர்வசிரேஷ்டமானதென்று ஒத்து
க்கொள்ளும் மார்க்கத்தையேயல்லவா நாங்கள் தே
டுகின்றோம். இது அனுஷ்டானத்துக்கு உதவாதெ
ன்கிற ஆக்ஷேபமொன்றுதவிர வேறெதைச்சொல்ல
க்கூடும்? அப்படியே அது அனுஷ்டித்து முடியாதெ
ன்று ஏற்படும்பக்ஷத்தில் நாங்கள் உண்மையான உ
ற்சாகத்துடன் மீளுவோம். அப்படிக்கன்றி அது ச
கலராலும் அனுஷ்டிக்கத்தக்கதேயென்று ஸ்தாபி
க்கப்படும்பக்ஷத்தில், நமது பண்டிதர்களும் வ
ஞ்சனையின்றி, பக்ஷபாத ஸாக்ஷிகமாக எங்
களுக் குதவுவார்களென்று நம்புகிறோம். நாங்
கள் எங்கள் கக்ஷியின் நிமித்தம் குமார்க்கத்
தில் பிரவர்த்திக்க மாட்டோமென்று உறுதியாய்ப்
பிரமாணம் செய்கிறோம்.

ஆனால் எங்களை எதிரிகளாக நினைத்துப் போருக்

கிழக்கும் பண்டிதர்கள்என்னகுமார்கத்தை அனுசரித்தார்களென்றாலோ, அதைச்சற்று எச்சரிக்கிறோம்.

க-வது.—நாங்கள் பேசுவது துர்வாதமென்று விளக்கும் பொருட்டு யாதொருகவுரவமான பிரமாணங்களும் அகப்படாமைபற்றி, சாதாரண வியாஜ்யக்காரர் தப்புதஸ்தவேஜுகள் சிருஸ்டிக்கத்துணிவது போல, வேதங்களில் இன்னின்னவாக்கியங்களில் விக்கிரக ஆராதனத்துக்கு ஆதாரமிருக்கிறதென்று உறுதியாய்க்கூறி யிருக்கின்றனர். ஆகிலும் இவ்விஷயத்தில் அவர்கள் சொல்லின சுவரூபத்தை நிரூபித்துக்காட்டுவது கடினமன்று. ஏனெனில் அந்த பாகங்களுக்கு விடையெழுதுமிடத்தில், அவர்கள் குறிப்பிட்ட மூலவாக்கியங்களையும், ஆவசியகமானால் அவற்றின்பாஷியங்களையும் எடுத்துரைப்பதே போதுமாயிருக்குமாகையால், இதைப்படிப்போரின் திருப்தியின்பொருட்டு, இவ்விடத்தில் விசேஷமாய் எழுதவேண்டியதில்லையென்று நினைக்கிறோம்.

உவது. வேதஸ்மாஜகண்டனமென்பதை நடத்தியமாதிரியே சற்றுயோசிக்கு மனைவருக்கும் வெகுபுதுமையாய்த்தோன்றும். தெற்குதேசத்தில் சாதாரணமாய் சொத்துக்குடையவன் ஒருவனிருக்கையில் அதில் சம்மந்தமில்லாத இருவர் வாதிப்பிரதிவாதிகளாகவந்து, பிரதிவாதியைக்கொண்டு ஒப்பான்ஸர் கொடுப்பித்து தீர்ப்புபெற்றுக்கொள்வதுபோல், ந

ம்ம பண்டிதர்கள் ஸபக்ஷ கவிபக்ஷ கஸம்வாத மெ ன்கிற பெயரைவைத்து, ஸபக்ஷகருடைய சண்டப்பி ரசண்டமான வாதங்களுக்குப் பதில்சொல்லமாட் டாதவராக விபக்ஷகரை சிருஷ்டித்துவைத்துக்கொ ண்டு வெற்றிபெற்றதாக களிக்கிறார்களல்லவா? அ வர்கள் விபக்ஷகரை எங்களுக்கு வக்கீலாய்நிறுத்தி எ ங்களை ஜயித்துவிட்டதாய் நினைப்பதினால் விளையும்ஆ நந்தமே, பரப்பிரும்மத்துக்குப் பிரதி நிதி யாக பொம்மைகளை வைத்து பூஜிப்பதினால்ஜ னிக்கும்பயனுக்கு அபாதிதமானநிதர்சனமென்பார்க ளாகில்அதைஆக்ஷேபிக்க எங்களுக்குச்சக்தியில்லை. வி சுவகுணாதர்சாதி அனேககிரந்தங்களிம்மாத்திரியாயி ருப்பதைப் பார்த்துமிருக்கிறோம், கேட்டுமிருக்கிறோ ம். ஆகிலும் அந்தக்கிரந்தகர்த்தாக்களுக்குலௌகிகவி யவகாரங்களில் விசேஷ அனுபவமில்லாமைபற்றி, இதேரீதியாக எழுததெரியாமற்போனதாக ஊகிக்க வேண்டியிருக்கிறது.

ந-வது.—முற்காலத்தில் சாபானுக்கிரக சக்தியுள் ள மகானுபாவர்களிருந்ததாக புராணங்களிற் சொ ல்லக்கேட்டோமேயன்றி, நேராய்ப்பார்த்தறியோம். அதை உண்மையாக்கவே சத்தியசந்தராகிய நம்மப ண்டிதர்கள் கடவுள் வணக்கத்திலும், புத்தகத்தின் முடிவிலும், எங்கள் ஸமாஜத்தார் நசித்துப்போக வேண்டுமென வெகு அன்புகூர்ந்து அனுக்கிரகிப்ப

தைப்பார்த்தால், மேற்சொல்லிய மகானுபாவர்களுக்கு இவர்களே அபராவதாரமென்று கிரகிக்கவேண்டியிருக்கிறது. ஆகிலும் எங்களுடைய ஆந்தரியமானவும், வினயமானவும், பிரார்த்தனையென்னவெனில், நமது தேசத்தாரனைவரும், ஒருமித்துச் சுகமாய் வாழவெண்டுமென்பதும், கடவுளின் உண்மையானவும், பரிசுத்தமானவும், மதம் எதுவோ அதுநிலையுற்றுப் பரவவேண்டுமென்பதுமேயாம்.

ச-வது.—எங்கள் கொள்கையில் பழுதுற்றனவற்றை ஆக்ஷேபிப்பதும் கண்டிப்பதும் சரியாகிலும், நிராக்ஷேபமான விஷயங்களையும் நம்மபண்டிததர்கள் ஆக்ஷேபிக்கின்றமையால் அவர்களுடைய தர்மசிந்தையும், நிஸ்பிருஹசுவபாவமும் நன்முய்விளங்குகிறது. அவர்களுடைய இஷ்டப்படிக்குக் காருணியம், சத்தியம், நியாயம், க்ஷமை, கற்பு, ஸ்நேகம்,முதலியவற்றைவிட்டொழிக்கச் சுவதந்திராளாகிலும், மானிடவியற்கைக்கே இவை அடுக்காதகுணங்களென்று உபதேசிக்கத்தொடங்கியது விந்தையாக விருக்கிறது. த்தங்கள்விருத்திக்குஇக்குணங்கள்தடையாக விருக்கின்றன வென்றே, அல்லது அவற்றையெல்லாம்விட்டொழிப்பதுதான் நல்லமதமென்றுகருதியோ, இல்லெனில் அவர்களுடைய நிஷ்பக்ஷபாதத்தை விளக்கும் பொருட்டோ, மற்றெந்தஹேதுவைப்பற்றியோ, அவர்களிவ்வாறு வாதிக்கத்தொடங்கினார்கள். ஆகிலும் ஒருபானைசோற்றுக்கு ஒருசோறுபதமென்

பதுபோல், அவர்கள் இவ்விஷயங்களில் செய்யும்வா தங்களைக்கொண்டே இதரவிஷயங்களில் அவர்களு டைய அபிப்பிராயகவுரவத்தை யறிந்து கொள்ளக் கூடுமென்று எச்சரிக்கிறோம்.

ரு-வது.—எங்கள் பிரதிக்கியைகளில் சிலவற்றின் மேல் ஆக்ஷேபம் ஏறுதபக்ஷத்தில் அவற்றைஅவர்களி ஷ்டத்துக் கிசைந்தவாறு தப்பாய் மொழிபெயர்த் து, இவ்வாறுசுவயமாய் ஆரோபித்துக் கொண்டக க்ஷியைக் கண்டித்துவிட்டு ஜயகோஷ மிடுகிறார்க ள். இவ்வாறு அவர்களனுசரித்த கோணலானவழி கள் அநந்தமிருக்சினும் நம்மன்பர்கள் திருப்தியின் பொருட்டிவ்வளவு உரைத்ததே போதுமென்று நி னைக்கிறோம்.

மதங்களினால் விளையவேண்டிய பயனெல்லாங்கூ டி நற்கதியடையவேண்டுமென்பதேயல்லவா? அப் படியிருக்கப், பழுதான மதத்தை அவலம்பித்துவிட் டு, துரபிமானத்தால் பொய்க்கக்ஷிகட்டத் தலைப்படு வோமாகில் பிறகுகடவுளுக்குமுன் குற்றவாளியாக நின்று நாம் சொன்ன பொய்க்கு உத்தரம்சொல்லு ம்படி நேரிடுமாகில், அப்போது நமது துரபிமானம் வந்து ஜாமீனாக நிற்குமோ? ஆகையால் எங்கள்மத மென்பதொன்றில்லை. உண்மையான கடவுள் மதமே எங்கள்மதம். அந்தமதம் எங்கிருந்தாலும் எங்களுக்

கு கிராகியமே. அதற்கு விரோதமாக எவ்விதப் பிர மாணமிருக்கினும், எங்களுக்கு அக்கிராஹியமே.

வேதஸமாஜகண்டனத்தைச்செய்தவரும் உண்மை யான பாரமார்த்திகரேயென்றும்; தீர்கசர்ச்சையின் மேல் தத்துவம்வெளியாக வேண்டுமென்கிற நல்லசி ந்தையுடன் அந்தக் கிரந்தத்தை இயற்றினரேயன்றி வைஷம்மியத்தா லல்லவென்றும்; அவரைநன்ருய்அ றிந்தவர்களும்அவருக்குஆப்தருமாகியசிலர் உரைத்த னர். அத்தன்மையான பரிசுத்தசிந்தையுடன் அதைய வர்எழுதியிருப்பாராகில், அவர்முயற்ச்சி சிலாகிக்கத் தக்கதேயாம்; நாங்களும் அவரை உண்மையாகவேக வுரவிக்கக்கடமைப்பட்டிருப்போம். இப்படிக்கில்லா விடினும், எங்கள்கொள்கை வாஸ்தவத்தில்அனுதியா கிலும், சிலநாளாய் நடந்தேறிவரும் ஏற்பாடுகளுக்கு முற்றும்விரோத மானதாகையால், இப்புதிய கொள் கை பழுதற்றதென்ருவது, அல்லது அவர்பிரகிருதத் தில் அவலம்பிக்கும் மதத்தைக் காட்டினும் மேலான தென்ருவது ஏற்பட்டாலொழிய அவருடைய அபிப் பிராயத்தைவிடும்படியாவது,எங்கள்கொள்கையைப் பற்றும்படியாவது அவரைக் கேட்பது தர்மமல்லவா கையால், துரபிமானமின்றி எங்கள்கொள்கையின்சு வருத்தை விசாரிப்பதும், ஏதேனும்சந்தேகமுண்டாயி ருக்கின் அதற்குச்சமாதான முரைக்கும்படி யெங்க

ளைக்கேட்பதும் ஸஹஜமே. இவ்வளவேயன்றி அவரு
டையகொள்கை சுருதிஸ்மிரு முதலியஸத்பிரமாணங்
களுக்கும்,யுக்திக்கும் இசைந்ததாயும், எங்கள்கக்ஷிஅ
க்கிரமமானதாயும் அனியாயமானதாயும் இருக்கும்ப
க்ஷத்தில், தேசக்ஷேமத்துக்கிரங்கி, நிஸ்பிருஹசித்தத்
துடன்எங்கள்கக்ஷியைக்கண்டித்துத்தகுந்தபிரமாண
ங்களைக்கொண்டு எங்களையும் அயலாரையும்தெளியச்
செய்வதும் சரியானகாரியமேயாம். அப்படிக் கெல்
லாமன்றி தமதுகக்ஷிமுற்றுமாதாரமற்றபல்பஜமான
தென்றும், எங்கள்கொள்கை சகலகவுரவயுக்திப் பிர
மாணங்களின்மேலும் ஆதாரப்பட்டிருக்கிறசன்மார்
க்கமென்னும், உள்ளுறவறிந்திருந்தும், எங்கள்கக்ஷிக்
குரிய பிரத்தியக்ஷமானபிரமாணங்களெல்லாம்மறை
த்தும், யாதொரு ஆதாரமுமற்றதுர்வழக்கத்துக்கு ஈ
ஷத்தேனும் சம்மந்தமற்ற சுருதிவாக்கியங்களை யெ
டுத்து அவற்றை ஆதாரம்போல் உரைத்துஎண்ணரிய
ஜனங்களைப்பிரமிக்கும்படிச்செய்யத்துணிவோரை ந
ம்மன்புள்ளசோதரர் என்னென்று கூறுவார். கண்ட
னைக்காரர்அனுசரித்தமார்க்கத்தின்சுவரூபம் இதன்நா
ன்காவதுஅத்தியாயத்தால்நன்ருய்விள்ங்குமாகையா
ல் அதைக்குறித்திவ்விடத்தில்விரித்துரைக் கவேண்டி
யஆவசியக மில்லையென நம்புகிருேம். இந்தமார்க்கத்
தை யனுசரித்தவர் இந்தக்கண்டனைக் காரர்மாத்திர
மேயல்ல. இந்தச்சென்னை நகரைச்சுற்றிப்பதின்காத
அாரம்வரையில், பாண்டித்தியத்தாலும், ஆசாரியபுங்

ஸ்துவத்தாலும் முதல்தரம்பத வியையுடையபலர் வ
லிய எங்களிடம் வாதாடத்தொடங்கி, யுக்திகளையும்
பிரமாணங்களையும் தீரப்பரிசோதித்ததன்மேல்,தங்க
ள்கக்ஷிக்குகவுரவமானபிரமாணமில்லையென்றும்,எங்
கள்கொள்கையே வேதத்தையனுசரித்ததென்றும்தா
க்ஷணியமின்றி வாய்விட்டொப்புக்கொண்டு, அவரவ
ருருக்குப்போனபிறகு இவ்வாறு நடந்ததுண்டாவெ
ன அயலார்கேட்கத் தாங்களவ்வாறு ஒத்துக்கொண்
டதேயில்லையெனஅவர்களுக்கு விடையுரைத்ததுமன்
றி, எங்கள்பரௌக்ஷத்தில்எங்களைநிந்திக்கத் தலைப்ப
ட்டார்களெனில், கண்டனைக்காரர் இவ்வாறுசெய்வ
து விந்தையாகுமோ? ஆகிலும் அவர்கள் மேற்கண்ட
படி யொப்புக் கொண்டபோதுகூடவிருந்தபண்டித
களும் மற்றவர்களும் பிறகுஅவர்களுடைய இத்தன்
மையான பிராமாணியத்தைக் கேட்டு உண்மையா
வெமகிழ்ந்தனர்! இந்தச்சந்தர்பத்தில் இதைவெளிப்
டுவதற்கு எங்கள்உடம்பு கூசினாலும், விதியின்றியப்
படி செய்யும்படிநேரிட்டது.

கடைசியாகக் கடவுளானவர் அவரது சிருஷ்டிய
லடங்கிய மற்றஜந்துக்களைப் போலன்றி, மக்களுக்கு
மாத்திரம் யுக்தாயுக்தங்களை யறிந்துகொள்வதற்கு
சாதனமான புத்தியை அளித்திருக்கின்ற மையால்
நாம் அதை வஞ்சனையின்றிப் பழக்கி, தாக்ஷணியமு
ம்துரபிமானமுமின்றி விசாரஞ் செய்யுந்தோறும்பே

ன்மேலும்விருத்தியடைவோமென்பதற்கு நம்மையா
ளும் நாட்டாரேபோதுமான நிதர்சனமாகிலும்; நம
து தேசத்திலும் விஷயவிசாரம் அடியோடில்லாமற்
போகவில்லையென்று எச்சரிக்கிறோம். இத்தன்மையா
னவிசாரங்கள்செய்யநாம் அதிகாரிகளல்லவெனவும்,
பகவதம்சமான யாரோசிலர்மாத்திரம் அதற்கதிகாரி
களெனவும், நம்மவரில்சிலர்கூறுவார். ஆகிலும் அரு
ள் கடவுளானவர் மனுஷியசாமனியத்துக்கும் புத்தி
யளிக்காமல் சிலருக்கு மாத்திரம் அளித்திருப்பாரா
கில் அப்போது இவ்வாறுகூறுவது பழுதாகமாட்டா
து. நம்மபெரியோர் விசாரித்து முடித்தவிஷயத்தில்,
நாம்மறுபடி விசாரஞ்செய்யக் கூடாதென்று நமக்கு
உபதேசம் செய்யவெகுபேருளர். ஆகிலும் அப்பெரி
யோர்கள் அவர்களுக்கும் பெரியோர்விசாரித்து மு
டித்த விஷயங்களை மறுபடியாராயத் தொடங்கி, மு
ன்னேற்பாடுகளுக்கு முற்றும் விரோதமான பலபுதி
யவேற்பாடுகளைச் செய்திருக்கிறார்களல்லவா வென்
பதைமாத்திரம் கவனிப்பாரில்லை. நமதுஆசாரியன்
உப்பைப் பார்த்துச்சர்க்கரை யென்பாராகில் அந்த
உப்பு தித்திக்குமோ? இப்படிக்கிருந்தும் யாரோஒரு
பெரியவர் சொன்னாரென்கிற ஹேதுவைப்பற்றி,
வைஷ்ணவர்கள் உப்பை வெள்ளைச்சர்க்கரையென்
று வியவஹரிப்பது மாத்திரமேயன்றி, போஜனகா
லத்தில் உப்பென்றவர்களை ஜாதியில் தாழ்ந்தவரெ
ன்று அவமதிக்கின்றனரல்லவா? இவ்வளவு அல்பவி

ஷயங்களிலெல்லாம் குடிமுழுகிப்போவதா யவமதிப்பதுபோதுமான சுவரூபவிசார மில்லாமையாலேயல்லவா? கடைசியாகக்கடவுளானவர் ஒவ்வொருவருக்கும் பகுத்தறி வளித்திருக்கையில், அதைஈஷத்தேனும் பயன்படுத்தாமல் அயலார் பேச்சையே கேட்டு நடப்போமாகில் நமது உத்தரவாதம் நீங்குமோ? சகலவிதக் கொடிய கிருத்தியங்களைச் செய்வோனாகிலும் பிராமணனாய் மாத்திரமிருந்தால் அவனுக்கு ஷோடசோபசாரங்கள் செய்யவேண்டு மெனவும், பசியால்வருந்தி உத்தரக்ஷணத்தில் பிராணவியோகமடையும் நிலைமையிலுள்ளவன் துருஷ்கனாகில் அவனுக்கு அன்னமிடக்கூடாதெனவும் நம்மஆசாரியர்கள் செய்யும் நல்ல உபதேசத்தைக்கேட்டு அப்படியேநடப்போமாகில், நியாயாதிபதிகளுக்கெல்லாம் நியாயாதிபதியாயுள்ளவர் "உனக்குத்தனியாய்ப்பகு "த்தறிவளித்திருக்கையில் அதையேன் உபயோகித் "துக்கொள்ளவில்லை" யெனில் அதற்கென்னவிடையுரைக்கக் கூடும்? கடவுளே நன்மை தீமைகளிரண்டையும் படைத்து அவற்றிற்குரியப் பயன்களையும் விதித்து விட்டபோதிலும், மனிதற்கு சுவாதந்திரியத்தை யளித்திருக்கையில், நாம் அத்தன்மையான சுவாதந்திரியத்தைப் போக்கிவிட்டு மனிதரை மிருகங்களின் நிலைமையிற்றள்ளி மூக்காங்கயிறு போட்டிழுக்க யத்தனித்தல் தர்மமாகுமோ? கடைசியாக எங்கள் கொள்கை யெல்லாம் பழுதற்றன வென்று

நாங்கள் கூறவில்லை. பிரகிருதத்தில் அவைப் பழுதற்றனவாகவே தோன்றிலும், பிற்காலுள்ளவர் அவற்றை மாற்றலாம். இக்காலத்துள்ளவரும் அவற்றைப் பழுதானவையென்று யாராவது தயைசெய்து தெனவடங்கக் காட்டுவாராகில், நாங்களுடனே மாறச் சித்தமாயிருக்கிறோம். மாறவேண்டியது மனிதரியல்பு. மாறாதிருப்பது மிருகமொன்றே. ஆகிலும் நாமடையும்மாறுபாடுகள்யுக்தமானவையென்பதற்குத்தீரப்பரிசோதித்தமேல்நமதுமன சாக்ஷிருஜுச் சொல்லுமாகில் நம்முடையஉத்தரவாதம் நீங்கும்.

எங்களை யெதிர்த்துப் பண்டிதர்களியற்றிய புத்தகம் முழுமைக்கும், ஒரே விடை யெழுதும்பக்ஷத்தில் அது வெகு பெரியபுத்தகமாய் முடியுமாகையால், ஒவ்வொருப் பிரதிக்கியையைப்பற்றி ஒவ்வொரு சிறிய புத்தகமாய் அச்சிட்டுப்பிரசுரப்படுத்த நிச்சயித்திருக்கிறோம்.

இந்தக்கிரந்தத்தில் வியாக்கியானங்களுக்கும் பாஷியங்களுக்கும் தமிழில் பொருளெழுதும்போது — என்கிற குறிவரும். இந்தகுறிக்கு இருபுறங்களிலுமுள்ள சொற்கள் பரியாய பதங்களென்று அறிந்துகொள்க.

# முதல் அத்தியாயம்.

எங்களுடைய முதல்பிரதிக் கிஞையயின்மேல்சொல்லப்பட்ட தூஷணங்கள் சரியோ பிசகோவென்பதைப்பரிசோதிப்பதற்குமுன்,அந்தப்பிரதிக்கியையின் கருத்தையும், அதற்காதாரமாக எங்களுக்குத் தோன்றும் ஹேதுக்களையும் ஒருவாறு உரைக்கிறோம்.

## பிரதிக்கியை.

"சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரகர்த்திருக, மோக்ஷ
"ப்பிரத, ஸர்வக்கிய, சர்வசக்த, ஆநந்தமய, ஸத்
"ஸ்வரூப, அதிருசிய, அத்துவிதீய, ஏக, பரமபு
"ருஷனை மாத்திரம், அவருடைய அருளாலும்,
"அவர் விரும்பும் கர்மங்களின்வழியாலும், தொ
"ழுவேனே யன்றிசிருஷ்டியில் அடங்கிய பூதங்க
"ளில் ஒன்றையும் தொழேன்."

இதில் பிரும்மத்துக்குச் சொல்லிய விசேஷணங்களுக்குள், அதிருசியம், என்பதொன்று தவிரமற்றதெல்லாம் சர்வசம்பிரதி பன்னமாகவிருக் கிறபடியால், விவாதமெல்லாம் அந்தஒரு விசேஷணத்தின் மேல் பொருந்துகிறது. அதிருசியத்தைத் தொழுவோமென்பதினலே திருசியமான வற்றைத் தொழோமென்பது தானுய்த்துவனித்த போதிலும், எங்கள் கொள்கையின் நோக்கம் தெளிவாய் விளங்கும் பொருட்டு, எங்களுக்குரிய ஆக்ஷேபமெல்லாம் அர்

ச்சையைப் பொறுத்ததே யென்று வெளியிட்டுச் சொல்லுகிரேம். ஆனல் விபவ, வியூஹங்களும் திருசியமேயாகையால், அவைகளும் இவ்வாக்ஷேபத்துக்கு உட்பட்டது தானுவென்ருலோ, அதைக் குறித்துப் பிரகிருதத்தில் விசாரிக்கவேண்டிய அவசியகமில்லை. பிரம்மமே உருக்கொண்டு அவதரித்துநமக் கெதிரே யெழுந்தருளுங்காலத்தில், அவரை ஆராதிக்க ஒப்புக் கொள்ளலாம். முற்காலத்தில் அவர்பலவித அவதாரங்க ளெடுத்தாரோ, அந்த அவதாரங்களை விளக்க இக்காத்தில் வைக்கப் பட்டிருக்கிற பிம்பங்களை ஆராதிக்கலாகாதா வென்ருலோ, அவர் விஷயத்தில் ஆரோபிக்கப்பட்டிருக்கிற அவதாரங்கள் உண்மையானவையென்றே ஸ்தாபிக்கப்பட்டபோதிலும், அவற்றின் பிம்பங்கள் அர்ச்சை யென்கிறவகுப்பில்விழுவதுபற்றி அதற்கும் ஆக்ஷேபம் ஜனிக்கிறது. அர்ச்சாவிஷயத்தைப் பற்றிய விசாரத்தை நான் ருஅத்தியாயங்களாகப் பிரித்து, முதல்அத்தியாயத்தில் அர்ச்சைகூடும் கூடாதென்பதற்குள்ளப் பிரமாணங்களையும்; இரண்டாவது அத்தியாயத்தில் அந்தப்பிரமாணங்களின்கவுரவதாரதம்மியங்களையும்; மூன்ரும் அத்தியாயத்தில் அர்ச்சையை உபாசிப்பதினுல் விளையத்தக்க சாதகபாதகங்களையும்; நான்காவது அத்தியாயத்தில்பண்டிதர்கள்செய்யும் ஆக்ஷேபங்களின்சுவரூபத்தையும் குறித்து விசாரிக்க நிச்சயித்திருக்கிரேம்.

அர்ச்சைப் பிரும்மமென்பது நமது சினேகிதருடை-
கொள்கையும், அல்லவென்பது எங்கள்கொள்கை
மாம். ஒருவஸ்துவையாவது காரியத்தையாவது உ
ண்டெனச் சாதிப்பவர் வாதியென்றும்; இல்லையென
மறுப்பவர் பிரதிவாதியென்றும்; கக்ஷியைஸ்தாபிக்க
வேண்டியகடமை, உண்டென்னும் வாதியைப்பொறு
த்ததேயன்றி, இல்லை யென்னும் பிரதிவாதியைப்
பொறுத்ததல்லவென்றும்; சகலதேசங்களிலும்வழங்
கிவரும் தர்மசாஸ்திரங்களில் விதியேற்பட்டிருக்கிற
து. இத்தன்மையான விதிவந்ததற்குள்ள ஹேதுவின்
தன்மையைப்பிரகிருதத்தில் விசாரிக்கஆவசியகமுமி
ல்லை,அவகாசமுமில்லையாகையால்,அதை ஸத்ஹேது
வாகவே அனைவரும் கொண்டிருக்கிறார்களென்று கு
றிப்பிடுவதே போதுமானதாக விருக்கிறது. இந்தவி
தியினால் அர்ச்சைபிரும்மமென்றும், அதை உபாசிப்
பது சாதுவாகுமென்றும்நிரூபிக்கவேண்டியதுநம்மு
டையசிநேகிதர்கடமையாகவும், அதைக் கண்டிக்கவே
ண்டியது எங்களைப்பொறுத்ததாயுமிருக்கிறபடியால்,
முதலில்அர்ச்சைக்கு ஆதாரமாயுள்ளப் பிரமாணங்க
ளையோசிப்போம். முதலில் உத்தரகீதையில் * "த்வி
ஜர்களுக்குதெய்வம்அக்கினியில்; முனிகளுக்குத்தெ

* அக்நிர்தேவோ த்விஜாதீநாம்; முநீநாம் ஹ்ருதி தைவதம்; ப்ரதிமா ஸ்வல்பபுத்தீநாம்; ஸர்வத்ர ஸமதர்சிநாம்.

"ய்வம்ஹிருதயத்தில்; புத்திகுன்றியவருக்குவிக்கிரக
"த்தில்தெய்வம்; சமதிருஷ்டியுடையவர்களுக்குஎங்
"கும்தெய்வம்" என்று சொல்லியிருக்கிறது. இதின்க
ருத்தைச் சற்றுதீர்க்கமாய்ப் பரிசோதிப்போமாகில்,
இதில் நால்வகை மனிதரைக்குறித்துப் பிரஸ்தாபித்
திருக்கிறதென்றும்; பிரகிருதி பதார்த்தவிக்கியானஇ
சாஸ்திரங்களையும், ஜீவாத்ம பரமாத்ம சுவரூபங்களை
யும், அவற்றிற்குரிய பரஸ்பரஅனுபந்தங்களையும், ந
ன்றாயுணர்ந்து, சுகதுக்கங்களிலும், செல்வவறுமை
களிலும், சாவுவாழ்வுகளிலும் சமதிருஷ்டியைவத்தி
ருக்கும் மகானுபாவர்களுக்கு எப்போதும், எவ்விட
த்திலும், கடவுளின் விசித்திர செயல்கள் விளங்கு
மாகையால், அவர்களுக்கு எங்கும் தெய்வமென்று
நான்காம்பாதத்திலும்; கேவலம் இந்திரியவியா
பாரங்களெல்லாம் ஒழித்துவிட்டு, யோகாப்பியாச
ம்செய்யும் முனிகள் தியானத்தினால் கடவுளை அறிவா
ர்களென்று இரண்டாம் பாதத்திலும்; இவ்விருவ
குப்பாருக்கும் வர்ணாசிரம தர்மமில்லையென்று மேற்
படிசுலோக முழுமையாலும்; வர்ணாசிரமதர்மங்களை
யுடையவர்களுக்குள், த்விஜர்களென்னும், பிரும்மக்ஷ
த்திரிய வைசியர்களுக்கு கர்மசாதனமான அக்கினியி
ல் தெய்வம்விளங்குமென்று முதல் பாதத்திலும்;
முற்றும் கல்வியும் ஞானமுமற்று மனிதரில் கடை
யோராகவும், மற்றவர்க்கடிமையாயும், தட்டுமுட்டு
களையொத்தவராயும் ஒதுக்கப்பட்டிருந்த சூத்திரா

கள், ஞானத்துக்காவது, கர்மத்துக் காவது அதிகாரி களல்லவென்று நீக்கப்பட்டிருந் தமையால், அவர்கள் மேற்கூறிய வழிகளில் உபாசிக்க அசக்தராயிருந் தபடியாலும், ஒருவிதத் தெய்வபக்தியாவது இல்லாவிடில் அவர்களிடத்தில் நீதிமார்க்கமே யிராதாகையாலும்; அக்காலத்தில் அவர்களுக்குள்ள திறத்துக்கு இசையந்தவாறு விக்கிரஹ ஆராதனம் ஏற்படுத்தப்பட்டதென்று மூன்றும்பாதத்திலும்; ஸ்பஷ்டமாய்விளங்கும். இதின் மூன்றுவதுபாதம் சூத்திரருக்கு மாத்திரமே அனுவயிப்பதாய் எப்படியேற்படுகிறதென்றாலோ, முதல் பாதத்தில் த்விஜர்களுக்கு ஏற்பாடுசெய்துவிட்டபடியால், மூன்றுவதுபாதம் த்விஜர்களைக்காட்டிலும் வேருனவர்களுக்கே அனுவயிக்கவேண்டு மல்லவா? நான்குவர்ணங்களுள் பிராம்மணதிவர்ணத்திரயங்கள் த்விஜர்களேயாகையால், அவர்களைக்காட்டிலும் வேருனவர், நான்காவது வர்ணமாகிய சூத்திரராகவே யிருக்கவேண்டுமல்லவா? புத்திகுன்றியவரென்பதற்குப்பதில் சூத்திரரென்றே வியக்தமாய்ச் சொல்லிவிட லாகாதாவென்றாலோ, சற்றுயோசித்துப் பார்ப்பவர்களுக்கு இவ்விரண்டும் பரியாயபதங்களேயென்று எளிதில்விளங்கும். சூத்திரருக்குக் கர்மமும் கூடாது, ஞானமும்கூடாதென்கிற நிஷேதமேற்பட்டிருக்கும்போது, அவர்களுக்குப் புத்திவிகாசமுண்டாகாதாகையால், சூத்திரரென்பதற்கு லக்ஷணையாக புத்திகுன்றியவரெனப்பட்டது, இல்லெனி

ல் மேற்படி சுலோகத்திலுள்ள 'த்விஜர்' என்கிற சொல்லுக்குப் பிரயோஜனமில்லாமற் போகும்.

இனிவிசாரிக்கப்படும் கண்டோக்தமான சுருதி பிரமாணங்களுக்கு விரோதமாக இவ்வித ஏற்பாடுசெய்ய யாருக்காவது அதிகாரமுண்டோ இல்லையோ வென்பதைக் குறித்து வேறிடத்தில் சர்ச்சிக்கப் படுமாகையால்; பிரகிருதத்தில், இதையும் பிரமாணமாகவே கொண்டுவாதிப்பதிலும் எங்களுக்கு ஆக்ஷேபமில்லை. எவ்விதஹேதுவுமின்றி ஒருவிதி பிரவர்த்திக்க மாட்டாதென்பதும்; அந்தஹேது ஒழிந்தால் விதியும் ஒழியவேண்டியதென்பதும்; யுக்திக்கும் நியாயசாஸ்திரத்துக்கும் அடுத்ததாக விருக்கிறது. விக்கிரஹ ஆராதனத்துக்கு இந்தசுலோகத்தில் சொல்லியஹேதுவெல்லாம் கூடி அறிவின்மையாக விருக்கிறது. முற்காலத்தில் சூத்திரர் முற்றும் அக்கியானிகளாக விருந்தபோதிலும், பிரகிருதத்தில் அவர்களில் பலர் பிராம்மணருக்குச் சமமானகல்வித்தேற்றமுடையவராயும்; சிலர்பிராமணருக்கும் மேலான ஞானமுடையவராயும் இருக்கையில், இப்போதும் அவர்கட்கு அர்ச்சையை உபாசித்தல் பொருந்துமோ? சரியானமார்க்கத்தை விட்டுத்தவிறுவோர் அதற்குத் தகுந்தஹேதுஉணாக்க மாட்டாவிடில், சிக்ஷைக் குட்படுவாரென்பது லோகப்பிரசித்தம். மிருகங்களைப்போலன்றி மனிதருக்கு, அருள்கடவுளானவர் தமது குணங்களெல்லாவற்றிலும் சிறந்

தும், தமதுசுவரூபகுணமுமாகிய, நேரும் நிகருமற ஞானத்தை யளித்ததில் அவருடையஉத்தேசியம் ன்னவாம்? நாம் அந்த நமதுசக்தி வஞ்சனையன்றி ிருத்திசெய்து கொண்டு, அவருடைய மஹிமையை றிந்துகொண்டு, நமதுஇயல்புக் கடுத்தமார்க் கங்காலும், அவருடைய தகைக்கு இசைந்தவழியாலு ், அவரைத் தொழு தேற்றிக் களிக்கவேண்டுமென் தேயல்லவா? இதுதான் அவர்கருத் தென்பதற்கு நிஸ்ஸந்தேகமான சுருதிப்பிரமாணம் பின்னுலுரைக்கபடும். இத்தன்மையான அவருடைய ஆக்கினையையடிப்பதே நமக்கு நீங்கலாக் கடமையாக விருக்கையில், கொழுத்துச் சோம்பேறித்தனத்தினுல், சக்தியில்லை யென்கிற வியாஜத்தைச் சொல்லிக்கொண்டு திரிவதினுல் நமது உத்தரவாதம் நீங்குமோ? மக்குச் சக்தியை யளித்தகடவுளினிடத்திலே, நமக்நச் சக்தியில்லை யென்று துணிந்துரைப்பதினுல், அவர்நம்மை மன்னிப்பாரோ? கரிப்பில் கூழுக்கும் வழியற்றவன் கொள்ளை யிடுவாஞகில் ஒருவேளை ராஜாங்கத்தார் ஆவசியகத்தை யோசித்து அவனை மன்னிப்பார்க ளாகிலும்; புஷ்களமான காலத்தில் செல்வத்திற் சிறந்த ஒருவன் கொள்ளை யிட்டுவிட்டு, நான் வறியோனென்று வியாஜம் கூறுவாஞகில், துரைத்தனத்தார் அவனை மன்னிப்பார்களா? அல்லது, கொள்ளைக் கொருபங்கும், பொய் வியாஜத்துக்கு ஒருபங்கும் சிக்ஷிப்பார்களா? சோற்றுக்கில்லாத ஒ

ருவன், பசியால் வருந்தும் மற்றொருவனுக்கு அன்ன
மிடாவிடில் கடவுள் மனமிரங்கி மன்னிப்பாராகிலு
ம்; பணத்தின் மீதுறங்குவோன் அவ்வாறு செய்தா
ல் அவனைத்தகுந்தபடி தண்டிப்பாரென்பதில் சந்தே
கமுண்டோ? சக்தியுள்ள பக்ஷத்தில் இதுசரிதான்;
நமக்குப் போதுமான சக்தியில்லையே யென்றாலோ,
அதைச்சற்று ஆராய்ந்துபார்ப்போம். சாதாரணசிரம
த்தாலும் சாதாரணமனிதர்களும்கடினமானசாஸ்திர
ங்களெல்லாம் கற்கவும், கண்ணுக்கெட்டாதவிஷயங்
களைக்குறித்து அதிநுட்பமாகவாதிக்கவும், அநேகவரு
ஷங்களுக்குப்பிறகு சூரியசந்திராதிகிரகங்களுக்கு ச
சம்பவிக்கத்தக்க கிரஹணாதி உத்பாதங்களை கணிதச
ஹாயத்தால்கணிக்கவும், வெகுகாலத்துக்குமுன் நடந்
தவிஷயங்களை அநுமானத்தால் அறிந்து கொள்ளவு
ம், திறமுடைய நம்மவருக்கு உள்ளும்வெளியும் இரவு
ம் பகலும் ஒளிந்திருந்து சிந்தையும் சாதனமுமின்றி
வேலையும் ஓய்வுமற்று, சர்வக்கிய னென்போர் மன
துக்கு மெட்டாதவிசித்திர விந்தைகளை இடைவிடா
து விளைக்கின்ற, ஞானாநந்த சுவரூபியான பரமாத்
மாவின் இருப்பையும், அவருடைய அநந்தகல்யாண
குணங்களையும் ஒருவாறேனும் அறிந்து ஆநந்திக்கச்
சக்தியிராதென்பது யுக்திக்குப் பொருந்துமோ? நம
து இந்திரியங்களுள் சர்வசிரேஷ்டமானதாகிய மன
தினாலே அவரை யேகதேசமாவது அறியக்கூடா
தெனில் பின்னும், பக்கமும் பார்க்கத் திறமற்ற

ண்களைக்கொண்டு அதி சாமானியமான புற்று
ாடு முதலிய அசேதந பதார்த்தங்களுக்குரிய ச
கியுமற்ற சிலாமயமானவும், லோஹமயமானவும்
ரதிமைகளைக் காண்பதினால் பரப்பிரும்ம விஷய
ாக நமக்கு என்ன ஞான முண்டாகும்? நமது
ந்திரியங்களுக்குள் மெய், வாய், இவ்விரண்டும் ப
ார்த்தங்களைத் தீண்டும் வரையில் உணரமாட்டா
ாகையால், அவற்றின் சக்தி வெகு அல்பமானதெ
றும்; மூக்குச்செவிகள் சற்றுதூரத்திலுள்ள வற்
றையும் உணருமாகையால் அவ்வை மெய்வாய்களைக்
ாட்டிலும் மேலானவை யென்றும்; பின்னும் பக்க
ம்பார்க்கமாட்டாதெனிலும் கண் எதிரே தடையில்
ாதவரையில் காணுமாகையால் மற்ற இந்திரியங்
ளைவிட இதுசர்வசிரேஷ்டமானதாகிலும், மனதிற்
த்தாழ்ந்ததேயென்றும்; ஏனெனில் கண்டதையும்
ாணாத்தையும், கடந்ததையும், வருவதையும், அறிவ
மன தொன்றே யாகையாலும், அதில்லாமல் மற்
இந்திரியங்களால் ஒருபயனும் கிடையாதாகையா
ும், கடவுளால் நமக்களிக்கப்பட்டபேறுகளில் மன
ற்குஞ் சிறந்தது வேறொன்றுமில்லை யென்றும்; அ
ியாதவர் நமது தேசத்தில் கற்றோரிலாவது கல்
ாரிலாவது யாராவது உண்டோ? இப்படிக்கிருந்து
, பின்பு வரும் சுருதிவாக்கியங்களில் அதீந்திரிய
ானதென்று முறையிடப்பட்டிருக்கிற பரப்பிரு
மத்தை சர்வசிரேஷ்டமான மனதினால் எட்டி

முடியாதாகையால், பரமசௌந்தரியத்துக்கு உ
பமானமாக ஸ்ரூபதமனைக் காட்டுவதுபோல, ப
ரப்பிரும்மத்துக்குப் பிரதிநிதியாக ஞானமும் ஜீ
வனு மற்ற பிரதிமையைக் கண்களால் கண்
டே அறிந்து கொள்ள வேண்டுமென்பதைச் ச
ற்று யோசிப்போமாயின், அது அமிருதத்தின் ருசி
யைஅறிய விரும்புவோனுக்கு விஷத்தைக் கொடுத்து
க்காட்டுவது போலும்; அதிதூரதேசம் போக வே
ண்டியவனுக்கு ரெயில்வண்டியுதவாது,கட்டைவண்டி
யேஉதவு மென்பதுபோலும் இருக்கிறது. அன்றிய
ம், கடவுளானவர் நமது இந்திரியங்களில் ஒவ்வொன்
றுக்கும்உரித்தானதொழிலையும்சக்தியையுமளித்திருக்
கிறாரென்பதும், ஒரு இந்திரியத்தாலாக வேண்டிய
காரியம் மற்றொன்றாலாகமாட்டாதென்பதும், அனை
வர்க்குந் தெரிந்தவிஷயம். பதார்த்தங்களின் உருசி
யை, வாய் ஒன்றுதவிர மற்றஇந்திரியங்களால் அறி
யக்கூடுமென்றும்; கண்தவிர மற்றஇந்திரியங்களால்
உருவத்தையறியக்கூடுமென்றும்; காதுதவிரமற்றஇந்
திரியங்களால்ஓசையைஅறியக்கூடுமென்றும்;யாராவ
து சாதிப்பார்களாகில் அப்போதுஅதீந்திரியமும், மன
திற்குமாத்திரம்விஷயமுமாகிய பரப்பிரும்மத்தைக்க
ண்வாய் மூக்குச்செவிகளால்உணரக்கூடுமென்று ஒத்
துக்கொள்வோம். பிரகிருதத்தில் இயற்கைக்கும்,கட
வுளின்அமைப்புக்கும், விரோதமானகொள்கைமனதி
ற்குஒப்பவில்லை.விக்கிரகஆராதனத்தைச்செய்வோம்.

ல் விக்கிரகங்களுக்குப்போட்டிருக்கும்சிறந்த ஆடை
ணிகளாலும், சுட்டழகியதாசிகளாலும், விசித்திர
ானபாண மத்தாப்பு தீவிட்டிகளாலும், நமது கண்
ளுக்கும்; விநோதமான வாத்தியங்களால் காதுக
ளுக்கும்; புஷ்பசந்தநாதி வாசனைத்திரவியங்களால்
மூக்குக்கும்; பக்ஷியபணியாரங்களால் நாக்குக்கும்;
பெண்பெண்களுடன் உறைவதினால்மெய்க்குமொருவித
இன்பம் சிலருக்குண்டாகலா மாகிலும், அதினால் ம
னதிற்கு என்னஉண்மையான ஆநந்தமுண்டாகுமோ
தெரிந்ததன்று. இவற்றைக்காட்டிலும், வேறுஆநந்த
உண்மையாகவே அவ்விடத்திலுண்டெனில், இவற்
ற யேன்அவலம் பிக்கவேண்டும்.

இதினால் மனிதருக்கிசையாத குச்சிதமான ஆ
ந்தமும் மூடபக்தியும் தவிர வேறொன்றும் ஜனி
கிறதில்லை யென்பதற்கு நிர்விவாதமான ஒருதிரு
ஷ்டாந்த மிருக்கிறது. விக்கிரகங்களைப் பிரதிஷ்டை
சய்த லென்பதற்கு, சிலாமயமானவும், லோகமய
மானவும், பிம்பங்களில் பிரும்மத்தை ஆவாகனம்
சய்த லென்பதே பொருளல்லவா? விக்கிரகங்களு
குப் பலவிதப் பெயர்களையிட்ட போதிலும், அவற்
ல் ஆவாகனம் செய்வதாய்ச்சொல்லும் பிரும்மம்
ன்றேயல்லவா? சாதாரணமான கோயில்களிலுள்
விக்கிரகங்களைக் காட்டிலும், செல்வத்தில் மிகுந்
கோயில்களிலுள்ள விக்கிரகங்களில் அதிக பிரும்ம
ஆரோபிக்க ப்பட்டிருக்கிற தென்று சொல்லப்

பொருந்துமோ ? இல்லெனில் வீட்டிற் சருகிலுள்ள ஏழ்மையான கோயில்களில் ஒருக்காலும் நுழையாமல் வெகுபொருள் செலவு செய்தும், தூரதேச யாத்திரைகள் செய்தும் நம்மவர் பணக்கார கோயில்களைத் தேடிச்செல்வதற்க்குக் காரணமென்னவாம். ஒருவிக்கிரகத்தில் ஆரோபிக்கப்பட்டிருக்கிற பிரும்மத்தின் அபிமானத்தால், மற்றொரு கோயில் விக்கிரகத்திலுள்ள பிரும்மத்துக்கு மஹிமையுண்டாவதாகமதித்து, நம்மவர் காஞ்சீபுரம்முதலிய பிரபலமான கோயில்களிலுள்ளவிக்கிரகங்களைத் தங்கள்தங்கள் ஊர்களின்கோயில்களுக்கு வரவழைப்பதைஅறியாதவர் வெகுசிலர்.இதுமாத்திரமேயல்ல,வெகுபணம்செலவழித்து, நாட்டுப்புரங்களில் வைக்கப்பட்டிருக்கும் விக்கிரகங்களை அதற்காக முடிந்து வைக்கப்பட்டிருக்கிற நியமப்படிக்குப் பிரதிஷ்டை செய்தபிறகும், சடைசியாக ஒருபணக்கார விக்கிரகத்தின் சடகோப முத்திரையாவது கொண்டு அதின் தலையில் வைக்காதவரையில் அதற்கு நிவேதனம் செய்த பதார்த்தங்களை தூரஸ்திரீகளுண்ட சேஷம் போல ஒதுக்கி வைப்பதும் எவ்வித நியாயத்தைப்பற்றியோ தெரியாது. இதெல்லாம் சாதாரணபாமர ஜனங்கள் மாத்திரமேயன்றி வெகு பேர்க்கு கதியளிப்பதாய்க் கூறும், பாண்டித்திய முள்ள ஞானிகளும் இவ்வாறே செய்கிறார்களென்பது அனைவர்க்குந்தெரிந்த விஷயம். இவ்விதமாக சாதாரண ஞானத்துக்காவது பக்திக்கா

து உதவாமல், அதிஹேயமானவும் கேவலம் துவே ஷத்துக்கு ஹேதுவானவும் இந்தமார்க்கம் பிரகிரு தத்திலுள்ள சூத்திரர்களுக்கே இசையாதெனில், பி ராம்மண ரென்று பெயரிட்டுக்கொண் டிருப்பவருக் கு இது எப்படி ஸாதுவான மார்க்கமாகும்? மேற்கூ றிய சுலோகத்தினுல் அர்ச்சையென்பதுசூத்திரர்கள் விஷயத்தில் மாத்திரம் ஆதியில் உத்தேசிக்கப்பட் டதாய் ஏற்படுகிற தென்று நாங்கள் கூறுவது சரி யான பொருளாவென்று சிலர் ஆக்ஷேபிக்கலாமா கையால், ஆதிமுதல் பிராம்மணுதி வர்ணத்திரயங்க ளில் நடந்தேறிவரும் ஆசாரங்களில் முக்கியமான வற்றைக் கொண்டு அதின் கருத்தை யோசிக்க வே ண்டிய தாகிறது. "தினந்தோறும் ஸந்தியாவந்தனம் செய்"* என்னும் விதியைசூத்திரக்காரர் த்விஜர்கள் விஷயமாகவே விதித்தாரென்பது நிர்விவாதமான விஷயம். இந்த ஸந்தியா வந்தனத்தின் சுவரூ பத்தை விசாரிக்கப் புகுங்கால், நவீனமாய் அதில் வந்தேறிய சிலதியான சிலோகங்கள் தவிர மற்ற அ தின் எந்தபாகமாவது, ஒரு பிரதிமையைப்பற்றிய தாயில்லையென்றும், அதின்பிரதான பாகமாகிய கா யத்திரியென்பது கேவலம் பரப்பிரும்ம பரமே யெ ன்றும், பிராணுயாமாதி பாகங்களால் நமதுகண் வா ய் மூக்குச்செவிகளின் வியாபாரத்தை யடைக்கிவிட்

---

* அஹரஹஸ்ஸந்த்யாமுபாஸீத.

டுப் பரப்பிரும்மவிஷயமாகத் தியானம்செய்யவேண்டிய தாய்ஏற்படுகிற தென்றும், தானாய்விளங்கும். மேற்கூறியசுலோகத்தில் "த்விஜர்களுக்குத்தெய்வம் அக்கினியில்" என்றுரைத்திருக்கிறதே. அக்கினியின்சகாயமே யன்றி செய்யப்படும் ஸந்தியாவந்தனத்துக்கும் அதற்கும் என்ன சம்மந்தமென்று கேட்கும் பக்ஷத்தில் அதைச்சற்றுகாட்டுகிறோம். காயத்திரிக்குப் பூர்வாங்கமாகச் செய்யும் கர்மங்களில் "சூரியனாகிய அக்கினியில் ஹோமம் செய்கிறேன" * என்றும்; "சத்தியமாகிய அக்கினியில்ஹோமம் செய்கிறேன்" † என்றும்; இந்தஸந்தியாவந்தனத்தையே ஒருஹோமமாகவும், அதற்குச் சூரியனையும், சத்தியத்தையும், அக்கினியாகவும் உத்பிரோக்ஷித்திருக்கிற தல்லவா? இதையெல்லாம் அனுசரித்தே "த்விஜர்களுக்குத் தெய்வம் அக்கினியில்" என்று ஏற்பாடு செய்யப்பட்டதென்பதில் சிறிதளவும் சந்தேகமுண்டோ? விவேகிகள் ஒருவனுக்கு ஒருகாரியத்தை விதிப்பார்களெனில் அது செய்யக் கூடியதாகவே யிருக்குமென்பது நியாயமான அனுமானமாகும். அவர்கள் பல் முளையாக் குழந்தையைப் பார்த்து பாறையைத் தூக்கும்படி வி

---

* ஸூர்யே ஜ்யோதிஷி ஜுஹோமி ஸ்வாஹா.

† ஸத்யே ஜ்யோதிஷி ஜுஹோமி ஸ்வாஹா.

ப்பார்களெனப் பொருந்துமோ? அப்படியாயின் அ
ர்களிடத்தில் விவேகமிருப்பதாய் எப்படி கொள்
ளக்கூடும்? ஆகையால் அவர்கள்உண்மையாக வேவி
வகிக ளாகில், சாத்தியமான தொழில்களை விதிப்
பார்களேயன்றி அசாத்தியமான காரியத்தை விதிக்
மாட்டார்க ளென்பது சகஜமாய் ஏற்படுகிறதல்ல
வா? பிராம்மணருக்குள் காலதேச வர்த்தமானங்க
ளுக்கு அனுகுணமாக செய்யவாவது விடவாவது கூ
டிய ஐச்சிகமான கர்மங்கள் பலவுள வெனிலும், உ
பநயனம் செய்துகொண்டு த்விஜத்துவத்தை யடை
ந்த ஒவ்வொருவருக்கும் "தினந்தோறும் ஸந்தி
யாவந்தனம் செய்" என்கிற விதிமாத்திரம் நீங்கலா
ந்தலைச்சுமையாக விருக்கிற தென்பதில் சந்தேகமி
ல்லையே? இப்படி சார்வத் திரிகமாக வந்த இந்தவிதி
யினுல், த்விஜர்களில் ஒவ்வொரு வருக்கும் தியானி
க்கச்சக்தி யிருக்கிறதென்றும், இருக்கவேண்டிய தெ
ன்றும்; அப்படிசக்தி யில்லாதவர் தியா னிக்கக்கூ
டாதாகையால், அவர்களுக்கு ஸந்தியா வந்தனம்
செய்ய முடியா தென்றும்; ஸந்தியாவந்தனம் செய்
யாதவர் த்விஜர்களாக மாட்டார்க ளென்றும் ஸ்ப
ஷ்டமா யேற்படுகிற தல்லவா? ஒருவன் ஸந்தியாவ
ந்தனம் செய்ய சக்தனுயாவது அசக்தனுயாவது இ
ருக்க வேண்டுமே யன்றி மூன்ரும் வழியில்லை. அவ
னுக்குச் சக்தி யிருக்கு மாகில், சகலராலும் உத்கிரு
ஷ்டமான தென்று ஒத்துக்கொள்ளப் பட்டிருக்கிற

தியானமார்க்கம் சாத்திய மாகையால, அர்ச்சையெ
ன்பது அவனுக்கு அனுவசியக மென்னும் வரையில்
ஸ்பஷ்டமாகிறதல்லவா? இவ்வளவேயன்றி அதில்
பிரத்தியவாயமும் உண்டென்பது பின்னால் நிரூபித்
துக் காட்டப்படும். அப்படிக் கன்றி அவன் தியான
ம் செய்ய உண்மையாய் அசக்தனேயாகில், அவன் அ
ர்ச்சையை மாத்திரமே யன்றி, அதிலும் ஹேயமா
ன மார்க்கத்தையும் அனுசரித்தாலும் அவனைநிந்திப்
போரில்லை. ஆகிலும் அவன் பிராம்மணனென்கிற
பெயரை வஹித்துக்கொள்ள என்னஅதிகார முண்
டென்று மாத்திரம் கேட்க வேண்டிய தாவசியகமா
கிறது. தியானம் செய்யச்சக்தியற்றவன் பிராம்மண
னாகக்கூடுமாகில், முடவனும் தபால் சுமக்க அர்கனா
வான், ஊமையும் உபநியஸிக்க அதிகாரியாவான். பி
ராம்மணனாயிருக்க அதிகார முள்ளவனும் அர்ச்சை
யைஅனுஷ்டிப்பதினால் நஷ்டமொன்று மில்லையே,
ஃபலிகஹு ஃபலிகஃஹஸு (மிகுதிக்கு மிகுந்தபயன்)
என்கிறபடி யிருவிதப்பயன்களையும் அடையலாமே,
என்று சிலர் வாதிக்கலாம். இந்தஅர்ச்சையை உபாசி
ப்பதினால் மூடர்களுக்காவது ஒருபய னுண்டென்று
ஏற்படும் பக்ஷத்தில் அப்பயனை விவேகிகளும் இஷ்ட
மிருந்தால் அடையட்டுமென்று சொல்லக்கூடும். இ
தினால் விளையும் பயனின்னதென்று யாராவது சொ
ல்லத் துணிவார்களாகில் அப்போது அதைக்குறித்து
யோசிப்பது ஆவசியகமாகும். அதினால் பயனில்லா

விடினும், கெடுதலொன்று மில்லாதபக்ஷத்தில் அதை யேன் அவலம்பிக்கக்கூடாதெனில், அதினால் விளை யும் அளவிலாத் துன்பங்களைக் குறித்து பின்னால் நி ரூபித்துக் காட்டப்படு மாகையால், பிரகிருதத்தில் அதை உதாசீனமாகவே கொண்டபோதிலும், தனக் காவது பிறருக்காவது ஒருபிரயோ ஜனத்தை க்கரு தாமல் ஒருவேலை செய்வோன் பைத்தியக்கார னாயா வது, வேலையற்ற வனாயாவது இருக்கவேண்டுமென உலகத்தார் மதிக்கிறார்களல்லவா! * ஒருவருக்கும் பயனற்ற இத்தொழிலில் அழிக்கும் காலத்தையும் தி ரவியத்தையும் மார்க்காந்தரங்களில் பிரயோகித்தால் தப்பாமல் இம்மைப்பயனாவது மறுமைப்பயனாவது கிடைக்குமல்லவா! இதுநிற்க யூரோபு, ஏஷியா, ஆபி ரிகா, அமெரிகா, முதலிய கண்டங்களிலுள்ள அநந் த தேசங்களில், நமது தேசமொன்று தவிர மற்றெ ல்லாவற்றிலும் பண்டிதர் பாமரர்சகலரும் அர்ச்சை யென்பதையே அறியாமல் கேவலம் தியானமார்க்க த்தால் பேறு பெறுகிறார்க ளென்பதையும், நமது தேச மொன்றில் மாத்திரமே கற்றோர் கல்லாரனைவ ரும் அர்ச்சையைக் கட்டிக்கொண்டு திரிகிறார்களெ ன்பதையும், இந்த அர்ச்சைக்குக் காரணம் கேவலம் அக்ஞானமே யென்றும் மேற்கண்ட சுலோகத்தில்

---

* [Grantha script footnote, illegible] வ.க-ு.கு.

உரைத்திருப்பதையும் சற்றுயோசித்தால், நமதுதே சத்துப் பண்டிதரைக் காட்டிலும், அன்னியதேசத் துப் பாமரரும் அறிவில் தெளிந்தவரென்றும், மே லானவரென்றும், சொல்ல வேண்டியிருக்கு மல்ல வா? இது உண்மைக்குப் பொருந்துமோ? அன்னிய தேசத்துப் பண்டிதர்களுக்குச் சமமானவும் மேலா னவும் பண்டிதர்நமது தேசத்திலுமுள ரென்பதில் சந்தேக முண்டோ? அப்படி யிருக்க நம்மிலும் தாழ் ந்த வருக்கும் சாத்தியமானவும் உத்தமமானவும் தி யானமார்க்கத்தைவிட்டு, ஹேயமானஅர்ச்சையை அ வலம்பிப்பானேன். அன்னிய தேசத்தாருக்கும் மோ க்ஷாதி பதவிகளுண்டோ வென்று ஆக்ஷேபிக்கத்தக் க சிலபெரியவர்கள் நம்மிலிருப்பார்களாகையால் அ வர்கள் திருப்தியின் பொருட்டு அதைச்சற்று யோசி க்க வேண்டியது. கடவுளின் ஆக்கியையைத்தவிருத வர் இத்தேசத்தில் பிறந்தாலும், வேறு நாட்டிலுதித் தாலும், நமது மதத்தி லிருந்தாலும், அன்னியமதத் திற் புகுந்தாலும், வர்ணாசிரம தர்மங்களை வகித்தா லும் ஒழித்தாலும் நற்கதி யடைவா ரென்பதில் தி னையளவும் சந்தேகமில்லை. அவராக்கியை யாவதென் ன வெனில் மனிதர் மனுஷிய தர்மத்தை அவலம்பிக் க வேண்டு மென்பதேயாம். மனுஷியதர்ம மென்பது சாமானிய தர்மமென்றும் விசேஷதர்மமென்றும் இ ருவகைப்படும். இவற்றுள் சாமானிய தர்மம் சகலதே சத்தாருக்கும் பொதுவாயுள்ள நீதியாகும். விசேஷ

ா்மமென்பது அந்தந்ததேசத்தாரால் லவுகீகநிமித்த மாகச் செய்து கொள்ளப்பட்ட சங்கேதமாகும். இந் த சாமான்னிய தர்மங்கள் எல்லோராலும் அறியக்கூ டாத வெகுகடினமானவை யென்று மலைக்கவேண் டாம். அருள்கடவுளானவர் மனிதருக்கு அத்தியாவ சியகமான், காற்று, ஒளி, ஆகாசம் முதலிய பொரு ள்களை அபரிமிதமாய்ப் படைத்து, அனைவரும் பிர யாசையின்றி அடையும்படி அமைத்த வாறே, மானி -இயல்புக்கு இன்றி யமையாக்கருவியாகிய சாமா னியதர்ம ஞானத்தைச் சகலரும் வெகுஎளிதாய் அ றிந்து கொள்ளும் பொருட்டு, அதையெல்லாம் திர ட்டிச்சுருக்கி "நன்மைசெய் தீமைமற" என்கிற இர ண்டு வாக்கியங்களிலடக்கி ஒவ்வொருவர் ஹிருதயத் திலும் பதித்து வைத்திருக்கிறார். களவும் கொலையும் குற்றமென்றும், சத்தியமும் கருணையும்நன்மையென் றும், அறியாதபிராணி யிவ்வுலகிலுண்டோ? இவ்வாக் கியம் சிறிதாயிருக்கினும், இதிலடங்கிய பொருள் வெ குவாயிருக்கிறதே; அதை நிறைவேற்ற அனைவருக்கும் முடியுமோ; என்று சங்கிக்கவேண்டாம். சத்தியம், நியாயம், கருணை, இம்மூன்றையும் தவிறாமல் காத்து நடப்போமாகில், நாம் நமக்குரிய சாமானியதர்மங் களைச் செலுத்தினவ ராவோம். வர்ணாசிரமாதி தர்ம ங்கள் நமது நாட்டிற்குரிய விசேஷ தர்மங்களாம். நமது தேசத்திலுள்ள மிலெச்சர்களிலும்நாம் வேறெ ன்று குறிக்க குடுமியும், புண்டிரமும்; பிறகுநமக்குள்

சூத்திரருக்கும் த்விஜருக்கும் பேதத்தை விளக்க பூ
ணூலும்; த்விஜர்களுக்குள் சைவர்களினின்றும் வை
ஷ்ணவர்களைப் பிரித்துக்காட்ட ஊர்த்துவபுண்டிரமு
ம், சங்க சக்கிராங்கிதமும்; த்வைதிகளினின்றும் வி
சிஷ்டாத்துவைதிகளைத் தனித்துக் காட்ட சுவேதமி
ருத்தும், அவர்களுள் தென்கலையினின்றும், வடகலெ
யைப் பிரித்து விளக்கப் பாதமில்லாமையும்; வடகலெ
யாருள் முனித்திரயத்தாருக்கும் மடத்தாருக்கும்பே
தத்தை விளக்க, புஜத்திலுள்ள குறுநாமமும்; இன்
னுமிவ்வாறே தொன்று தொட்டு முடிவற்ற அவாந்த
ரவியவஸ்தைகள் ஏற்பட்டு வருவதைச் சற்று கவனி
ப்போமாயின், சீமையிலிருந்து கப்பலில் ஏற்றப்படு
ம் சரக்குகளின் மேல் விலாசத்துக்காகப் போட்டப
ட்ட முத்திரையைக்காட்டிலும் இவைவேறல்லவென்
றுதாமாய் விளங்கும். இவ்விதமுத்திரைகளில்லாவிடி
ல் நமக்குள் ஒருவர்மற்றொருவருடைய வியவஸ்தைக
ளை யறிந்துகொள்வதரிதெனினும், சர்வக்ஞராகிய
பரப்பிரும்மம் இந்த விலாசங்களைப்பார்த்து மோக்ஷ
த்துக்குத் தாக்கீது கொடுக்கிறதில்லையென்றும், சுகிரு
தமென்னும் விலாசமுடையவரை மோக்ஷத்துக்கும்
துஷ்கிருதமென்னும் முத்திரை யுடையவரை நரகத்
திற்கும் போகும்படி நியமிக்கிறானென்றும்; விசேஷ
தர்மங்களைப்பற்றிய சாதகபாதகங்கள் கேவலம் லௌ
கிகமானவையென்றும்; சாமானிய தர்மங்களால் வி
ளையும் பயன்கள் மாத்திரமே நாம் செல்லுமிடமெ

ல்லாம் தொடர்ந்து வருமென்றும்; ஏற்படுகிறது. இ
படிக்கில்லெனில் ஒருவன் விசேஷதர்மங்களை நன்
றாய்க் கவனிக்காமல் பிறந்தது முதல் இறக்கும்வரை
யும், சிந்தையிலும் செய்கையிலும் தீமையைத்துறந்
து நன்மையை ஆசரித்தபோதிலும், அவனுக்கு சுதி
மோக்ஷமில்லையென்றும்; மற்றொருவன் கேவலம்
ஸாங்கேதிக கர்மங்களை மாத்திரம் செய்தானாகில், அ
வன் கனவிலும் தர்மத்தை ஸ்மரிக்காமல், அநந்த
கொலைகளும், அளவிலாக் கொள்ளைகளும், அலகிலா
அஸத்தியமும் செய்தாலும் அவனுக்குத் தப்பாமல்
மோக்ஷம் கிடைக்குமென்றும் சொல்லவேண்டியதா
க நேரிடுமல்லவா? இந்த ஹாஸ்யமான விஷயத்துக்
கும் நம்மசம்பிரதாயக் கிரந்தங்களில் பிரமா
ணம் கிடைப்பது அருமையன்று. * "மச்சியமா
"ம் சங்களுண்டு, மத்தியபானமும் செய்து, முத்
"திரையைதரித்து, மைதுனமே தொழிலென்றிருந்
"தலாகியஇந்த ஐந்துமகாரங்களும் மகாபாதகங்களை
"ப்போக்கும்" என்றுபிராணதோஷிணியென்னும் கிர
ந்தத்தில் சொல்லியிருக்கிறதல்லவா! இந்த சுலோக
த்தைக்குறித்து பிரமாணதாரதம்மியவிசாரத்தில்மறு
படியோசிக்கப்படுமாகையால் பிரகிருதத்தில்அதைஇ

---

* "மத்ஸ்யம் மாம்ஸஞ்ச மத்யஞ்ச முத்ராமைது
"னமேவச, மகாரபஞ்சகஞ்சைவ மஹா
பாதகநாசனம்,"

வ்வளவுகுறிப்பிட்டதே போதுமானதாகவிருக்கிறது. இதினால்சாமானியதர்மங்களைத் தவிருதவர்களுக்குவிசேஷதர்மங்களைக்கடப்பதினாலும்பாதகமில்லையென்றும்; சாமானியதர்மங்களைத்தவறினவர்களுக்குவிசேஷதர்மங்களிருந்தும் பயனில்லையென்றும்;ஏற்படுகிறபடியால், கதியடைவோர் நமதுதேசத்தார் மாத்திரமேயன்றிஅன்னியதேசத்தாருக்கு அது சித்திக்காதென்று சொல்வதைவிட பரிகாஸத்துக்கு ஹேதுவாக வேறொன்றும் இராது.

புராணங்களிலும் அர்ச்சையைக் குறித்துத் தனித்துப்பிரஸ்தாபிக்குங்கால் அதை ஒருவாறுசிறப்பித்துச்சொல்லியபோதிலும், இதர உபாசனமார்க்கங்களுடன் அதைஒப்பிடும்போது, அர்ச்சையைக்காட்டிலும் இழிவானமார்க்கம்உலகில் இல்லையென்றுநிந்திக்கப்பட்டிருப்பதாய் அனைவர்க்குந்தெரியும். ஆகிலும் இவ்வுண்மையை அறியாதவர் யாராவதிருந்தால் அவர்கள் திருப்திக்காக இவ்விடத்தில் சில திருஷ்டாந்தங்களை யெடுத்துரைக்கிறோம். ஸ்காந்த புராணத்தில் ஞானயோக கண்டத்தில் நாடி சக்கிராத்தியாயத்தில் * "மூடாத்மாக்கள் தீர்த்தத்திலும், தா "னத்திலும், தபசிலும், யக்கியத்திலும், கட்டையி

* தீர்த்தே தாநே தபோயஜ்ஞே காஷ்டே பாஷாணகேவச, ஶிவம்பஶ்யதி மூடாத்மா ஶிவேதேஹே ப்ரதிஷ்டிதஃ. ஸர்வத்ராவஸ்தி

'லும், கல்லிலும், சிவனிருப்பதாய் நினைக்கிறார்க
'ள். சிவனோ நமக்குள்ளே யிருக்கிறார். ஓ முனி
'யே! ஞானக்கண்ணில்லாமையாலும், மாயையின்
'பலத்தாலு (மல்லவா) எங்கும் வசிக்குஞ் சாந்தமூ
'ர்த்தியாகிய சங்கரனைக் காண்கிறதில்லை. தனக்
'குள்ளேயிருக்கும் சிவனைவிட்டுவிட்டு, சிவன் வெ
'ளியிலிருப்பதாய்ப்பூஜிப்பவன்உள்ளங்கையிலுள்ள
'சோற்றையெறிந்துவிட்டு, புறங்கையை நக்குவான்
'போல. யோகிகள் சிவனை தமக்குள்ளே காண்பா
'ர்களேயன்றி, பிரதிமைகளிற் காணார். அக்கியானி
'களுக்கு பாவனார்த்தம் பிரதிமைகள் செய்யப்பட்
'டிருக்கிறதுகள். பிரும்மம்பூர்வமும் பரமுமற்றது,
'தனக்குள்ளேயுள்ளது, ஸத்தியமானது, இணைய
'ற்றது, ஞானசுவரூபி; அளவற்ற ஆநந்தஸ்வரூபி
'யென்று காண்பவனே கண்ணுடையவன் சர்வபூ

---

தம் ஶாந்தம் நபஶ்யந்தி ஶிவம் ஶங்கரம், ஜ்ஞாநசக்ஷு
விஹீநத்வாந்மாயாபலாந்முநே! ஸ்வா
த்மஸ்தம் ஶிவம் த்யக்த்வா பஹிஷ்டம் யஜதே ஶிவம்,
ஹஸ்தஸ்தம் பிண்டமுத்ஸ்ருஜ்ய லிஹேத் கூர்பரமா
த்மந: ஶிவமாத்மநி பஶ்யந்தி ப்ரதிமாஸு ந
யோகிந:, அஜ்ஞாநாம் பாவநார்த்தாய ப்ரதிமா:
பரிகல்பிதா: அபூர்வமபரம் ப்ரஹ்ம
ஸ்வாத்மாநம் ஸத்யமத்வயம், ப்ரஜ்ஞாநகநமாநந்தம்

"தங்களுக்கும் ஆத்மாவாகவும், பரிசுத்தஞானத்
"தை சரீரமாகவும், சுவந்த ஆத்மாவிலே விளங்கு
"கிறது. அதை வெளியில் காண்கிறேனென்பவன்
"காண்கிறதில்லை" என்று சொல்லியிருக்கிறது.

பாகவதத்தில் மூன்றும்ஸ்கந்தத்தில்இருபத்தொன்பதாவதுஅத்தியாத்தில் * "நான் எப்போதும்சகலபூ"தங்களிலும் ஆத்மசுவரூபமாக விருக்கிறேன். அப்ப"டிப்பட்ட என்னைமனிதன் அவமதித்து, அர்ச்சையாகி"யபரிகாசத்தைச்செய்கிறன். சகலபூதங்களிலும்ஆ"த்மசுவரூபமாயுள்ள ஈசுவரனுகியஎன்னைவிட்டுவிட்"டு, எவன்முட்டாள்தனத்தினுல் அர்ச்சையைத்தொ

---

யஃ பஶ்யதி ஸ பஶ்யதி ஸர்வபூதஸ்தமா
நம் ஸ்வயம்ஜ்ஞாநதேஹிநம், ஆத்மந்யவஸ்
திதம் பாஹ்யே ந பஶ்யதி.

* அஹம் ஸர்வேஷு பூதேஷு பூதாத்மாவஸ்திதஸ்ஸதா, தமவஜ்ஞாய மாம் மர்த்ய: குருதேர்ச்சா விடம்பநம். யோ மாம் ஸர்வேஷு பூதேஷு ஸந்தமாத்மாநமீஶ்வரம், ஹித்வார்ச்சாம் பஜதே மௌட்யாத் பஸ்மந்யேவ ஜுஹோதி ஸ:

ாட்டிலுமுன்னதே பலமானதாகக் கொள்ள
வண்டியதென்று நியாய மறிந்தவர்கள் விதி
திருக்கிறார்கள்" என்று சொல்லியிருக்கிறது.
தயும் அப்பிரமாணமென்று யாராவதுரைப்பா
னென நாங்கள் நினைக்கவில்லை. ஏனெனில் பி
மணருக்குள் பெரும்பான்மையரும் ஆபஸ்தம்
டைய ஸூத்திரத்தையே அனுஷ்டிக்கின்றனர்.
வாறிருந்தும் அவர்சொல்லிய இந்தவாக்கியம்நம்
ண்டிதர்களுக்கு விரோதமாக இருக்கின்றமையா
இவரையும் நம்பண்டிதர்கள் சாதாரண ருஷிக
ஒருவராகமதிக்கிறோமென்பார்களாகிலும் எங்
குச்சம்மதமே.

(சுக) ஜாபாலிஸ்மிருதியில்* "சுருதிக்கும் ஸ்மிரு
க்கும் விரோதமிருக்குமிடங்களில் சுருதியே கவு
வமானப் பிரமாணமாகும். அவற்றுள் விரோதமி
லாதபக்ஷத்தில் சுருதியைப்போலவே ஸ்மிருதி
ம் எப்போதும் அனுஷ்டிக்கத்தக்கதாகும்" என்
சால்லியிருக்கிறது.

(எ0) குல்லூகப் பட்டீயத்தில் † "தர்மத்தை அ
ந்துகொள்ள விருப்பமுள்ளவர்களுக்கு சுருதி

---

* ஶ்ருதிஸ்ம்ருதிவிரோதே து ஶ்ருதிரே
ரீயஸீ, அவிரோதே ஸதா கார்யம் ஸ்மா
ர்தம் வைதிகவத் ஸதா.

† யச்ச ஹாரீதே ந ஶ்ருதம் தர்மம் ...

"யே ஸர்வ சிரேஷ்டமான பிரமாணமாகும். இ
"த சிரைஷ்டியவிளக்கத்தால் சுருதிக்கு விரோ
"தமான ஸ்மிருதியின் பொருள் ஆதரிக்கத் தக்க
ன்று" என்று சொல்லியிருக்கிறது.

(எக) மனுஸ்மிருதி இரண்டாவதத்தியாத்தில் *
"சுருதிஸ்மிருதிகளில் விதித்திருக்கும் தர்மங்களை
"னுஷ்டிக்கின்ற மனிதன் இம்மையில் கீர்த்தியையும்
"மறுமையில் ஒப்பற்றசுகத்தையும் அடைவான். ச
"ருதியென்பது வேதமென்றறிக. தர்மசாஸ்தி
"மென்பது ஸ்மிருதியே; சகலதர்மங்களுமவற்
"னின்றே வெளியானபடியால் ஒழுங்கற்றவாத
"களால் அவற்றை யாக்ஷேபிக்கக்கூடாது. எந்த
"விஜனுவது அப்பிரமாணமான நூல்களைப்பற்றி
"கொண்டு மேற்சொல்லிய விரண்டு மூலங்களை ம

---

ராணம் ஶ்ருதி:; ப்ரத்யக்ஷமேவாயமேநவஶ்ரு
தி ஸ்ம்ருதிவிரோதே ஸ்ம்ருதேரநா
ணீயம்.

* ஶ்ருதி ஸ்ம்ருத்யுதிதம் தர்மமனுதிஷ்டன்
மாநவ:, இஹ கீர்த்திமவாப்னோதி ப்ரேத்ய
நுத்தமம் ஸுகம். ஶ்ருதிஸ்து வேதோ வி
யோ, தர்மஶாஸ்த்ரம் து வை ஸ்ம்ருதி:; தே
வார்த்தேஷ்வமீமாம்ஸ்யே தாப்யாம் தர்மோ

காமல் போவானாகில் அவனைப் பெரியோர்கள்
ாஸ்திகனென்றும் வேதநிந்தகனென்றும் ஒதுக்கி
வைக்கவேண்டியது” என்று சொல்லியிருக்கிறது
த மனுவானவர் ஸகல ஸ்மர்த்தாக்களினும், சி
ஷ்டரானவென்றும், தர்மயுகமென்று நம்மவரால்
ாள்ளப்பட்டிருக்கிற கிருதயுகத்துக்கே இவர்வி
ள் சர்வ சிரேஷ்டமான பிரமாணமாகவிருந்த
ன்றும் நிரூபிக்க பராசரருடையவும் ஆபஸ்தம்
டையவும் வாக்கியங்களை இவ்விடத்தில் உதஹ
கிறோம்.

(எ௨) பராசரஸ்மிருதியில் * “கிருதயுகத்துக்கு
னுஸ்மிருதியும், திரேதாயுகத்துக்கு கவுதமஸ்மிரு
யும், த்வாபரயுகத்துக்கு சங்கஸ்மிருதியும், லிகி
ஸ்மிருதியும், கலியுகத்துக்கு பராசரஸ்மிருதியும்
ரமாணங்களாகும்” என்று சொல்லியிருக்கிறது
தானஸ்மிருதிகள்-க௮ உபஸ்மிருதிகள்-க௮ ஆக
-ஸ்மிருதிகளிருப்பதாய் நம்மவர் கொண்டிருந்த

---

[illegible]
[illegible]
[illegible]

* [illegible]
[illegible]
[illegible]

போதிலும் காலபேதங்களைப் பற்றியாவதுஇந்த ஐ
ந்துதவிர மற்ற ஸ்மிருதிகளே தர்மப்பிரமாணமல்ல
வென்று இந்தவாக்கியத்தால் ஏற்படுகையில், புரா
ணுகமாதிகளிருக்கவேண்டிய இடம் இன்னதென்
தானுய்விளங்கும். இந்த சுலோகத்தில் மனுவிற்கு
அளித்திருக்கும் ஸ்தானத்திஞலே அதிற்குறித்தம
றநான்கு ஸ்மிருதிகளைக்காட்டிலும் மனு தர்மசா
திரமே சிறந்ததென்று துவனித்தபோதிலும் அவ்
ஷயத்தில் ஒரு ஸ்பஷ்டமானப் பிரமாணத்தையு
உரைக்கிருேம்.

(எரு) ஆபஸ்தம்பஸ்மிருதியில் * "வேதார்த்தங்
"ளைத்திரட்டியுரைத்ததிஞல் மனுஸ்மிருதிக்குப்பி
"தானியம். ஆகையால் மனுவின் விதிக்கு விரோத
"க எந்தஸ்மிருதி யிருக்கிறதோ அது பிரமாணம
"மாட்டாது" என்று சொல்லியிருக்கிறது. இதிஞ
மனுஸ்மிருதி யொன்றுதவிர மற்ற ஸ்மிருதிகளெல்
ம் அந்தந்தகாலதேசவர்த்தமானங்களுக்கு அனுகு
மான கேவலம் ஸாங்கேதிகவிதிகளைச்சொல்லியி
கின்றனவேயன்றி வேதத்தின் பொருளை யுரைக்க
லையென்றும், ஆகையால் சுருதிக்கும் மனுதர்மசா
ரத்துக்கும் விரோதமாகவுள்ளமற்றஎந்தஸ்மிருதிக

* வெஜாமெயொவ நிவஷநூாக, ஒ
யாநூஜு உரொஷூதம். உஙுயாவிவரீ
தா யாவூரதி ஸாநஶஸு தெ.

பிரமாணமல்லவென்றும் ஏற்படுகிறபடியால், மற்ற பண்டாரப்பாட்டின்கதி யின்னதென்று விசாரிக்கவு வேண்டுமோ. கடைசியாக இந்த மனுஸ்மிருதியும் ப ம்பாட்டை சற்று கவனிக்கவேண்டியது.

(எச) மீமாம்ஸாசாஸ்திரத்தில் ஜய்மினியென்னு ருஷியானவர் * "ஸ்மிருதிசுருதிக்குவிரோதமாகு போது அந்தஸ்மிருதிக்குவேதத்தில் ஆதாரமிருக் குமென்கிற அனுமானம்போய்விடுகிறது. சுருதிக்கு விரோதமானஸ்மிருதிவாக்கியத்தை அபேக்ஷிக்கவு ம்கூடாது; பிரமாணமாகக்கொள்ளவும்கூடாது; ஆ ரிக்கவும்கூடாது" என்றுநிஷேதித்திருக்கிறது. இ நிஷேதத்தால் சுருதிக்குவிரோதமானபோதுமனு ஸ்மிருதிகூடமற்ற ஸ்மிருதிகளோடுமிதக்கவேண்டிய தென்றுஏற்படுகிறபடியால், பழயதென்றுசொல்லப்ப டகவுரவமொன்றுதவிரவேறொருகவுரவமுமில்லாத ஞானிகள் தாங்களும்பிரமாணமென்று தலையை டுக்கூடுமோ? வேதத்தின்கதியும்இவ்வாறேயென் லைக்கவேண்டாம். அதில்ஒருஎழுத்தையாவதுநாள ரையில் வைதிகமதத்தாரில் யாராவது பூர்வபக்ஷ

* விரோதெத்வநபெக்ஷ்யம்ஸ்யாத், அ திஹ்யநுமாநம். ஶ்ருதிவிரோதெ ஸ்ம்ருதி க்யம் அநபெக்ஷ்யம் அப்ரமாணம் அநாத பம்.

ம்செய்ததுமில்லை; செய்யஅதிகாரமுமில்லை. பிரதான
மானவிஷயங்கள் ஒன்றிலேனும் வேதத்துக்குள் பூர்
வோத்தரவிரோதம் கிடைக்கமாட்டாது. அப்பிரதா
னமாகிய கர்மவிஷயங்களில் அபூர்வமாய் எவ்வி
டத்திலாவது இரண்டுவிதமாய் உரைத்திருக்கும்பக்ஷ
த்தில் அவ்விரண்டையும் ஸமகவுரவப்பிரமாணங்க
ளாக மதிக்கவேண்டுமேயன்றி அவற்றி லொன்றை
யாவது அப்பிரமாணமென்று நீக்கிவைக்க ஒருவ
க்குமதிகாரமில்லை. இதற்காதாரமாக விரண்டொ
ப் பிரமாணங்களை யுரைக்கிறோம்.

(எரு.) மனுஸ்மிருதி இரண்டாம் அத்தியாயத்
தில், * "சுருதியில் எவ்விடத்திலாவது இருகக்ஷி
"ட்டால் அவ்விடத்தில் அவ்விரண்டும் தர்மப்பி
"மாணங்களாகும். ஏனெனில் அவ்விரண்டும் கிரா
"யமேயென்றும், ஸமரஸப்படுத்தச்கூடுமென்றும்
"ன்றோருரைத்திருக்கின்றனர்." என்றுசொல்லி
க்கிறது.

(எசா.) குல்லூகபட்டீயத்தில் † "எப்போது வே
"த்துக்குள்ளே பரஸ்பரவிரோதமானபொருள்கள்

---

* ஶ்ருதித்வெஷயஂ யத்ர ஸ்யாத
த்ர ய௦ர்மா வுஹஉஸ்ம்ருதௌ, உஹாவபிஹி
யஉள ஸம்யகுஉகீஷிணீ:.

† யதாவஂ ஶ்ருதிதா வேவி

ளங்குகின்றனவோ அப்போது அவ்விரண்டும் தர்ம
மப்பிரமாணங்களேயாம்." என்று சொல்லியிருக்
கிறது. கடைசியாக இந்தப்பொது விசாரத்தை முடி
க்குமுன் இதன்முதலத்தியாயக்கடைசியில் குறித்தி
ருக்கிற உ - ௩ - ச - இந்தப்பிரமாணங்களையும் இத
ற்குச் சம்மந்தமாக ஒட்டி ஆலோசிக்கவேண்டியதெ
ன எச்சரிக்கிறோம்.

இனி இந்தப்பிரமாணங்களைத் தனித்துவிசாரிக்
கத்தொடங்கையில் சுருதிமுழுமையும்எங்கள்பக்ஷமா
கவே இருக்கிறதென்றும்; நமது பண்டிதர்களுக்கு ஒ
ருப்பிரமாணமாவது கிடைக்கமாட்டாதென்றும்; மு
தலத்தியாயத்திலேயே குறிப்பிடப் பட்டதல்லவா?
பட்டியமானமாயுள்ள சுருதியில் அர்ச்சைக்குப் பி
ரமாணம் கிடையாதென்பதை ஒத்துக்கொண்டு லு
ப்தமாகிவிட்டபாகத்தில் ஒருவேளை அதற்கு ஆதார
மிருக்கலாமென்று அவர்கள் உரைப்பார்கள். இதைக்
குறித்தும் முன் சிலப் பிரஸ்தாபங்கள் வந்திருந்த
போதிலும் அவ்விதமான கொள்கை நியாய சாஸ்திர
ங்களுக்கு ஒத்திரா தென்பதற்கு ஒரு பிரமாணம் இ
வ்விடத்திற் கூறுகிறோம்.

(எஎ.) குல்லூகபட்டீயத்தில் மனுஸ்மிருதிக்குப்

---

௨௦ வாஷ வி—ஜாய—வ திவோஃ ந௦, த
து ஆவஷியகேஎ.

பிராதான்னியம் கல்பிக்கும்போது *"ஸர்வக்கியரா
"கிய மனுபட்டியமானமாயுள்ள வேதார்த்தங்களை
"நன்ருயறிந்து உலகத்தின் நன்மையின்பொருட்டு
"நிபந்தனைகளைச் செய்தார்" என்று சொல்லியிருக்
கிறது.

ஸ்மிருதிகளைக் குறித்தோவெனில் அவை வேதத்து
க்கு நிர்விவாதமான தாழ்ந்த பிரமாணமேயாகிலு
ம் பிரகிருத விஷயத்தில் அவற்றைக்குறித்து ஆக்ஷே
பிக்கவேண்டிய ஆவசியகமில்லை. ஊர்பேரில்லாத சி
ல்லறை ஸ்மிருதிகளில் நம்முடையவர்கள் மாமூல்
படிக்கு அவர்களிஷ்டத்துக்கிசைந்தவாறு சிலசுலோ
கங்களையெழுதிக் கோத்துவிட்டிருக்கலாமாகிலும் க
வுரவஸ்மிருதிகளில் அர்ச்சைக்காதாரமாக ஒரு எழு
த்தாவது கிடைக்கமாட்டாது. எதாவது ஸ்மிருதிப்பி
ரமாணங்களிருப்பதாய் நம்மபண்டிதர்கள் எடுத்து
ரைப்பார்களாகில் அப்போது அதைக்குறித்து யோ
சிப்பது உசிதமாகவிருக்கும்.

நம்மபண்டிதர்களுக்கு உதவத்தக்க புராணங்களி
ன் யோக்கியதையைக்குறித்து ஒருபுராணம் எழுதி
னலும்போதாதாகிலும், இந்தச்சஞ்சிகைக்கு இசைந்

---

* ஸவஜ்ஞொஸஸ்ரீஃ வஂஹ்யொநெ வெ
ஊாய௯ஂ ஸநீக்ஷூாகூாமொகஹிதா யொவ
ஙிவெஜவாநு.

நவரையில் அதைச்சற்றுவிரித்து உரைக்கவேண்டியி
ருக்கிறது. வேதஸமாஜகண்டனத்தில் கையொப்பமி
ட்டபலர் பண்டிதப்பட்டத்தை வகித்துக்கொண்டவா
றே, புராணங்களுக்கு நம்மபண்டிதர்கள் வேதோப
ப் பிரம்மணமென்கிற பேரை ஆரோபிப்பார்களென்
பதில் நாங்கள்தினையளவும் சந்தேகிக்கவில்லை. உலக
த்தில் ஒருதஸ்தவேஜுக்கு மற்றொன்று நகலென்னும்
போது அதில் சந்தேகமுள்ளவர்கள் அந்தநகலைத் தா
ய்ப்பிரதியுடன் ஒப்பிட்டுப்பார்ப்பதைவிட்டு அவ்வி
ஷயத்தில் சாக்ஷி விசாரிக்கத்தொடங்கும் பைத்தி
யக்காரர்களுமுண்டோ? பீனல்கோட் ஆக்டு வால்
மீகிராமாயணத்துக்கு நகலென்று ஆயிரம்பேர்சாக்ஷி
சொல்லுவார்களாகில், அந்தசாக்ஷியத்தை நம்பவே
ண்டியதோ அல்லது அவ்விரண்டையும் ஒத்துப்பார்
த்துத் தெளியவேண்டியதோ என்கிறவிஷயம் அனை
வர்க்கும் தெரியுமாகையால், சாக்ஷி விசாரிக்கவேண்
டியவிஷய மின்னதென்றும், நம்முடைய சொந்தவி
சாரத்தினல் அறிந்துகொள்ளவேண்டியவிஷயம் இ
ன்னதென்றும் நாங்கள் எடுத்துக்காட்டவேண்டியஆ
வசியகமில்லை. ஆகையால் புராணங்களென்னும் க
னக்கன் சுருணைகள் வேதோபப் பிரும்மணமென்னு
ம்பக்ஷத்தில், அவை வேதத்தில் எந்த பாகத்துக்கு
நகலென்கிறார்களோ அத்துடன் ஒப்பிட்டுப்பார்த்துத்
தெளியவேண்டியதாக விருக்கிறது. இந்தப்புராணங்
களுக்குத்தாய்ப் பிரதிபட்டியமான வேதங்களில் கி

டையாதென்றும், லுப்தமாகிவிட்டபாகத்தில் தானி ருந்திருக்கவேண்டுமென்றும் யாரோனும்வாதிப்பார்க ளாகில், அதற்குச்சமாதானம்முன்னுலேயே உரைக்க ப்பட்டது. ஆனுல் சாதாரணலவுகிகவ்விய வஹாரங்க ளில் கூடமூலதஸ்தாவேஜு கைதப்பிபோய்விட்டா ல் அதன் நகலைகவுணசாக்ஷியமாகவாவது அங்கிகரிக் கிருர்களே, இந்தப்புராணங்களின் விஷயத்தில்மா த்திரம் நாங்களேன் இவ்வளவு கண்டிப்பா யிருக்கி ருேமென்று நம்மபண்டிதர்கள் வெகுபரிதாபமாய்க் கேட்கலாம். நகல்களை கோர்ட்டில் கவுணசாக்ஷிய மாக அங்கிகரிப்பது உண்மையே. ஆகிலும் மூலதஸ் தாவேஜுக்கு அதுநகலென்று கக்ஷிக்காரருடைய ஒ ப்புக்கொள்ளுதலாலாவது, அல்லது சாக்ஷிகளாலாவ து ருஜுவானபிறகுஅதைசாக்ஷியமாக அங்கிகரிப்பா ர்களேயன்றி, யாதொரு ருஜுவுமில்லாமல் அதைத் தாய்ப்பிரதியின்நகலென்றே, கோர்ட்டார் ஸ்தாபிக்க மாட்டார்கள். இந்தச்சந்தர்ப்பத்தில் அதுநகலென்ப தற்கு சாக்ஷியை விசாரிக்கக்கூடுமென்று நாங்க ளொத்துக்கொள்ளுகிறபடியால், தங்கள் சாக்ஷியத் தைக்கொண்டு புராணங்கள் வேதங்களுக்கு நகலே யென்று நாங்களேனங்கிகரிக்கக்கூடாதென நம்மப ண்டிதர்களாக்ஷேபிக்கலாம். வேதம் அடியோடுலுப் தமாகிவிட்டபக்ஷத்தில் கும்பகோணத்தில்சாக்ஷிசொ ல்லிப் பழகியநம்மபண்டிதர்களைவிட கவுரவமானசா க்ஷிகள் எங்களுக்குக்கிடைப்பதருமையே. பதினுயி

பண்டிதர்கள் சேர்ந்து சூரியன் மேற்கேயுதித்ததா
உரைத்தாலும், அதை நாம்நம்பமாட்டோமல்லவா?
அப்படிநம்பாமைக்கு ஹேதுவென்னவெனவிசாரிக்க
வேண்டியதாகிறது. அனுமானப்பிரமாணத்தால்பாதி
கப் படாமலிருந்தாலன்றிசாக்ஷிசொல் ஒருகாசுக்கு
வாதென்பது நியாயசாஸ்திரசம்மதமாக விருக்கி
து. புராணத்துக் காதாரமாக சாக்ஷிசொல்வோர்
சொல்லைபாதிக்க என்ன அனுமானப்பிரமாணமிருக்
றதென்றுலோ அதைச்சற்று எச்சரிக்கிறோம். ஒருத
ஸ்தவேஜில் கால்பங்குகிழிந்து காற்றில்போய்விடும்
க்ஷத்தில், அதனுடைய வக்கணையைக்குறித்துச் சொ
ல்வோருடைய சாக்ஷியத்துக்கு மீந்திருக்கும் முக்கா
ல்பங்கு தஸ்தவேஜு பிரத்தியக்ஷ விரோதமாக வி
ருக்குமாகில், அந்தசாக்ஷிகளின்சொல்லைக் கிரஹிக்க
வேண்டியதோ தியஜிக்கவேண்டியதோ அதுதானுய்
விளங்கும். பட்டியமானமாயுள்ள வேதங்களில் பிரு
மம் அதிருசியமென்றும், அதைத் தியானத்தினு
லே அறியவேண்டியதென்றும், அதனிடத்தில் வேறு
விதக்கொள்கையைப் பெற்றுல்குடிமுழுகிப் போமெ
ன்றும், மறுபடி மறுபடி யுரைத்திருக்கையில், நஷ்ட
மாகிவிட்டபாகத்தில் அவரைக்கல்லென்றும் கட்டை
யென்றும், மஞ்சளென்றும் சாணியென்றும், சொல்
லியிருக்கலாமென்று அனுமானிக்கக் கூடுமோ? ஆனு
ல் எனக்கு உம்மைத்தியானித்து முடியவில்லையே நா
ன் கதியடையும்பொருட்டு கல்லாயும், கட்டையா

யும், ஆவிர்ப்பவித்துவருக என்று ஒரு பக்தன் கசிந்துருகிக் கேட்டுக்கொள்ளும்போது ஸர்வ சக்தரும் பக்தபராதீனருமென்று சொல்லப்பட்ட ஜகதீசுவரனானவர் அப்படியே மனமிரங்கி அருள்வாரென்பதில் ஏன் சங்கிக்க வேண்டுமென சிலராக்ஷேபிக்கலாம். பிரும்மத்துக்குரிய அனந்த கலியாணகுணங்களில்மாருத சுபாவமுடைமையும் ஒன்றென எல்லோரும்ஒத்துக்கொண்டவிஷயம். இதற்காதாரமாக அவர்களே பிரமாணமென்று கொண்டிருக்கிற விஷ்ணு-புராண வாக்கியமாகிய இதின் முதல்அத்தியாயத்தில்குறித்த-௬0-வது பிரமாணமொன்றை உதஹரிப்பதேபோதுமானதாயிருக்கிறது. அன்றியும் அவரை ஆக்கியாபிக்க வேறொருவரும் இல்லாவிடினும் அவராய் வைத்துக்கொண்ட நியமங்களை அவர் கடப்பாரென்பது இதுவரை அஸம்பாவிதமாயும் நம்பிக்கைக் கெட்டாததாயுமிருக்கிறது. அவருடைய ஒருகுணத்தைக் காப்பாற்றுவதற்காக வேறு மார்க்கம் தெரியாமல் இன்னம் பிரபலமான அவருடைய நியமங்களையும் சுவரூபத்தையும் மாற்றிக்கொள்வாரெனில் அவரைச் சர்வக்கியரென்ருவது சர்வ சக்தரென்ருவது எப்படி சொல்லக்கூடும்? கடவுளானவர் அவர் படைப்பிலுள்ள பலவிதப்பிராணிகளுக்கும் அளிக்கக்கருதிய அறிவிற்கு அவரவர்மனதையே அளவாக அமைத்திருக்கிருர். அவருடைய சிருஷ்டியிலுள்ள பொருள்கள்உண்டாகி, இருந்து, அழிவதையும், அவற்

ில் ஒன்றுக்கொன்றுள்ள பரஸ்பர சம்மந்தங்களையு
, அவற்றின் சம்யோக வியோகங்களினு லுண்டா
ும் காரியங்களையும் கண்டு கவனித்தே அவருடைய
ிசித்திரசக்திகளையும் அனந்தகல்லியாணகுணங்களை
ும் நாமறிந்துகொள்ளவேண்டியதேயன்றி, அவரு
டையதிவியசுவரூபத்தை நமதுகண்களுக்கு விளக்கக்
டாதெனஅமைத்திருக்கையில், அவர் நமக்களித்தச
தியையும் விருத்திசெய்துகொள்ளாமல்சோம்பி நம
கு அசாத்தியமானவும், அசம்பாவிதமானவும் காரிய
களை முடித்து, தேவரஹசியங்களையும் வெளியிடவே
டுமெனஒருபக்தர்விரும்புவாராகில் அதையும்கடவு
ரமோதிப்பாரெனக்கூடுமோ? அப்படியாகில்நம்மப
டிதர்களுக்கு வெகுசந்தோஷகரமான உபாயமொ
றுஎச்சரிக்கிறோம். அவர்களிலாவது அவர்களைச்சே
தவர்களிலாவது யாராவதொருவராகிலும் உண்
மயானபக்தரா யிருப்பாரென்பதில் சந்தேகமில்லை
. அவர் கேட்க்கும் பிரார்த்தனைகளெல்லாம் கொ
ந்தாலேயல்லவா பிரும்மத்துக்கு பக்தபராதீன
துவம் சித்திக்கும். அவர் தன்னைப்பிரும்மமாக்கிவி
ிபிருமத்தைத்தனக்குஊழியக்காரனாகும்படிகேட்
கொண்டாலும், பிரும்மம் அந்தப்பிரார்த்தனையை
ரிக்கவேண்டியதே யதல்லவா? இல்லாவிடில் அவ
க்தபராதீனராகமாட்டாரோ ? இவ்விதமாக பிரும்
ாகிவிட்ட பண்டிதர் எங்களைமாத்திரமேயன்றி விக்
ஹ ஆராதனத்துக்கு விரோதிகளாகிய அனேவ

ையும் நசிக்கச் செய்துவிட்டு நம்மபண்டிதர்களொ
வ்வொருவருக்கும் ஒவ்வொரு தேசத்தின் ராஜ்யாதி
பத்தியத்தையளிக்க, அவர்கள் தங்கள் சன்மார்க்கங்
களை நிலைநிறுத்தலாமே? வெகு விரைவில் அவர் களி
ந்த உபாயத்தை அவலம்பிப்பா ரொன்பதில் சந்தேக
மில்லை. நாம் உண்மையான பக்தியுடன் புத்தியைச்
செலுத்தி மனதைக் கிலேசப்படுத்திக் கடவுளைத் தே
டியும் அவரை அறியக்கூடாதெனில், கடவுளானவர்
அவருடைய யதார்த்த சுவரூபத்தையே அறிந்து ஆ
னந்திக்கும்படியான சக்தியை நமக்கு அளிப்பாராகி
ல் அவருடைய நியமங்களுக்காவது கல்லியாணகுண
ங்களுக்காவது எவ்வித பாதகமுமின்றி நமதுகோ
ரிக்கையும் ஸபலமாகுமல்லவா? இப்படிக்கன்றி அவ
ர்நமக்கு வேதத்தில் சொல்லுவது ஒருவிதமும் நட
ப்பது ஒருவிதமுமாகில் கும்பகோணத்துச்சாக்ஷிகள்
விஷயத்தில் நமக்குள்ள நம்பிக்கையைக்காட்டிலும்
கடவுளின் நியமங்களில் நமக்கெப்படி அதிக நம்பி
க்கையிருக்கக்கூடும். இந்தகுச்சித ஆக்ஷேபத்தின் சு
வரூபத்தை விளக்கிக்காட்ட இவ்வளவு சர்ச்சையே
போதுமாகையாலும், இத்தியாதி ஹேதுக்களால் பு
ராணங்கள் வேதத்துக்கு உபப்பிரும்மணம் என்னு
ம் கக்ஷிநிலைக்காதாகையாலும் இனி அதன் மற்ற
யோக்கியதைகளைக் குறித்து விசாரிக்கத் தொடங்
குகிறோம்.

வேதங்களை யார்வெளியிட்டதாகச் சொல்லப்ப

றதோ அந்த ருஷிகளாலே புராணங்களு மெழுதப்
ட்டிருக்கையில், வேதங்களைப் பிரமாணமாக ஒத்து
கொள்பவர் அவர்களா லெழுதப்பட்ட புராணங்
ளை யேன் ஒத்துக்கொள்ளக்கூடாதென்று சிலர் ஆ
க்ஷேபிக்கலாம். கோர்ட்டில் நியாயாதிபதியாக உட்
ர்ந்து ஒருவனை சிரச்சேதம்செய்யும்படி ஆக்கியா
ப்பவனே தன்வீட்டிலுள்ள ஒருவேலைக்காரனை இ
ண்டடி அடிப்பானாகில் அந்தக்காரியத்தைச் சரி
னதென்று யாராவது ஒப்புக்கொள்வார்களா? ந
ம பண்டிதர்களிலொருவராகிய கூஸண்ணுசாரியர்
ன்ஸீபாக விருந்து ஒருவனுடைய சகல சொத்தை
ம் மற்ருெருவனுக்குத் தீர்ப்புசெய்து விட்டாலு
செல்லுமாகிலும், அவரோ கோர்ட்டைவிட்டுவெ
யில்வந்து அண்டை வீட்டுக்காரன் சொத்தையெ
த்து அயலாருக் கெழுதிக்கொடுப்பாராகில், அவ
அதிகாரமில்லாமல் தப்பு தஸ்தவேஜு எழுதினதா
பீனல்கோட் ஆக்டின்படி அவரை மண்ணுக்கு
போடமாட்டார்களா? ஆகையால் ஒருவரோ இர
டுகாரியங்களைச் செய்த போதிலும் அவற்றில் ஒ
று செல்லுபடி யுள்ளதாயும் மற்ருென்று செல்லு
டி யற்றதாயு மிருப்பது ஆச்சரியமல்ல. வேதமு
இந்த ருஷிகளுடைய ஸ்வகல்பனையென்னும் பக்ஷ
தில் அதையும் அந்தப் புராணங்களைப்போலவே ம
க்கும்படி யிருக்கும். நமக்கு நம்முடைய உபாத்தி
யர் சந்தை சொல்லிக் கொடுக்கிற மாதிரியாகவே

அந்தந்த ருஷி அவரவருடைய சிஷியருக்கு, முன்னிரு
ந்த வேதத்தைச் சந்தைசொல்லி வெளியானதாகவிள
ங்குகிறதேயன்றி, அவர்களுடைய சுவகல்பனையென்
று சொல்வோர் ஒருவருமில்லையல்லவா? புராணங்க
ளோ வெனில் வேதார்த்தங்களை ஸ்பஷ்டமாய் வெ
ளியாக்கும் பொருட்டு அந்தருஷிகளாலே அனேக சு
வகல்பனைகளோடு இணைத்துச் செய்யப்பட்டதாக
அனைவரும் ஒப்புக்கொள்வார்க ளல்லவா? இதெல்லா
மெப்படி யிருந்த போதிலும் நம்ம பண்டிதர்கள் பிர
மாணங்களாக ஒத்துக்கொள்ளும் கிரந்தங்களினாலே
புராணங்கள் சுருதி ஸ்மிருதிகளுக்குத் தாழ்ந்தவை
யென்று ஏற்படுகிறதல்லவா? அந்தப் பிரமாணக்கிர
ந்தங்களேற்பட்டகாலத்தில்ஒருவேளைபுராணங்களையும்
கவுணப்பிரமாணங்களாகவாவது ஒப்புக்கொள்ளக்கூ
டுமாகிலும், பிரகிருதத்தில் அவைப் பிரமாணங்களே
யாகமாட்டா தென்பதற்குள்ள இரண்டொரு ஹேது
க்களைக்கூறி இந்த பாகத்தை முடிப்போம்.

நமதுதேசத்தில் ஒருவர்புதிதாய் ஒரு ஏற்பாட்
டைச் செய்யும்பக்ஷத்தில் அதற்கு கவுரவத்தைக் கற்
பிக்கும்பொருட்டுப் புதிதாய் ஒரு புராணத்தைய
ண்டுபண்ணுவதும், அவ்வளவுக்குச் சக்தியில்லாதவ
கள் சில சுலோகங்களையாவது பழையபுராணங்கள
ல் கோத்துவிடுவதும் வெகுநாளாய் நடந்துவரும் 
ஷ்டாசாரமென்று அனைவருக்கும் தெரிந்திருக்கும். 
தையறியாதவர் யாராவதுண்டெனில் அவர்பொருட

இவ்விடத்தில் சற்றுவிவரிக்கிறோம். ஆதியில் அஷ்
தசபுராணங்கள் ஏற்பட்டதாக அனைவரும் ஒத்துக்
ாள்ளுகிறார்கள். பிறகு சிலபுராணங்கள் ஏற்பட
அவற்றிற்கு கவுரவத்தை யாரோபிக்கும்பொரு
உபபுராணங்கள் பதினெட்டென்று பேர்கூறினு
ர். இவ்வாறு சுமார் ஆயிரம் வருஷத்துக்கு முன்
த -ஙசு- புராணங்களைக்காட்டிலும் அதிகமில்லா
-லும், பிரகிருதத்தில்- ஙகூ000-புராணமிருக்கிற
ன்றலும் குறைவாகவேமுடியும். நம்மதேசத்தில்
ள புராணங்கள் இத்தனையென்று நம்ம பண்டிதர்
கணக்கிட்டுச் சொல்வார்களாகில் அவர்கள் விரு
ம் வெகுமதியைக் கொடுக்க நாங்கள் சித்தமாயி
கிறோம். இத்தனைபுராணங்கள் வந்தவழியை விசா
தால் வெகு விநோதமாகவிருக்கும். அதிருஷ்டவச
ால் பொருளைப் படைத்தவர் அதைச் செலவழிக்க
று நல்லமார்க்கம் தெரியாமல் கோயில்களைக்கட்
அப்பொருள்களை விழலுக்கிறைப்பதுமன்றி, அந்
கோயில்களுக்கு ஒரு மஹிமையைக் கல்பிக்கும்
ாருட்டு, வயிறுவளர்க்கும்நிமித்தம் தங்களைச்சுற்றி
காண்டிருக்கும் பண்டிதர்களைக்கொண்டு புராண
ன்று பேர்வைத்து ஒரு புதியக்கிரந்தத்தையெழு
வெப்பதும், அந்தப்பண்டிதர்கள் வருணனும் பிருகு
தீர்த்தயாத்திரைபோகும்போது மார்க்கத்திலந்த
லத்தைக்கண்டுபிருகுஅந்த ஸ்தலத்தின் மாஹாத்மி
எத்தன்மையதென்றுகேட்க, பூர்வத்தில் பிரும்

மா உக்கிரதபசுசெய்து அளவிறந்தயாகங்கள் செய்த
தன்மேல், விஷ்ணு அவ்விடத்தில்அவருக்குப் பிரத்தி
க்ஷமானதாகத்தொடங்கி, வருணனுரைத்தாரென்று
டைத்தவரையில் பனையோலைகளைவாரி புஸ்தகமாவெ
ழுதிநெல்லுப்பானையில்புழுக்கிவைப்பதும், யாருக்க
வது புதுமையாய்த்தோன்றும்பக்ஷத்தில் அதற்கு ஒ
உதாரணம்கூறுவோம். செங்கல்ப்பட்டுக்குச் சமீப
தில்பிரகிருதத்தில் வரதராமானுஜபுரம் என்னும் சிற
ப்பெயரைப்பெற்றவன்பாக்கத்தில் இருபதுவருஷ
திற்குமுன் அவ்வூராரில்சிலர்பக்திரஸப்பெருக்கால்
வ்விடத்தில் ஒரு தேவாலயப் பிரதிஷ்டைசெய்து
தை புண்ணியஸ்தலமாக்கியதுமன்றி, திருவள்ளூரி
வசிக்கும் ஒருபண்டிதரைக்கொண்டு ஸ்தலபுராண
எழுதிவைத்திருக்கிறுனென்பதை அவ்வூராரில் யா
ம் மறுக்கமாட்டார்களென்று நம்புகிறோம்.

இம்மாதிரியாகவே ஒவ்வொரு ஸ்தலத்துக்கும் பு
ணங்களேற்படவே உலகத்திலுள்ள உயிர்களை எ
ணக்கூடுமாகிலும் இந்தப் புராணங்களை எண்ணிமு
யாது. பழயபுராணங்களில் புதியவாக்கியங்களை
கோப்பதற்கு இன்னது திருஷ்டாந்தமென்று ந
களெடுத்துரைக்கவேண்டியதில்லை. எவரெவருக்
ந்தபுராணமிஷ்டமோ அதை யெடுத்துக்கொண்டு
ரண்டுமணிகாலம் சோம்பலைவிட்டு சுலோகங்களை
ணக்கிடுவார்களாகில், இப்படி யேற்படும்மொத்த
னது அதன்தலைப்பில் போட்டிருக்கும் கிரந்தக்க

கக்காட்டிலும் அதமபக்ஷம் ஆயிரம்கிரந்தம் அதிக ருப்பதாய்யேற்படும். இதற்குதாரணமாக பிரகிருத தில்அச்சிடப்பட்டிருக்கும்வால்மீகிராமாயணத்தை கொள்வோம். அனேகக்கிரந்தங்களை ஒன்றுடனொ றுஒப்பிட்டுப்பரிசோதித்து, நூதனமாய்வந்தேறிய லோகங்களைக் கழித்துவிட்டு, அச்சிட்டதாய் அதன் வதாரிகையில் சொல்லியிருக்கிறது. இராமாயணம் தல்ஆறுகாண்டத்தில் இருபதுனாயிரங்கிரந்தங்களு உத்தரகாண்டத்தில் நாலாயிரம்கிரந்தங்களும், ஆ ஸப்தகாண்டங்களிலும் இருபத்திநாலாயிரம் கிரந் ங்களடங்கியிருப்பதாக, இராமாயணத்தின் பேரை ிந்தபேர்களுக்கெல்லாம் தெரியுமாகையால், இதை தறித்து சாக்ஷிவிசாரிக்கவேண்டிய ஆவசியகமில்லை. தில் முதல் ஆறு காண்டங்களைக் கணக்கிடுவோர்க -உ0000-கிரந்தத்துக்குப்பதிலாக -உ0உஎ௩௯- லோகங்களிருப்பதாக அறிவார்கள். ௩உ-எழுத்துக் ாடங்கிய அனுஷ்டுபு சுலோகம் ஒன்றே ஒரு கிரந் மாகும். ஒவ்வொருஸருக்கத்தின்முடிவிலும் அனுஷ்ட ு சுலோகத்தைக்காட்டிலும் பெரிதான விருத்தங் ள் வெகுவாய் வருகின்றமையால், அவற்றிற்கு கிர ங்கணக்கிட்டுப்பார்ப்போமாகில் அதில் வாஸ்தவ ாயிருக்கவேண்டியதைக் காட்டிலும் அதமபக்ஷம், 00 - சுலோகங்களுக்கு அதிகமிருப்பதாய் ஏற் டும். இந்த அதிகசுலோகங்கள் எப்போது யாரால் ்தநிமித்தமாகக் கோக்கப்பட்டனவோ; த று விா

ங்காவிடினும், அதிகம் சேர்ந்திருப்பதில் சந்தேகமில்
லையே. புராணங்களைப் பிரமாணமாகக் கொள்ளவே
ண்டியதாகிலும் இவ்வாறு அவற்றில் புதிதாய்ச் சே
ர்க்கப்பட்ட பாகங்கங்களையும் பிரமாணமாகக்கொ
ள்ளவேண்டிய ஆவசியகமுண்டோ? அப்படிக்கில்
லெனில் அதில் புதிதாய் சேர்ந்த சுலோகங்களின்
தென்று அறிந்து அவற்றைக் கழிக்கும்வரையில் அ
தப் புராணத்தினின்னபாகம் பூர்வத்தி லிருந்ததென
று ஏற்படமாட்டாதாகையால், அது முழுமையும்
ரமாணமல்லவென்றே நீக்கவேண்டியது யுக்தியுக்
மாகவிருக்கிறதல்லவா.

இதுநிற்கப்புராணங்களில்சொல்லியிருக்கும் வி
யங்களை யோசித்தாலும் அவற்றின் கவுரவம்தா
விளங்கும். பாத்மபுராணமென்பது கவுரவமான பு
ணங்களி லொன்றென அனைவரும் ஒத்துக்கொள்
ர்கள். அந்தபுராணம் முழுமையும் ஒருவரோ எழு
யிருந்தபோதிலும் அதின் பூர்வபாகத்தை வைஷ்
வர்களும், உத்தரபாகத்தைச் சைவர்களும் பிரமா
மே யல்லவென்று ஒதுக்கிவிடுகிறார்கள். அதற்கு
துவில்லாமற்போகவில்லை. அவரவர்களுக்கு அனு
ல மானதைப் பிரமாணமாகவும், பிரதிகூலமா
தை அப்பிரமாணமாகவும், கொள்ளுகிறார்களெ
று அதிலுள்ள விஷயங்களை யெடுத்துரைக்குங்க
நிதர்சனமாகும். ஆகிலும் கக்ஷியாவேசத்துக்கு
டிமையாகிவிட்ட இவர்கள் யுக்தப் பிரமாணங்க

கொண்டு விஷயசஞ்சாரம் செய்யாமல் சுவப்பிர
ாஜனத்தையே உரைகல்லாகக் கொண்டார்களெ
யதைச் சற்று கவனிப்போர்களுக்கு இவர்களுடை
அபிப்பிராயம் எவ்வளவு கவுரவத்துக்குப் பாத்தி
ாகுமோ அது பிரயாசமின்றி விளங்கும். வேறு
சாயத்தையேற்காத வெள்ளைக்கண்ணாடி மூலமா
ப்பார்க்கப்படும் பண்டங்கள் அவற்றின் இயற்கை
ான வர்ணங்களுடன் விளங்குமாகிலும் துரபிமா
மாகிய சாயத்தை யேற்றிருக்கும் கண்ணாடியின்
லமாய்ப் பார்க்கும்போது சகல பதார்த்தங்களும்
ந்தத்துரபிமானங்களின் சாயத்துக்கிசைந்தபடி ப
சையாயும், செகப்பாயும், கறுப்பாயும் தோன்று
ல்லவா ? ஆகையால் மேற்குறித்த பெரியோர்களைப்
ாலன்றி இதைப்படிக்கும் புத்திமான்கள் எங்களு
பக்ஷியிலும் பற்றற்று இதிலுதஹரிக்கப்படும்பிர
ாணங்களை யோசிப்பார்களாகில் இவ்விஷயத்தில்
வர்கள்செய்யும் சித்தாந்தம் இன்னதன்மையதா யி
க்குமென்பதில் எங்களுக்கு ஈஷத்தேனும் சந்தே
மில்லை.

(எஅ) பாத்ம பூர்வத்தில் * "விஷ்ணுவைக்காண்
பதினாலே சிவத்துரோகமுண்டாகும். சிவத்துரோ
கத்தினாலே வெகுக்குரூரமான நரகம்நேரிடுமென்ப

---

* விஷ்ணுதர்ஶநாதேவ ஶிவத்ரோஹ:
ப்ரஜாயதே, ஶிவத்ரோஹாந் ஸந்தேஹாந்

“ தில் சந்தேகமில்லை ஆகையால் விஷ்ணுவின்பெய
“ ராக்கூட ஒருக்காலும் உச்சரிக்கவேகூடாது” எ
ன்று சொல்லியிருக்கிறது.

இவ்வாறுசொன்னவரோ இதற்கு நேர்விரோதமாக
வேறொரு இடத்தில் சொல்லியிருக்கிறாரென்றால் நீ
ங்கள் எளிதில் நம்பமாட்டீர்கள். அந்தக்கிரந்தகர்
த்தா இக்காலத்தில் உயிர்வாழ்ந்திருப்பாரெனில் பீ
னல்கோட்டுப்படிக்கு பொய் சத்தியத்துக்கு சிக்ஷை
யடைவாரென்று சொல்லவேண்டியிருக்கும். இதெ
ப்படியிருக்கினும் அவரவர் கையிலிருக்கும் பாத்ம
புராணத்தை யெடுத்துப்பார்த்தால் எங்கள் பேச்சி
னுண்மைக்கு அதுவே சாக்ஷிசொல்லும். அப்படிவி
ரோதமாக என்ன சொல்லப்பட்டிருக்கிற தென்று
லோ அதைச் சற்று எச்சரிக்கிறோம்.

(எக) பரத்மஉத்திரத்தில் * “ யாராகுல் அக்ஞ
“ யானமோஹத்தால் ஜகன்னாதராகிய நாராயணனை
“ க்காட்டிலும் சிரேஷ்டமானதெய்வம் வேறு இரு
“ ப்பதாகச் சொல்லுகிறார்களோ அவர்களே பாஷ

---

ரகும் யாதிஜாரு—ணம்; தஸ்மாத்விஷ்—நாமோவ
நவக்தவ்யு கதாவந.

* யெகூநூநெநூவம் வாரகெுவ ந வஜங
ஜாநமொஹிதாஃ, நாராயணா ஜஃநாயா
தெவெவ வாஷண்டிநஸ்ரூ—தாஃ. யஸ்து—நார

ண்டிகளென்பவர். யாரானால் பிரும்மருத்திராதி இதரதேவதைகளுக்குச் சமமாய் நாராயணனை மதிக்கிறானோ அவனெப்போதும் பாஷண்டியாவான். இதைக்குறித்து விசேஷித்துச் சொல்லிப்பயனென்ன? வைஷ்ணவமதத்தை அவலம்பிக்காதவர் பிராம்மணர்களா யிருந்தபோதிலும் ஒருக்காலும் அவர்களைத் தீண்டவுங்கூடாது, அவர்களுடன் பேசவுங்கூடாது, அவர்களைப்பார்க்கவுங்கூடாது" ன்று சொல்லியிருக்கிறது.

இம்மாதிரியானவாக்கியங்களை சமரஸப்படுத்தி முயாமையினால்தான் சுமந்தான் தலையுடன் பத்தென்.

ஒருபாகத்தை வைஷ்ணவர்களும் மற்றொன்றை மார்த்தர்களும் தள்ளிவிட்டார்கள். ஒருவன் ஒரு ஷயத்தில் பொய்யுரைத்தால் அவன் சாக்ஷியம்முமையும் பொய்யென்றே நிக்கிரஹிக்கப்படவேண்யதென்று, சாமானியவிதி நியாயசாஸ்திரங்களி ஏற்பட்டிருக்கிறது. ஒருவன் ஒருபொய் உரைத் மாத்திரத்தில் அவனாயவில் அவன்மெய்யே யுரை

---

ணநேவம் ப்ரஹ்மருத்ராதி தேவதைஸ், ஸ
மத்வேநைவ வீக்ஷ்யேத ஸ பாஷண்டீ பவேத்ஸ
. கிமத்ர பஹுநோக்தேந ப்ராஹ்மணாயே
ர வைஷ்ணவா: ந ஸ்ப்ருஷ்டவ்யா ந வக்தவ்யா ந
த்ருஷ்டவ்யா: கதாசந,

க்கவில்லையென்று கொள்ளவேண்டுமென்பதல்ல, அ
ந்தவிதியின்கருத்து. நாம்மிதக்கியாளாயும் மிதசக்தா
ளாயு மிருக்கின்றமையால் ஒருதடவை பொய்யனெ
ன்று ஏற்பட்டவன்சொற்கள் மெய்யென்பதற்கு நிஸ்
ஸந்தேகமானவும் அபாதிதமானவும் நிதர்சனம்கிடை
யாதவளாயில் அதில் ஒருபாகத்தை மெய்யென்று கி
ரஹித்து மோசம்போவதைவிட அது முழுமையும்
பொய்யென்று தியஜிப்பது உத்தமமென்பதே அ
ன் உண்மையான கருத்தாகும். மேற்குறித்த இரண்
டுபிரமாணங்கள் ஒன்றுக்கொன்று பிரத்தியக்ஷ வி
ரோதமாக விருக்கின்றமையால் அவற்றில் ஒன்
பிசகாயிருக்கவேண்டுமென்பது சித்தம். இன்னது பி
சகு இன்னதுசரியென்று ஏற்படுகிறவளாயில் நாம்
குருட்டுத்தனமாய் இரண்டிலொன்றை அவலம்பித்
தால் அதுபிசகாயிருக்கும் பக்ஷத்தில் பிரபலமான
தோஷம் நேரிடலாமாகையால் அவ்விரண்டையு
னுசரிக்காமையே நலமல்லவா ?-என்றால், அவர்
ச்சிலொன்றேனும் நம்பிக்கைக்குப் பாத்திரமல்லெ
ன்று ஏற்படுகிறதல்லவா ! இவர்சொல் ஒன்றுமாத்
திரந்தான் இத்தன்மையானதென்று கிரஹிக்கவேண்
டாம். இதை ஸ்தாபிக்கத்தக்கப் பிரமாணங்கள் அ
நந்த மெடுத்துரைக்கக்கூடுமாகிலும் இரண்டொன்
மாத்திரம் இவ்விடத்தி லுதஹரித்து இந்தபாகத்
முடிக்கிறோம்.

(அ0) புராணங்களை ஆதாரமாகக்கொண்டு பி

சப்தகல்பத்துருமம் என்னும் கிரந்தத்தில் * "எதனுல் சங்கரன் சந்தோஷமடைகிருனே அப்படிப்பட்ட பில்வமானது ஸகல விருப்பங்களைபுந்தரும், வறுமையையும்கொல்லும், அதைவிடசிரேஷ்டமான பொருள் உலகத்தில்யாதொன்றுமில்லை" என்று சொல்லியிருக்கிறது.

(அக) பாத்மபுராணத்தில் † "வாசுதேவனைவிட்டு இதரதேவதையை எவனுபாசிக்கிருனே அவன் தாஹத்திஞல் பாதிக்கப்பட்டு கங்கைக்கரையில் கிணர்வெட்டும் முட்டாளுக்கொப்பாவான்" என்று சொல்லியிருக்கிறது.

(அஉ) ஆதிபுராணத்தில் இவ்வாறு விஷ்ணுசொல்லுகிருர் ‡ "என்பக்தன் யாருக்குவல்லபனே அவனே யெனக்குவல்லபன்; அவனைவிடசிரேஷ்டமா

* ஸவ௱காமப்ரதம் பில்வம் தாரித்ர்யஸ்ய ப்ரணாஸநம், பில்வாத்பரதரம் நாஸ்தியேந துஷ்யதி ஸங்கர:.

† வாஸுதேவம் பரித்யஜ்யயோந்யம்தேவமுபாஸதே, த்ருஷிதோ ஜாஹ்நவீதீரே கூபம் கநதி துர்மதி:.

‡ மத்பக்தா வல்லபோயஸ்ய ஸமவல்லப:, தஸ்மாத்பரோவல்லபோ நாஸ்தி ஸத்யம்

“ னவல்லபன் உலகத்தில்கிடையாது. ஓ தனஞ்சய
“ னே இது சத்தியம், சத்தியம்.” என்று சொ
ல்லியிருக்கிறது.

(அரு) பாத்ம புராணத்தில் * சிவன் பார்வதியை
நோக்கி “ சம்பிரதாயமற்ற மந்திரங்களெவையோ
“ அவைநிஷ்பலமானவையென மதிக்கப்படுகின்றன.
“ ஆகையால் கலியுகத்தில் இந்நால்வகைச்சம்பிரதா
“ யக்காரர்களுண்டாவார்கள். அவர்கள் யாரெனில்
“ ஸ்ரீ, மாத்துவி, ருத்திரன், சனகர்கள், என்னும் இவ்
“ வைஷ்ணவர்களே உலகத்தைப் பரிசுத்த மாக்கு
“ வோர் ஓ தேவி! கலியுகத்தில் ஸம்பிரதாயப் பிர
“ வர்த்தகர்கள் இந்நால்வரோ.” யென்று சொல்லி
யிருக்கிறது.

(அச) அதே புராணத்தில் † “ ஸ்ரீ யானவள் ரா
“ மானுஜனை ஸ்வீகரித்தாள்; சதுர்முகன் மத்துவா
“ சாரியரையும்; ருத்திரன், ஸ்ரீ விஷ்ணுஸ்வாமியை

---

𑌸𑌤𑍍𑌯𑌂 𑌧𑌨𑌂𑌜𑌯.

* 𑌸𑌂𑌪𑍍𑌰𑌦𑌾𑌯 𑌵𑌿𑌹𑍀𑌨𑌾𑌯𑍇 𑌮𑌂𑌤𑍍𑌰𑌾
𑌨𑌿𑌷𑍍𑌫𑌲𑌾 𑌮𑌤𑌾𑌃, 𑌅𑌤𑌃 𑌕𑌲𑍌 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌚𑌤𑍍𑌵𑌾
𑌸𑌂𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑌿𑌨𑌃. 𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌧𑍍𑌵𑌰𑍁𑌦𑍍𑌰𑌸𑌨𑌕𑌾 𑌵𑍈
𑌷𑍍𑌣𑌵𑌾𑌃 𑌕𑍍𑌷𑌿𑌤𑌿𑌪𑌾𑌵𑌨𑌾𑌃, 𑌚𑌤𑍍𑌵𑌾𑌰𑌸𑍍𑌤𑍇 𑌕𑌲𑍌
𑌦𑍇𑌵𑌿 𑌸𑌂𑌪𑍍𑌰𑌦𑌾𑌯 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌕𑌾𑌃.

† 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌂 𑌶𑍍𑌰𑍀𑌃 𑌸𑍍𑌵𑍀𑌚𑌕𑍍𑌰𑍇, 𑌮𑌧𑍍𑌵𑌾𑌚𑌾𑌰𑍍𑌯

யும்; நாலுஸனகர்களும் நிம்பாதித்தியனேயும் ஸ்வீகரித்தார்கள்" என்று சொல்லியிருக்கிறது. இவ்விரண்டு பிரமாணங்களால் இப்பொழுது தலையை ரித்துக் கொண்டாடும் ஸம்பிரதாயங்களெல்லாம் நற்றியதினம் காலமை உண்டானவையேயன்றி ருதியானவை யல்லவென்று ஸ்பஷ்டமா யேற்ப கிறதல்லவா? நம்ம பண்டிதர்களுடைய பிரமா ணங்களாலே அவர்களுக்கிந்தப் பிரயோஜனங் கிடைத்தது.

(அ௫) பக்தமாலையென்னும் கிரந்தத்தில் ஏடு து தஹரித்திருக்கிற ஒரு பார்கவத சுலோகத்தி ல், * "யாரானால் கழுத்தில் துளசிமணியும் தாம ரைமணியும் தரித்து தோள்களில் சங்க சக்கிர முத்திரைகளைப் பெற்று நெற்றியில் பிரகாசமா ன ஊர்த்துவ புண்டரத்தைத் தரித்திருக்கிறார் களோ அவர்கள் வைஷ்ணவர்கள். அவர்கள் உ

---

பத்தராவம், ஸ்ரீ விஷ்ணுஸ்வநிந்தாப்ரஜா, நிம்பாதித்யம் வதஸநம்.

* யெகணூஜ தவஷீ நஸிநாக்ஷிா ஜாம் யெவாஹஞாஜ வசிவிஹித ஸவெ பக்ராம், யெவாஜராட ஷஜகெஷ வக்ஷஞஷ பண்ணாம் தெவெஷவா ஹவநராஸவ பித்யஜி.

"லகத்தை ஒரு நொடியில் பரிசுத்த மாக்குகிறார்கள்." என்று சொல்லியிருக்கிறது. இந்த சுலோகசம்மந்தமாக பலவினோதங்கள் தோன்றும். முதலாவது பாகவதத்திலில்லாத சுலோகத்தை அதிலிருப்பதாய்ச்சொல்வது ஒரு வினோதம். இரண்டாவது இதிற்சொல்லிய லக்ஷணப்படிக்கு வைஷ்ணவர்களுக்குக் கியானலேசம் வேண்டியதில்லை யென்றும் இந்த வேஷத்தைக் கொண்டிருக்கும் ஒவ்வொருபொம்மையும் வைஷ்ணவனாகி உலகத்தைப் பரிசுத்தமாக்குமென்றும் ஏற்படுவது அதிலும் விந்தை. மூன்ருவது வைஷ்ணவர்கள் இதைப் பிரமாணமல்லவென சொல்லத் துணிவார்களாகிலும் ஒவ்வொரு வைஷ்ணவனும் ஸ்நானம் செய்த உடனே இதை அனுஸந்தானம் செய்கின்றமையால், அவர்களாசாரமே அவர்கள் துணிவான வாதத்தைத் தடுப்பது மிகவும் விந்தை.

ஸ்ரீரங்காதி ஸ்தலபுராணங்களை நோக்குங்கால் நாய், கழுதை முதலிய அக்கியான ஜந்துக்களுக்கெல்லாம் முக்திகிடைத்ததாயும், ஸ்மசானத்திற்புரண்ட கழுதையின்மேல் சாம்பல் பட்டபடியாலும் உரியைத்தாவின பூனையின் கழுத்தில் ருத்திராக்ஷம் விழுந்தபடியாலும் அவற்றிற்கும் முக்திகிடைத்ததென்றும் இன்னும் பலபல விந்தைகளை ஒவ்வொருவரும் கேட்டிருப்பார்களாகையால் அதைக்குறித்து விசேஷித்து இவ்விடத்தில் உரைக்கவேண்டியதில்லை.

(அசு.) பிராணதோஷிணியில் * "மச்சியமாம்சங் களுண்டு மத்தியபானம்செய்து முத்திரையைத்தரி த்து மைதுனமே தொழிலென்று இருத்தல் என்னு மிவ்வைந்துமகாரங்களும் மகாபாதகநாசனம்." என் று உரைத்திருப்பதாய் முதலாவது அத்தியாயத்தி ல் குறிப்பிட்டிருக்கின்றோமல்லவா? ஶரணம்வ்ரஜ ம் என்னும் சுருதியிலுள்ள சரணம்,என்னும் பதத் துக்கு வைஷ்ணவர்கள் காலென்றுபொருள்செய்தது போலவே இந்தப் பிராணதோஷிணியைப் பிரமாண மாகக் கொள்பவர் முதலத்தியாயம் ௫௬-வதுபிரமா ணத்தில்உள்ளயோநிஂதெவஂஎன்னும்வாக்கியத்தில் யோனியாகிய தெய்வமென்று,பொருள் செய்திருப் பதாகக் கேள்விப் பட்டிருக்கிறோம். நம்ம பண்டிதர் களில் சகலவகையாரும் சேர்ந்திருக்கின்றமையால் ஒருவர் சந்தேகத்தை மற்றொருவர் தீர்ப்பாரென்கிற நம்பிக்கையினால் இவ்வளவுடன் இந்த பாகத்தை மு டிக்கின்றோம்.

கடைசியாக இந்தப்புராணங்களுக்குள்ளேசிலர்சா த்விகமானவை யென்று ஒப்புக்கொள்வதை மற்றவ ர் தாமஸமானவை யென்று ஒதுக்கிவைப்பது நம்ம வர்களுக்குள் பரஸ்பரம் நடந்தேறிவரும் அநுதி ம

* மஂஸ்யஂ மாஂஸஞ்ச மத்யஞ்ச முத்ராமைத ுநமேவச, மகாரபஞ்சகஂசைவ மஹாபா தகநாஶநஂ.

ரியாதையாக விருக்கின்றதல்லவா? பிரகிருதத்தில்
நம்ம பண்டிதர்களில் ஒருவருக்கொருவர் விரோதத்
தை யுண்டாக்கவேண்டியது எங்கள் கருத்தல்லா
டினும், அவர்கள் பேருக்குக் கொஞ்சம் கழித்துவிட
டபிறகு முடிவில் அவர்களுக்கெல்லாம் பொதுவாய
தேறிநிற்கும் புராணப் பிரமாணமின்னவை யென்
தயைசெய்தெடுத்துரைப்பாராகில் அப்போது அ
க்குறித்துயோசித்துக்கொள்ளலாம். அவரவருடை
சுவாசாரத்துக்கும் ஆசாரிய சம்பிரதாயத்துக்கு
இசையவில்லை யென்கிற ஹேதுவைப்பற்றியே தா
ஸங்களென்று சில புராணங்களை யொதுக்குவார்
ளாகில், சுருதிக்குப் பிரத்தியக்ஷ விரோதமென்கி
ஹேதுவின்மேல் மற்றதையும் நாங்கள் தள்ளிவிடு
தற்கு என்னபாதகஞ் சொல்லக்கூடும்.

அஷ்டாதச புராணங்களுக்குள், மச்சிய, கூர்ம,
லிங்க, சைவ, ஸ்காந்த, ஆக்னேய புராணங்கள் தா
சமானவையென்றும், விஷ்ணு, நாரதீய, பாகவ
கருட, பாத்ம, வராஹ, புராணங்கள் சாத்விகமா
வையென்றும், பிரும்மாண்ட, பிரும்மவைவர்த்த,
ர்க்கண்டேய, பவிஷிய, வாமன, பிரம்ம புராணங்க
ராஜஸமானவையென்றும், வைஷ்ணவர்கள் வி
ஸ்தை யேற்படுத்தியிருக்கிறார்கள். ஸ்மிருதிகளி
வஸிஷ்ட, ஹாரீத, வியாஸ, பராசர, பரத்துவாஜ,
சியப ஸ்மிருதிகளை சாத்விகமானவையென்றும்;
க்கியவல்கிய, அத்திரி, தித்திரி, தக்ஷ, காத்திய

, விஷ்ணு ஸ்மிருதிகளை, ராஜஸமானவையென்றும்;
வுதம, பிரஹஸ்பதி, ஸம்வர்த்த, யம, சங்க, உசான,
மிருதிகள் தாமஸமானவையென்றும்; வைஷ்ணவ
கள் கொண்டிருப்பதுமன்றி * "வளர்த்திச் சொல்
வதில் பயனென்ன, புராணங்களிலும் ஸ்மிருதிக
ளிலும் தாமசமானவை நரகம் விளைக்கும்; ஆகை
யால் தெரிந்தவர்கள் அவற்றைநீக்கவேண்டியது."
ன்று ஒரு சுலோகத்தையும், இவர்களுக்குச் சகாய
ாக பாத்மோத்தரத்தில் நுழைத்துவிட்டிருக்கிறார்
ர். இந்த கலியுகத்தைக் காட்டிலும், சகல விதத்
லும் மேலானவை யென்று அனைவராலும் ஒத்
க்கொள்ளப்பட்ட திரேதாயுகத்துக்கும், துவாப
ுகத்துக்கும், முக்கிய பிரமாணங்களாகிய, கவுத
ஸ்மிருதியும், சங்கஸ்மிருதியும் தாமஸமானவையெ
று ஏற்படுகிறபடியாலும், அவ்விரண்டு யுகங்க
லுள்ளவர்களெல்லாம் அந்தஸ்மிருதிகளையே முக்
யப் பிரமாணங்களாக அனுஷ்டித்துவந்தபடியாலு
அவர்களனைவரும் நரகத்திற்கே சென்றார்களெ
மேற்கண்ட சுலோகத்தினாலே தெரிகிறதல்ல
? அன்றியும் பந்தாள மடமொன்றுதவிர பரதக
ட்டத்தின் மற்ற பாகங்களிலெல்லாம் ஸர்வோத்கி

---

* கிஞ்சித் ப்ரலபனேநாத்ர புராணேஷு
ஸ்ம்ருதிஷ்வபி, தாமஸா நரகாயைவ
வர்ஜயேத்தாந் விசக்ஷண:

ருஷ்டமானதாகவழங்கிவரும் விக்கியானே சுவரீயம்
அல்லது மிதாக்ஷிரி யென்னும் நிபந்தனைக்கிரந்தத்
துக்கு ஆதாரமாகிய யாக்கியவல்கிய ஸ்மிருதியை
யும், காத்தியாயன ஸ்மிருதியையும் ராஜஸமான
வையென்று ஒதுக்கிவிட்டார்கள். இவைகளெல்லாப்
திரயோசிக்கையில் வைஷ்ணவர்கள் செய்த பொ
சுருட்டுக்களுக்கு இசையவில்லையென இவற்றையெ
லாம் தாமஸமானவையென்று ஒதுக்கிவைத்தார்
ளெனவிளங்கும். இவ்விதமானசங்கிரஹ விசாரத்
னாலே புராணங்களின் யோக்கியதைதானாய் விள
குகின்றமையால்இனிஅதில்வீண்பொழுது போக்கா
ல் ஆகமங்களின்சுவரூபத்தைச்சற்று விசாரிப்போம்

ஆகமங்கள் என்பவை கேவலம் ஜீவனோபாயம
க நவீனமான பிராம்மணர்களால் முடியப்பட்ட
என்பதற்கு ஒரு நிதர்சனம் கூறுகிறோம். உண்மை
யாகவே ஸ்மிருதிகளையொத்த பூர்வீகக் கிரந்தங்க
ராஜஸதாமஸங்களென்று ஒதுக்கினபோதிலும் அ
ற்றை உண்மையானவையென்றே அனைவரும் ஒத்
க்கொள்வார்கள். இவ்வாகமங்களோவெனில் அவற்
லொவ்வொன்றையும் அனுஷ்டிக்கும், சிலர்தவிர ம
றவர்கள் அதை ஒரு தாமஸப்பிரமாணமாகக்கூடக்
ரஹிக்கமாட்டார்கள். பிரகிருதத்தில் ஒருவேளை
க்ஷியாவேசத்தினால் வேறுவிதமாக நம்மவர் வாதி
லாமாகையால் பண்டாரஆகமத்தையும் அவர்கள்
மாணமாய்க் கொள்ளுகிறார்களாவென்று கேட்க

ாடியதாகிறது. இவர்கள் பண்டார ஆகமத்தை ஒப்
ாதவரையில் அவர்கள் பாஞ்சராத்திரபாசுபத்தியா
களை ஒப்பமாட்டார்களென்பது தெளிவாயிருக்கிற
. ஸ்ரீமத் வேதமூர்த்தி சங்கராசாரியர் அவரு
டைய யோக்கியதைக்கு இசைந்தவாறு நிஷ்பக்ஷபா
மாய் பாஞ்சராத்திரம் பாசுபத்தியம் இவ்விரண்டை
ம் பிரமாணமல்லவென்று ஒதுக்கிவைத்திருக்கையி
ராமானுஜாசாரியர் அவற்றுள் பாஞ்சராத்திரத்தை
த்திரம் பிரமாணமென்று ஸ்தாபித்ததாய் எண்பி
திருக்கிறார். சுருதிஸ்மிருதிகள் ஹிந்துக்களனைவரு
க்கும் பொதுவானப்பிரமாணங்களாக விருக்கையில்
கமங்கள் அவற்றை தயைசெய்து ஒப்புக்கொண்ட
கள் விஷயத்தில்மாத்திரம் பிரமாணங்களாக வ
ங்கிவருகிறது. இந்த ஆகமங்களுள் ஒன்றின் யோக்
யதையைத் தீரவிசாரித்துக்காட்டுவதினால் மற்ற
வைகளின் தன்மை தானாய் விளங்குமாகையால் நா
ங்களவ்வாறே செய்ய நிச்சயித்தோம். பாஞ்சராத்
திரத்தை பிரகிருதத்திலுள்ள வைஷ்ணவர்கள் க
்யாவேசத்தால் பகவத்சாஸ்திரமென்று கூறத்து
ணிந்தபோதிலும் அதை முடிந்தவர்களின் ஆசை அ
வ்வளவுதூரஞ் செல்லவில்லை: அதை ஒருரிஷிசெய்த
ாய் எண்பித்தலேபோதுமென்றெண்ணி அவர்கள் அ
ழியை நாரதர்தலையில் கட்டிவைத்ததுமன்றி அத
ாதாரமாக ஒரு சுலோகத்தையும் பாகவதத்தி
லமைத்திருக்கிறார்கள். பாகவதம் முதல் ஸ்கந்

தம் -கூ- வது அத்தியாயததில் * "மூன்ருவதாகிய
"தேவர்ஷித்வத்தை அவரடைந்து கர்மங்களெ
"லாம் நிஷ்கர்மியமாகும்படியாக சாத்துவிகமா
"ப பாஞ்சராத்திரத்தைச் செய்தார்." என்று செ
ல்லி யிருக்கிறது. இதற்கு ஸ்ரீதரர்செய்திருக்கிற
யாக்கியானத்தில் * "மூன்ருவது என்பதினுலே ந
"ரதாவ தாரத்தைச் சொன்னூர். ஐஷி ஸ
"தையடைந்து = தெவஷி
"ஸாகூிகூமான = வைஷ்ணவ தம் தூ = வா
"ராதூாமஃ செய்தார் = சொன்னூர்." என்
பொருள்செய்திருக்கிறது. இந்த பாஞ்சராத்திரத்தி
குஒருமஹிமையைக்கற்பிக்கும்பொருட்டுஅதைநா
ரியற்றியதாக ஏற்படுத்தியதுமன்றி அந்தநாரதனை
ஷ்ணு அவதாரங்களில் ஒருவனென அந்த வியாக்கி

---

* தூதீயம் ஜஷிஸ தெவதெவஷி
கூ உவெதூஸ, தம்தூ ஸாகூ தஊாவ
வெநஷ்கூஜ்ஹூ கஊணா யதஃ.

* நாரஊாவதாரஊஹதிதீயஊதி: ஜ
ஸ வெதூ, ததூவ, தெவஷி
வெதூதூயஃ. ஸாகூதம = வெஷ்ண
தகூ = வாஜுராதூாமஃ, கூஉஷ் = உ
வாநு.

த்தில் எழுதிவிட்டிருக்கின்றமையால் அந்தக் கிரந் உண்மையாகவே நாரதரா லெழுதப்பட்டிரு போதிலும் அதின் மஹிமை யெத்தன்மையதெ விசாரிக்கவேண்டியிருக்கிறது. உண்மையில் நா ர் விஷ்ணுவேயாகில் அவரை சகலருஷிகளைக்காட் வும், மேலானவராகக்கொள்ளவேண்டுமல்லவா? தாதிசதுர்யுகங்களுக்குமுக்கியமான தர்மசாஸ்தி பிரவர்த்தகர்களை யெடுத்துரைக்கையில் பராசர ிருதியில் * "கிருதயுகத்துக்கு மனு தர்மசாஸ்திர ம்திரேதாயுகத்துக்கு கவுதமஸ்மிருதியும், துவாப த்துக்குச் சங்கலிகிதஸ்மிருதிகளும்,கலிக்குபராச ஸ்மிருதியும்,பிரமாணம்." என்றுரைத்திருக்கிறதே ிருதங்களிலும் பலமடங்குசிரேஷ்டராயிருக்கவே டய நாரதருடைய ஸ்மிருதி எந்த காலத்திற்காவ பிரமாணமென்றுரைக்கவில்லையே. இந்தப் பிரதா ஸ்மார்த்தாக்களில் அவரை ஒருவராகக் கிரஹிக்கா லும், அஷ்டாதச ஸ்மார்த்தாக்களிலாவது அவ ருவரா யிருக்கிருரோவெனில், அப்படிக்கு மில் யாக்கியவல்கிய ஸம்ஹிதை முதலத்தியாயத்தில் மனு, அத்திரி, விஷ்ணு, ஹாரீதர், யாக்கியவல்

---

* க்ருதே து மாநவாயர்மாஃ த்ரேதா மள கௌதமா, ஸ்மதா பரமாபவிதா கள ள பாராமரஸ்ம்ருதிஃ.

† மநுத்ரிவிஷ்ணுஹாரீத யாஜ்ஞவல்க்யா

" கியர், உசனர், அங்கிரஸ-, யமன், ஆபஸ்தம்பர்,ஸ
" ம்வர்த்தகர், காத்தியாயயனர், பிரஹஸ்பதி, பராச
" ரர், வியாஸர், சங்கலிகிதர்கள், தக்ஷகௌதமர்க
" ள், சாதாதபர், வஸிஷ்டர், இவர்களே தர்மசா
ஸ்திரப் பிரவர்த்தகர்கள்" என்றுசொல்லியதில் நார
தருக்கு ஒரு விரலிடங்கொடுக்கச்சரிப்படாமல் போ
னது வெகுபுதுமையாக விருக்கிறது. மேற்குறித்த
விஷ்ணுவே நாரதனென யாரேனும் முதலெடுப்பில் பி
ரமித்தபோதிலும் தர்மசாஸ்திரந் தெரிந்தவர்களின்
சஹாயத்தால் இந்த விஷ்ணுவானவர் கேவலம் ஒரு
ருஷியேயன்றி வைஷ்ணவர்களுடைய குலதெய்வ
ல்லவென்றும், நாரதர் இந்த விஷ்ணுவைக் காட்டிலு
ம் வேறானவரென்றும் எளிதிலறிந்து தெளிவார்கள்

(அசு.) இதுவன்றி சங்கர விஜயமென்னும் கிரந்த
தில் காயத்திரி பிராம்மணரைநோக்கி இவ்வாறுசபி
ததாகச்சொல்லியிருக்கிறது * " நீங்கள் கலியுகத்தி
" வேதங்களில் விதித்த கர்மங்களற்றவர்களாகவும்

---

ஸுமந்துர், யாஜ்ஞவல்க்யஸ் ஸம்வர்த்தக: கா
த்யாயநோ ப்ருஹஸ்பதி: பராசரவ்யாஸ ஸங்
லிகிதா தக்ஷகௌதமௌ, சாதாதபோ
வஸிஷ்ட: தர்மசாஸ்த்ரப்ரயோஜகா:.

* வேதோக்த கர்மஹீநாஸ்தாம் த்ரி
வாபதத்ர:, ப்ரயம்கமல ஸவஞ்ஜ்ஞவதி

தாந்திரிகாசாரபரர்களாய் ஆவீர்களென்று அவள்
கோபத்துடன் சபித்தாள்" என்றுஉரைத்திருக்கிற
. தாந்திரிகாசாரத்தை அடைதலே தண்ணிமேலேற்
ம்சிகைஷக்கு அதிகமானதாகக்கொண்டு காயத்திரி
பசபித்ததாய்ச்சொல்லியிருக்கும்இந்தப்பிரமாணத்
லே தந்திர ஸாமான்னியத்தின் கவுரவம் வெளி
ாகின்றதல்லவா? கடைசியாக வைத்தியநாததீக்ஷி
் ஏகாதசியில் சிராத்தம் செய்யக்கூடுமா கூடாதா
வன்கிற விசாரம்செய்யுங்கால் புராணங்களும் தந்
ரங்களும் ஸ்மிருதிக்கு விரோதமாக விருக்கும்போ
பிரமாணமல்லவென்று ஒதுக்கிவிட்டார். அதில் *
ஏகாதசியில் இறந்தவர்களுக்கும்அந்தத்தினத்திலே
ிய சிராத்தம்செய்யவேண்டியதென்று விதிக்கப்ப
ட்டிருக்கிறது.ஏனெனில் தாய்தகப்பன்மார்இறந்த
தினத்தில் ஏகாதசிவருமாகில் பிதிருதேவதைகளைப்
பூஜித்துக்கர்த்தா பிதிருசேஷத்தைமோந்துபார்க்க
வேண்டியதுஎன்று ஸ்மிருத்தியந்தரத்தில் சொல்லி

---

ா நாஹ ஸாா—ஷா.

* ஏகாதஶ்யா உபோஷா நாம் ஶ்ராத்தே—க்ஷ
்ருத்யுஷெ: மாதா பித்ரோ: க்ஷயாஹே
லவெஶகாதஶீயயா, ஸம்ஹாய் பித்ரெஷ
ாநு ஶ்ஷாஜிவெத்த்தித்ர ஸெவிதவிதி. கா
்ராயநோவி: உபவாஸெ யதா நித்யம்ஶ்ரா

"யிருக்கிறது. அன்றியும், உபவாஸம் நித்தியமான கால
"த்தில் நைமித்திகமான சிராத்தம் வரும்பக்ஷத்தில், பி
"திருசேஷத்தை மோந்துவிட்டு உபவாஸமிருக்கவே
"ண்டியதுஎன்று, காத்தியாயனரும் விதித்திருக்கிறா
"ர். ஆனால் ஏகாதசிதினத்தில் பிராம்மணர் சிராத்தம்
"செய்வார்களாகில் கர்த்தா, போக்தா, பிதா, இம்
"மூவரும், நரகமடைவார்கள்; ஆசௌசத்தில் நே
"ரிடும்சிராத்தத்தை ஆசௌசங் கழிந்ததன்மேல்செய்
"யவேண்டியதென்று எப்படிவிதித்திருக்கிறதோஅப்
"படியேஏகாதசியையொழித்துத்துவாதசியில்சிராத்
"தம் செய்யவேண்டியதென்று, புராணவசனமிருக்கி
"றதென்றாலோ, அதைத் தாந்திரிகர்விஷயமென்
"று ஒதுக்கவேண்டியிருக்கிறது. இல்லாவிடில்கா

---

ஸம் நைமித்திகம் பவேத், உபவாஸம் ததா குர்யா-
தாக்ராய பித்ருஸேவிதம். யத்து
புராணவசநம்: [illegible]
ஶ்ராத்தமேகாதஶீதிநே, [illegible]
[illegible] யதாஶௌச[illegible]
தம் ஶ்ராத்தம் [illegible], [illegible]
வேகாதஶீம் [illegible] த்வாதஶ்யாம் [illegible]
இதி: தத்தாந்த்ரிகவிஷயம்; கந்யாகாத்யாய-
நாதி ஸ்ம்ருதிவிரோதாத் ஸம்ஶாத்.

'த்தியாயனுதி ஸ்மிருதிகளுக்குவிரோதமாகப் பிரஸ
"ங்கிக்கவேண்டி யிருக்கும்." என்று சொல்லியிருக்கிறது. இந்தப் பிரமாணங்களா லெல்லாம் ஆதிமுதல் கடைசி நிபந்தனைக்காரர்வரையில் அநுக்தமந்யதோ க்³ராஹ்யம் (கவுரவப்பிரமாணங்களில் சொல்லாத விஷயத்தை வேறிடத்திலும் கிரஹிக்கலாம்) என்கிற நியாயப்படி ஆகமங்களையும் ஒருவேளைப் பிரமாணமாக மதித்திருந்தபோதிலும், சுருதி ஸ்மிருதிகளுக்கு விரோதமானகாலத்தில் அவற்றை ஈஷத்தாவது ஆதரிக்கவில்லையென்று ஸ்பஷ்டமாய் ஏற்படுகிறது.

இதுதவிர ஸ்ரீமத் வேதமூர்த்தி சங்கராசாரியர் அருளிச்செய்த சங்கரவிஜயமென்னும் கிரந்தத்தில், *
"ஆகம இதிஹாஸ புராணங்களிற் சொல்லியிருக்கு
"ம் ஆசாரம் வேதத்துக் கொத்திருக்கிறவரையிலே
"கிராஹியம், அதற்கு விரோதமாகில் அக்கிராஹிய
"மே." என்று சொல்லியிருப்பதாய் முன்னே குறிப்பிட்டிருக்கின்றமையால் இதைக்குறித்துப் பிரகிருதத்தில் விசேஷித்துரைக்கவேண்டியதில்லை.

கடைசியாகவைஷ்ணவர்கள் இந்தநாரதரைவிஷே

* ஆக³மேதிஹாஸ புராணோக்தாசாரஸ்ய வேதா³விரோதே⁴ க்³ராஹ்யத்வம், அக்³ராஹ்ய [illegible] [illegible].

மாய்ச் சிறப்பிப்பதில் பின்னிடையமாட்டார்களாகி லும், அவர்மாத்திரம் இதர ருஷிகளுடைய வாக்கியத் தையாவது தன்னதாய் உபயோகித்துச் சிறப்படைய வேண்டுமென்று ஆசைகொண்டிருந்தார். இதற்கு திருஷ்டாந்தமாக பராசரவாக்கியமாகிய, *"பதி,காணு "மல்போனாலும், இறந்துவிட்டாலும், ஸன்னியாஸம் "செய்துகொண்டாலும், நபும்ஸகனாயிருந்தாலும், ப "திதனாகிவிட்டாலும், இந்த ஐந்து ஆபத்துக்களில் "ஸ்திரீகளுக்கு, மறுபுருஷன் விதிக்கப்பட்டிருக்கி "ருன்." என்பதை நாரதர் தன்வாக்கியமாக உப யோகித்துப் பரிமளிக்கிருரல்லவா?

இத்தியாதி ஹேதுக்களால் ஆகமங்களின் மஹிமை நன்ருய் விளங்குகின்றமையால் இனி சிஷ்டாசார ஸ்வரூபத்தை யோசிக்கத் தொடங்குகிருேம்.

இவ்வாறு புராணங்களாலும் ஆகமங்களாலும் கைவிடப்பட்ட நம்மபண்டிதர்கள் ராமானுஜாசாரியர்முதலிய மதோத்தாரகர்களெல்லாம் இந்த அர்ச்சையை அனுஷ்டித்து அனேக நூற்ருண்டுகளாய் அதுவேருன்றி யிருக்கின்றமையால் சிஷ்டாசாரத்திருல் ஆதரிக்கப்பட்டிருக்கின்ற இதற்கு வேறுவிதப் பிரமா

---

* நஷ்டேம்ருதே ப்ரவ்ரஜிதே க்லீபேச பதிதே பதௌ, பஞ்சஸ்வாபத்ஸு நாரீணாம் பதிரந்யோவிதீயதே.

ணமாவசியகமில்லை யென்று வாதிப்பார்கள். இவர்
களெல்லாம் தங்கள் பொருட்டே அர்ச்சையை அவ
லம்பித்தார்களென்பதற்குத் தகுந்த பிரமாணமில்லை.
அவர்கள் காலத்தில் நிலைத்திருந்த இந்த அனுஷ்டா
னத்தை ஆக்ஷேபித்தால் உலகநிந்தை வருமெனப்பய
ந்தோ, அல்லது அவர்கள் ஜீவன நிமித்தமாகவோ,
அதை யவலம்பித்திருப்பார்களேயன்றி வேறுவிதமா
கக்கிரஹிக்கக்கூடவில்லை. இதற்கு திருஷ்டாந்தமாக
வேதாந்தாசாரியர் திருப்பதியிலுள்ள விக்கிரஹத்
தின் பரமாகவென்று தயாசதகமென்னும் புஸ்தக
த்தைச் செய்தபோதிலும், அதனுடைய வியாக்கி
யானத்திலுல் அவருடைய உத்தேசியம் இந்த விக்கிர
கமல்லவென்றும், பரப்பிரும்மத்தின் அனந்த கல்லி
யாண குணங்களேயென்றும் விளங்குகின்றது. இத
ற்கு அந்தக் கிரந்தத்திலுள்ள ஒவ்வொரு சுலோகத்தி
ன் வியாக்கியானமும் சாக்ஷி சொல்லுமாகிலும், ஸ்ரீ,
பூ, நீளாதேவிகள், பரமாகச்செய்யப்பட்ட சுலோ
கங்களின் கருத்து பிரும்மத்தின் அகண்ட, காருண்
ணிய, க்ஷமை, ஆநந்தங்களைப் பற்றுவதாக உரைத்தி
ருப்பதைக்குறிப்பிடுகிறோம். இவ்வாறு ஒருவர் பொ
ருட்டும், தங்கள் ஜீவனார்த்தமாயும், இத்தன்மையா
னதொழில்களைச் செய்வோருண்டோவெனச் சங்கிக்
கவேண்டாம். வித்தியாரண்ணியஸ்வாமிகளால்செய்
யப்பட்ட ஸர்வ தர்சன சங்கிரஹமென்னும் கிரந்தத்
தில் உதஹரிக்கப்பட்டிருக்கிற, பிரஹஸ்பதிவாக்கியத்

ஷைச் சற்றுயோசித்தால் இதற்குச்சமாதானம்வரும். அதில், * "ஜீவித்திருக்கும்வரையில் கடன்வாங்கியா "வது நெய்யைக்குடித்துச் சுகமாய் வாழவேண் "டியது. சாம்பலாய்விட்ட தேஹத்துக்கு மறுபடி வ "ரவேது. தேஹத்தினின்றும் விடுபட்ட இவன்பர "லோகத்தை யடைந்தானுகில், மறுபடியும் உறவு ந "ண்பர்களோடுகூட ஏன் வருகிறதில்லை; ஆகையால் "இறந்தவர்களுக்குச் செய்யும் பிரேத காரியங்கள் "பிராம்மணர்களால் ஜீவனோபாயமாக இவ்விடத்தி "ல் ஏற்படுத்தப் பட்டதேயன்றி ஈஷத்தாவது வே "றல்ல." என்று உரைத்திருக்கிறது. இவரையும் நார தரைப்போலவே பிரஹஸ்பதி பகவானென்று நம்ம வர் உரைப்பதற்கு ஹேதுவில்லாமல் போகவில்லை. இவருடைய மஹிமையைக்குறித்து, ஐத்தரீயப் பிரா

---

* 𑌯𑌾𑌵𑌜𑍍𑌜𑍀𑌵𑍇𑌤𑍍 𑌸𑍁𑌖𑌂 𑌜𑍀𑌵𑍇𑌤𑍍 𑌋𑌣𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌘𑍃𑌤𑌂 𑌪𑌿𑌬𑍇𑌤𑍍. 𑌭𑌸𑍍𑌮𑍀𑌭𑍂𑌤𑌸𑍍𑌯 𑌦𑍇𑌹𑌸𑍍𑌯 𑌪𑍁𑌨𑌰𑌾𑌗𑌮𑌨𑌂 𑌕𑍁𑌤𑌃 ? 𑌯𑌦𑌿 𑌗𑌚𑍍𑌛𑍇𑌤𑍍 𑌪𑌰𑌂 𑌲𑍋𑌕𑌂 𑌦𑍇𑌹𑌾𑌦𑍇𑌷 𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌗𑌤𑌃, 𑌕𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌭𑍂𑌯𑍋 𑌨 𑌚𑌾𑌯𑌾𑌤𑌿 𑌬𑌨𑍍𑌧𑍁𑌸𑍍𑌨𑍇𑌹 𑌸𑌮𑌾𑌕𑍁𑌲𑌃 ? 𑌤𑌤𑌶𑍍𑌚 𑌜𑍀𑌵𑌨𑍋𑌪𑌾𑌯𑍋 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍈𑌰𑍍𑌵𑌿𑌹𑌿𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌿𑌹, 𑌮𑍃𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑍇𑌤𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌣𑌿 𑌨 𑌤𑍍𑌵𑌨𑍍𑌯𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍.

ம்மணம், அ-வது பஞ்சிகை, ஐந்தாவது அத்தியாயத்
தில், விசேஷமாய் உரைத்திருப்பதை இவ்விடத்திற்
சொல்ல சந்தர்பமில்லாமைபற்றி, அவ்விடத்தை உத
ஹரிப்பது போதுமென்று நினைக்கிறோம். இந்தப்பிர
ஹஸ்பதியானவர் உபாத்தியாயர்களுக்கெல்லாம் த
லைவராகயையால், அவருடைய சொந்த அனுபவத்தின்
மேல் சொல்லிய இந்த சங்கதியானது இதரமான
நூறு பிரமாணங்களுக்குச் சமமான தாகுமல்லவா?

இப்படிக்கன்றி, இராமானுஜாசாரியர் முதலியவர்க
ள் அர்ச்சையைத் தங்கள் பொருட்டே ஆராதித்த
தாய் ஒத்துக்கொண்டபோதிலும், சுருதிஸ்மிருதிகளு
க்கு விரோதமான அவர்களுடைய ஆசாரம் நமக்கு
ப்பிரமாணமாகமாட்டாதென்றும், நமக்குப் பிரமா
ணமாகத்தக்க சிஷ்டாசாரலக்ஷண மின்னதென்றும்,
இதன் முதலத்தியாயத்தில் உதகரித்த, க - முதல்
சு - வரைப் பிரமாணங்களால், ஸ்பஷ்டமாய் ஏ
ற்படுகிறபடியால் இவ்விடத்தில் அதை மறுபடியு
ரைக்கவேண்டியதில்லை. கடைசியாக வெகுகாலமாய்
நடந்தேறிவந்ததென்பதே அதற்கொரு ஆதாரமாகில்
அதை ஆக்ஷேபிக்கவேண்டியது மில்லை, ஆக்ஷேபிக்க
எங்கட்கு மனமுமில்லை. ஏனெனில் தலைமுறை தலை
முறையாய் கொள்ளையிட்டுவந்த குடும்பத்தில் ஒரு
வன் கொள்ளை யிடாமலிருப்பதே குற்றமெனப்படு
மோ? மேலும் மலையாளத்தில் அநுதியாய் நடந்
தேறிவரும் விவாஹ மரியாதையையும் சாதுவெ

ன்றே கொண்டு அனுஷ்டிக்கவேண்டியதா யல்ல வா முடியும்? பிரமாண தாரதம்மியங்களைக்குறித்து இவ்வளவு சர்ச்சை போதுமானதாகிலும் அடிக்க டி பலபண்டிதர்கள் எங்களைக் கேட்கும் ஒருவினாவி ற்கும் இவ்விடத்தில் விடையுரைப்பது உசிதமென்று தோன்றுகின்றபடியால், அதைக்குறித்துச் சிலபேச் சுகளைச்சொல்லி இவ்வத்தியாயத்தை முடிக்கிறோம.

மற்றப்பிரமாணங்களெல்லாம் தியஜித்துவிடும் நா ங்கள், வேதத்தைமாத்திரம் ஒத்துக்கொள்வதற்குக் காரணமென்னவென்பதே அவ்வினாவாகும். இதற்கு விடையுரைக்குமுன் அந்தவினாவைச்செய்யும் பண்டி தர்கள் வேதத்திற்குட்பட்டவர்களா, அல்லவா என் பதை யறிந்துகொள்ளவேண்டும். அவர்கள் வேதத் திற்கு வெளிப்பட்டவராகில், எங்கள் வாதம் வேத த்தின்பேரில் சார்ந்திருக்கிறபடியாலும் வேதபாஹி யாள் விஷயத்தில் வேதப்பிராமாண்ணியத்தை ஸ் தாபிக்க நாங்களிப்போது மேற்போட்டுக்கொள்ளவி ல்லை யாகையாலும், பிரகிருதத்தில் அதற்கு நாங்கள் விடையுரைக்க வேண்டியதில்லையாகிலும், உலகத்தி லுள்ள இதர சுருதிகளுக்கு எந்த ஹேதுக்களைக்கொ ண்டு பிராமாண்ணியம் கல்பிக்கப்படுகிறதோ, அதே ஹேதுக்களால் வேதத்திற்கும்பிராமாண்ணியத்தை ஸ்தாபிக்கலாமென்று எச்சரிக்கிறோம். அவர்கள்வே தத்திற்குட்பட்டவர்களாகில் உபயபக்ஷத்திலும் ஒத் துக்கொள்ளப்பட்ட தஸ்தவேஜின் பிராமாண்ணிய

விசாரஞ்செய்தல், சகலசாஸ்திரத்துக்கும் விரோத மாகும். வாதியின் பிராதை ஒத்துக்கொண்டு பிரதி வாதி ஆன்சர் கொடுக்கும்போதும், சாக்ஷி விசாரிக்க வேண்டியதென்ன? ஏதாவதொருநியாயப்பிரமாணங் காட்டுவார்களாகில், அப்போது வேதத்திற்குப் பிரா தானியதையை ஸ்தாபிக்கவேண்டியது எங்கள் கட மையெனஒப்புக்கொள்வோம். இவ்வாறு இந்தக்கேள் வியைக்கேட்க, நமதன்பர்களுக்குப் பாத்தியமாவது, அதற்குவிடையுரைக்க நாங்கள் கடமைப்பட்டாவது இராவிடினும், அவர்கள் திருப்தியின்பொருட்டு அதை யும் சற்றுகூறுகிறோம். வேதம் அபவுரஷேயமென்று அனைவராலும் ஒத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. அ பவுரஷேய மென்பதினாலே தேவகிருதமென்று ஏ ற்படுகிறதல்லவா? ஐத்திரீயப்பிராம்மணம், முதலாவ து பஞ்சிகை, முதலாவது அத்தியாயத்தில்*"பொய் "சொல்வோர்யார்? மெய்சொல்வோர்யாரென்று சி "ஷியனால் கேட்கப்பட்டுதேவர்கள்மாத்திரமே பொ "ய்தீர்ந்த மெய்யுரைப்பவர்களென்றும், மனிதர்சா "தாரணமாய் பொய்யுரைப்பவரோ"என்றும், உரைத் திருப்பதினாலும், வேதம் அபவுரஷேயமென்றும், பு

---

* [illegible]

ராணுதிகள் மனுஷ்யகிருதமென்றும், ஏற்படுகிறபடி யாலும்,வேதத்தினிடத்தில்அபாதிதப்பிராமாண்ணிய தா புத்தியுண்டாகவேண்டியதற்கும், புராணுதிகளில், சங்கை ஜனிப்பதற்கும், போதுமான ஹேது மேற்குறித்த சுருதிவாக்கியத்தி லடங்கி யிருக்கின்றமையால் இதற்கு வேறு ஹேது சொல்லப்புகுவோமாகில், சுவர்ணத்திற்குமுலாம்பூசுவதற்கும், ஜாஜிபுஷ்பத்தில் மணமேற்றுவதற்கும், இந்திரதனுசில் வர்ணம்வைப்பதற்கும், ஒப்பாகும். புராணுதிகளும், வேதத்திற்கு உபப்பிரும்மணமே யென்பார்களாகில் அதைதக்குறித்து முன்னேயே விசாரித்துவிட்டோம்.

கடைசியாக சுருதி ஒன்றுதவிர மற்றப்பிரமாணங்களையெல்லாம், அடியோடு மதிக்காமல் அவமதிக்க வேண்டுமென்பது எங்கள் கருத்தல்ல. சுருதிக்கு விரோதமாகில் மற்றப்பிரமாணங்கள் கிராஹியமேயல்லவாகிலும், மற்றவிஷயங்களில் யுக்தியுக்தமான சங்கதிகள் எந்தப்புஸ்தகங்களிலிருந்தாலும் எங்களுக்குக் கிராஹியமே. திருடாதேயென்கிறசொல் கள்ளன் வாயில்வந்தாலும், பொய்யாதேயென்கிறசொல் புளுகன்வாயில்வந்தாலும், அந்தச்சொற்கள் எங்களுக்குக் கிராகியமேயாம். முதலாயிரமென்னும் வைஷ்ணவப்பிரபந்தத்தைத் தாயுமானவர் பாடலுச்கு மேலானதென்றுவது, சமமானதென்றுவது, கேவலம்துரபிமாணத்துக்கு ஆள்பட்டு நாங்க ளூணாக்கமாட்டோமாகிலும், அந்த முதலாயிரத்திலே ரசமானவற்றைக்.

கிரகித்துக்கொள்ளவாவது, தாயுமானவர் பாடலில் பாதகமானவை யிருக்குமாகில் அவற்றைத் தியஜிக்கவாவது, நாங்கள் பின்னிடைய மாட்டோம். ஏனெனில் உண்மை யெவ்விடத்திலிருந்தாலும், அது கடவுளின் உண்மையேயன்றி வேறல்லவே? அப்படியிருக்க விஷயத்தின்மேல் திருஷ்டியை விட்டு, வக்திருவைலக்ஷணியமில்லையென்கிற ஹேதுவைப்பற்றி திருவள்ளுவநாயனுர் முதலியவர்களியற்றிய பெருநூல்களையெல்லாம் நம்மவர்மதிக்காமல் விட்டுவிடுகின்றனரல்லவா? அக்கினி யெவ்விடத்திருந்தாலும் அதை அழுக்குபற்றுமோ? குப்பை யெவ்விடத்திருந்தபோதிலும் அதற்குப் பாரிசுத்தியமுண்டாகுமோ? விஷயத்தினுல் வக்தாவுக்கு சிறப்புண்டாகுமேயன்றி, வக்தாவினுல் விஷயத்துக்கு ஒருக்காலும் சிறப்புண்டாகமாட்டாது.

இவ்வாறு சுருக்கமாக அர்ச்சைக்கு சாதகமாயும் பாதகமாயுமுள்ள பிரமாணங்களையும், அவற்றின் தாரதம்மியங்களையும், குறித்து விசாரித்தோமாகையால் இனி அர்ச்சையை யவலம்பிப்பதினுல் விளையத்தக்க சாதக பாதகங்களை மூன்ருவது அத்தியாயத்தில் யோசிக்க நிச்சயித்திருக்கிறேம்.

# மூன்றாவது அத்தியாயம்.

---

கடந்த இரண்டுஅத்தியாயங்களில் அர்ச்சைக்கு அநுகூலமாயும் பிரதிகூலமாயுமுள்ள பிரமாணங்களையும், அவற்றின் கவுரவதாரதம்மியங்களையும் குறித்து ஒருவாறுவிசாரித்துமுடித்தபடியால், இனி அர்ச்சையை அவலம்பிப்பதினால் விளையத்தக்க சாதகபாதகங்களைக்குறித்துச் சில பிரஸ்தாபங்கள் செய்கிறோம். எங்கள்புத்தியை எவ்வளவு கிலேசப்படுத்தி யோசித்துப்பார்த்தபோதிலும், அதனால் விளையத்தக்க பிரயோஜன மின்னதென்று தினையளவும் விளங்கவில்லையாகையால், நம்ம அன்புள்ளபண்டிதர்கள் அவற்றையெடுத்துரைக்கும்பக்ஷத்தில், அப்போது அதை யோசித்துக்கொள்ளலாமென்று நிச்சயித்தோம். அர்ச்சையால் விளையும் நன்மை யொன்றேனுமில்லாமையால், அதைக்குறித்துப் பிரஸ்தாபிக்கக் கூடாமைபோலவே, அதினால் விளையும் அநந்தமான தீமைகளையும் எழுதிமுடிப்பது அசாத்தியமாகிலும், சிறிதைமாத்திரம் இவ்விடத்தில் உரைத்தால், மற்றவை புத்திமான்களுக்குத் தாமாய் விளங்குமாகையால், அவ்வாறு செய்தலே போதுமென்று நம்புகிறோம்.

க-வது. அர்ச்சையென்னும் பாவத்தொழிலானது கடவுளின் கருத்துக்கும், அக்கருத்தைவிளக்கும்

வதத்துக்கும், விரோதமாயிருக்கின்றமையால், அ
வே பிரபலபாதகமாக விருக்கிறது. கடவுளானவர்
மது கண்வாய்முதலிய இந்திரியங்களுக்குப் புலப்
டமாட்டாரென்பதற்குப் பல சுருதிப்பிரமாணங்க
முன்னாலே யுரைக்கப்பட்டபடியால், புனருக்தி ஆ
சியகமில்லை. அவரை யறிந்துகொள்வது நமது நீங்
லாக்கடமையென, * "அவரொருவரையே அறிந்
துகொள்." என்பது முதலிய அனேக சுருதிவாக்
யங்களால் ஏற்படுகிறது. † "இப்பிறப்பிலே பரப்
பிரும்மத்தை அவருடைய சுவரூபத்தில் அறிந்து
கொண்டால் நிலையுண்டாகும்; இப்பிறப்பில் அறி
ந்துகொள்ளாவிட்டால் அளவற்ற துன்பமேயுண்
டாகும்." என்பது முதலிய அனேக சுருதிவாக்கி
ங்களால், அந்த உத்தரவாதத்தின் தன்மை வெளி
ாகும். அவரை அறியும்வழி யென்னவெனில், ‡ "ம
னதினால்மாத்திரமே அவனை யறியக்கூடுமேயன்றி,
அவனை யறியப் பல வழிகளில்லை. பல வழிகளிருப்

---

* தமேவைகம் ஜாநத².

† இஹ சேத³வேதீ³த³த² ஸத்யமஸ்தி; ந சே
தி³ஹாவேதீ³ந்மஹதீ விநஷ்டி:.

‡ மநஸைவேத³மாப்தவ்யம் நேஹ நா
நாஸ்தி கிஞ்சந. ம்ருத்யோ: ஸ ம்ருத்யுமாப்நோதி ய இ
ஹ நாநேவ பஶ்யதி.

"பதாய் மதிப்பவன் மிருத்தியுவினின்றும், மிருத்தி "யுவையே அடைகிறான்." என்றும்; * "தியானமா "ர்க்கத்தினாலே, மறைந்திருக்கும் தேவனை அறிய "வேண்டியது." என்றும்; † "தபசினாலே பிரும்மத் "தை அறிந்துகொள்." என்றும்; இன்னும் அநந்தவா க்கியங்களாலும், மனதொன்றுதவிர வேறொன்றாலு ம் அவனை யெட்டிமுடியாதென்றும் ஸ்பஷ்டமாய் விதித்திருக்கிறது. வேதத்தில் பலோத்தேசியமாக வி திக்கப்பட்டிருக்கிற அனேகதொழில்களைச் செய்யா மையினாலே, அப்பயன்கள்மாத்திரம் கைக்கூடிவரா மல் போகுமேயன்றி, இதரபாதகங்களொன்றும் வி ளையாது. ஆனால் பிரும்மத்தை உபாசிக்கவேண்டிய மார்க்கத்தைக்குறித்த விதிகளை வழுவாமல் அனுஷ் டிப்பதினால் பிரபலப்பிரயோஜனம் கிடைப்பதுமாத் திரமேயன்றி, அதில் ஈஷத்தாவது தவறினால் மீட்க க்கூடாததுன்பம் விளையுமென்று கண்டோக்தமாய்ச் சொல்லியிருக்கிறது. கடைசியாக வேதத்தில் சொ ல்லிய விதியை அனுஷ்டிப்பதினால் யாதொருபயனு மில்லாவிடினும், அனுஷ்டிக்காமையால் அளவற்ற து ன்பமுண்டாமெனில், அத்துன்பநிவாரணமே ஒரு பெரும்பயனாகுமல்லவா? சாமானியமாய் வேதவிதி

---

* த்யாநநிர்மதநாதப்யாஸாத்தேவம்
பஶ்யேந்நிகூட்ஹவத்.

† தபஸா ப்ரஹ்ம விஜிஜ்ஞாஸஸ்வ.

யைத் தவறுவோரைக்குறித்து மனு சொல்லிய வாக்கியத்தைச் சற்று கவனிக்கவேண்டியது. அவ்வாக்கியம் இதின் முதல் அத்தியாயம், கூ-வது பிரமாணத்தில், குறிக்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு நம்மமீது சுமந்திருக்கும் உத்தரவாதத்தைச் செலுத்தாவிடில், நாம் கரையேறும்வழி யெதுவாம். நம்மசக்தியை மீறி வேதம்விதித்தால் நாமென்னசெய்யக்கூடுமென ஆக்ஷேபிக்கவிசையாது. ஏனெனில், நம்முடைய சக்தி யிவ்வளவென்று அறிந்துகொள்ளாமல் கடவுள் ஆக்கியாபித்தாரெனக்கூடுமோ? அப்படியாகில், அவருக்கு சர்வக்கியத்துவமேது? இதுநிற்க, கடவுளால் நமக்களிக்கப்பட்ட ஒவ்வொரு அவயவமும் பழக்கத்தால் பலமடைதலும், பழக்கமில்லாவிடில் சோர்வடைதலும், லோகப்பிரசித்தம். ஒருநாளும் நடக்காமல் இராஜபோகத்திலிருக்கும், ஒருவனுடைய கால்கள் சோர்வடைகின்றமையால், எப்போதாவது இரண்டுமயில்தூரம் நடக்கும்படிநேரிட்டால், அவனுக்குண்டாகும் உபத்திரவத்தை வர்ணிக்கப் பலகவிகள் வேண்டியிருக்கின்றனரல்லவா? அவனே தினந்தோறும் கிரமக்கிரமமாய் நடந்து பழகுவானாகில், முன் சோர்வடைந்திருந்த கால்களே வெகு பலமடையுமென்பதில் சந்தேகமுண்டோ? தொம்பர்செய்யும் பலவிசித்திர விநோதங்களுக்கு, அவர்களுடைய சரீரப்பயிற்சியைவிட வேறெதைக் காரணமெனக்கூடும்? தேகாவயவங்கள் விஷயத்தி

த்திலமாத்திரந்தா னிப்படியெனக்கொள்ளவேண்டா ம். பாலியததில் இரண்டும் மூன்றும், ஐந்தென்பதற்கு கையினால் விரல்கள்விட்டு, வாயினாலுச்சரித்து, பலதரம் பழுதுபார்த்தும் பிசகிப்போம் சிறுவனே, பழக்கத்தின் வலுமையாலேயல்லவா சுவல்பகாலத்தில் வெகுகடினமான கணக்குகளையெல்லாம் மனதிலே தியானித்து முடிக்கவல்லவனாகிறான். இப்படிக்கிருக்கையில், நாம் பிரும்மதியானத்தில் மனதைப்பயிலாமையாலேயல்லவா மனதிற்கு வலுமைகுன்றி அவர் சுவரூபத்தையறியக்கூடாமல்போகிறது? வேதத்திற்குறித்ததுதவிர வேறுவழியில்லையென்றிருப்போமாகில், நாம் தியானத்தில் முயன்றேயிருப்போமென்பதிலும், அப்படி முயல்வோமாகில் அதற்குரிய பயனை யடைந்தேயிருப்போமென்பதிலும், சந்தேகமேயில்லை. அப்படிக்கன்றி பயனற்ற சோம்பேறித்தொழிலை நற்றொழிலென்றுகொள்ளவேயல்லவா நாம்முடியவும் சோம்பேறிகளாய்நின்று, பெரும்பயனெல்லாம் இழக்கும்படி நேரிட்டிருக்கிறது. அருபியாகிய பிரும்மத்தை யெப்படி மனதினால் தியானித்து முடியுமென நம்ம பண்டிதர்கள் கேட்பார்கள். இந்த விக்கிரக ஆராதனத்தை யேற்படுத்தியவர்களே, கலியுகத்துக்கு முன்னுள்ள மூன்றுயுகங்களிலும், அனைவரும் தியானத்தையே அனுசரித்தார்களென்று ஒத்துக்கொள்ளுகிறார்களல்லவா! அவர்களால் தியானிக்கக்கூடிய விஷயம் இக்காலத்

லுள்ளவர்களுக்கு அசாத்தியமாவதற்குக் காரண
மன்ன? அவர்களுடையமனது பொன்னாலும், இ
ர்கள்மனது இரும்பாலும், செய்யப்பட்டனவெனக்
டுமோ? முற்காலத்தில்வாழ்ந்த தீரர்கள் மனதிற்
மெட்டாத அநந்த விசித்திரமான சாஸ்திரவிஷய
களையெல்லாம் இக்காலத்தார் அறிந்து அனுஷ்டிக்
கயில், பிரும்மோபாசனமார்க்கமொன்றில்மாத்தி
ம் இவர்கட்குச் சக்தியில்லை யென்பது யுக்திக்குப்
பாருந்துமோ? அதை விதித்த வேதத்துக்குப்பொ
ந்துமோ? அதை விரும்பிய கடவுளின் கருத்துக்
த்தான் பொருந்துமோ? இதின் இரண்டாவது அ
தியாயத்தில் குறித்த பிரஹஸ்பதி வாக்கியத்தில்
சால்லியவாறு, சுவல்பகாலத்துக்குமுன் முற்றுங்
படிகளாகிய சில பிராம்மணர் தங்களுக்கு ஜீவ
ுபாயமாக இச்சண்டாள அர்ச்சையை ஏற்படுத்த
வயல்லவா, அனைவரும் அவர்கள் பேச்சைநம்பி
மோசம்போய் மனுஷிய ஜன்மத்துக்குக்குறிப்பாகிய
தியானமார்க்கத்தை யிழக்கும்படி நேரிட்டது? க
டைசியாக ரூபமில்லாததற்கு ரூபமுண்டென்று சொ
ல்லவேயல்லவா, அதைநம்பி மோசம் போனவர்க
ளுக்கு, பிம்பமின்றி எப்படி தியானிக்கிற தென்கி
ற சங்கை ஜனிக்கிறது! முற்காலுள்ளவர்கள் எப்ப
டித்தியானித்தார்களென்று விசாரிப்போமாகில், தெ
ளிவு பிறக்குமென்பதில் சந்தேகமில்லை. நமக்குள்
ளும் வெளியும் கடவுளானவர் அநந்த பதார்த்தங்க

ளைச்சொல்லரியவிசித்திரமாய்சிருஷ்டித்துக்,காத்து, அழிப்பதையும், அவற்றிற்குரிய சிநேக துவேஷாதி பரஸ்பரஸம்மந்தங்களையும், பரிசோதிக்குந்தோறும், அவரெங்குமிருந்து, செய்யாமற்செய்து, உருவின்றி அவரதுதொழிலினாலும்,அநந்தகலியாணகுணங்களா லும், விளங்குவார். இதுதான்உண்மையானகருத்தெ ன்பதை உத்தரநாராயணம் என்னும் சுருதி ஸ்தாபிக் கின்றது. அதில் * "பிறக்கத்தக்கவரல்லாத அவர் "வெகுவிதமாய்க் காரணகாரியரூபமாக விளங்குகி றார்" என்று சொல்லியிருக்கிறது. இந்த வாக்கியத் தை நம்ம பண்டிதர்கள் ராமகிருஷ்ணாதி யவதாரங் களுக்கு ஆதாரமென்று வாதிக்கலாம். ஆகிலும் சற் று யோசிப்போமாகில், இப்பொருள் சீரானதல்ல வென்றே ஏற்படும். ஏனெனில் முதலில்பிறக்கத்தகா தவரென்று சொல்லப்பட்ட பரப்பிரும்மமே மீணுயு ம், நண்டாயும் பிறந்தாரென்பது பூர்வோத்தர வி ரோதமாகுமல்லவா? அன்றியும், சாதாரண அவதா ரமே இந்தவாக்கியத்தின் கருத்தாகில் "ஜாயதே" என்னும் வினையே போதுமானதாயிருக்கையில், "வி ஜாயதே" என்றேன்சொல்லவேண்டும்? அதிலுள்ள 'வி' என்னும் உபஸர்க்கபலத்தால், உலகத்திலுள்ள பண்டங்கள் சாதாரணமாய்ப் பிறப்பதுபோலன்றி, அவர் லோகவிலக்ஷணமாகத் தோன்றுகிறாரென்னும்

---

* அஜாயமாநோ பஹுதா விஜாயதே.

ாருளுண்டாகிறது. அதென்னவெனில், கரசரணத்
வயவங்களுடன் பிறக்காமல், அவர் காரண கா
சம்மந்தத்தால் நமது ஹிருதயத்தில் உதிக்கின்
ொன்பதாகும். இதை நாங்கள் கேவலம் யுக்தியா
செய்த பொருளென்று மலைக்கவேண்டாம். இவ்
க்கியத்துக்கு மஹீதரர் செய்திருக்கிற பாஷியத்
நப்பார்ப்போம்.

அதில் * "யார்அஜாயமானரோ = பிறப்பற்றவ
ரா, (அவர்) நித்தியராகக்கொண்டு, வெகுவிதமா
= காரியகாரணரூபமாக, விஜாயதெ =(நமதும
ாதில்) உதிக்கிறார்" என்றுசொல்லியிருக்கிறது. இ
கு வித்தியாரணியரும் இவ்வாறேபாஷியம் செய்
ருக்கிறபடியால் அதையும் உரைப்பது அனுவசியக
மன்று நம்புகிறோம். மேற்குறித்த சர்ச்சையினால்
ர்ச்சையை அனுசரித்தல் சுருதிபிரமாணங்களுக்கு
ரோதமென்பதும்தவிர நமது விருத்திக்கும் ஹா
யாய் முடிந்ததென விளங்குகிறதல்லவா.

உ-வது.— இந்தமார்க்கம் நமது யுக்திக்கும், அடுக்
ாத காரியமாயிருக்கிறது. பிரகிருதத்தில் நம்ம ப

---

* யஸ்ருஜாயமாநஃ = அஜந்மா நஃ, நி
த்யஸ்ஸந், வஹுதா = காயகாரணரூபெண
ா, விஜாயதெ = ப்ரபவதோரூபெண உத்
யதெ.

ண்டிதர்களைப்போன்றவர், தங்கள் சகூதியின் தா
லத்தை மனதிற்கொண்டு பலவித குயுக்திகள் செ
தபோதிலும் உண்மையையோசிக்குங்கால், அவர்க
ள் விக்கிரகத்தையே தெய்வமென்று நம்பி அனுஷ்
டிக்கிறார்களென்பதில் சந்தேகமில்லை. ஏனெனில் மு
தல்தரம் பண்டிதர்கள்கூட யாதொரு விக்கிரகத்தை
க்கண்டு ஆநந்தம் அடையும்போது "இந்த திவ்
"ய மங்கள விக்கிரகத்தின் சவுந்தரியம் அன்னிய
"திருசியம்; நானெங்கும் கண்டறியேனெ" ன்
றார்கள். ஒருவேளை யிது உண்மையல்லவென்று
ம்ம பண்டிதர்கள் உரைப்பார்களாகையால், "
"ன்னமுதனைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக் க
ணாவே" என்று அவர்களுடைய ஆழ்வார்களில்,
ருவர் சொல்லிய வாக்கியத்தை இவ்விடத்தில் உ
கரிக்க வேண்டியிருக்கிறது. தீபஹாரத்தி, கர்ப்
ரஹாரத்திமுதலிய உபசாரங்கள் கேவலம் விக்கி
கத்துக்குச் செய்யப்படுகிறதோ, அல்லது நம்மவ
இப்போது வாதிக்கிறவாறு அதற்குள்ளிருக்கிற தே
று அதிருசியமான பதார்த்தத்துக்குச் செய்யப்ப
கிறதோவென்பதையும், சற்று கவனிக்கவேண்டி
து. இயல்பிலே நமது கண்களுக்கு விளங்காதபொ
ருளை ஆயிரம் விளக்கேற்றிப்பார்த்தாலும் விளங்க
தல்லவா? ஆகையால் விக்கிரகங்களின் அவயவ
களிலுள்ள மூலை முடக்குகளெல்லாம் நன்றாய் வி
ங்கவேண்டுமென்பதே தீபஹாரத்திமுதலிய உபசா

ளின் உத்தேசியமென்பதில் சந்தேகமோ? இவ
ள் தொழுவது விக்கிரகத்தையேயன்றி வேரு
றையுமல்லவென்பதற்குக் கோயில்களில் நடந்தே
ரும் ஆசாரங்களில் எண்ணரிய திருஷ்டாந்தங்
தாமாய் விளங்குமாகையால், அதை இவ்விடத்
விரித்துரைக்கவேண்டிய ஆவசியகமில்லை. கே
ம் பிரபஞ்சவேதிகள்கூட பரப்பிரும்மத்தின் அ
மித கல்லியாணகுணங்களை ஒத்துக்கொள்ளுகிரு
ள். இவ்வாறு அனைவராலும் ஒத்துக்கொள்ளப்ப
ருக்கிற எண்ணரிய குணங்களில் ஒன்றையாவ
விக்கிரகத்தில் காணக்கூடுமோ? ஒருசாணிடத்தி
அடங்கும் இந்த அசேதன பதார்த்தத்துக்கு சர்
வியாபகத்துவமேது? சர்வக்கியத்துவமேது? நே
றுத் தவலையாயும், இன்று விக்கிரகமாயும், நாளைத்த
லப்படிகமாயும், இன்னும்பற்பல அவதாரங்களெ
க்கும் இதற்குப் பிறப்பும் இறப்பு மில்லையெனப்
பொருந்துமோ? கட்டியகட்டை யவிழ்க்கவும், உ
க்கவெடுக்கும் கன்னுனை யெதிர்க்கவும், ஒரு அடி
ரவும், மாட்டாதபொம்மையிடத்தில் சர்வ சக்தி
துவம் எப்படியிருக்கும்? இவ்வாறு இழுத்த வ
யெல்லாம் ஆடுவதே பக்த பராதீனத்துவமென
ரேனும் கூறுவார்களோ! அப்படியாகில் அது
க்தர்கையில்மாத்திரமேயன்றி மற்றவர் கையிலு
, முற்றும் சுவாதந்திரியமற்று பாரதந்திரியமு
ளதாகவே யிருப்பதற்குக் காரண மென்னவாம்?

ஒரு விதத்தில்மாத்திரம் பிரும்மத்துக்கும் பிம்பத்துக்கும் சாதிரிசியமுண்டெனில் நாங்கள் ஒத்துக்கொள்வோம். பிரும்மத்தின் கலியாண குணங்களையும் சொல்லிமுடியாது, பிம்பத்தின் ஹேய குணங்களையும் சொல்லிமுடியாது. இத்தன்மையான அதிகாயமான பதார்த்தத்தை நோக்கி நீயே பிரும்மமென்போமாகில் இணையற்ற ஒரு தனிநாயகனாகிய பரப்பிரும்மம் நம்மை ரக்ஷிப்பாரோ சிக்ஷிப்பாரோ! நமக்குள் ஒருவருக்கொருவருள்ள ஞானதாரதம்மியத்தினால், ஒருவனைப் பண்டிதனெனவும், மற்றொருவனைப் பாமரனெனவும் நாம் வியவஹரித்தபோதிலும், ஞானமே தேகமாகிய பிரும்மத்தின் சர்வக்கியதையுடன் ஒப்பிடும்போது, நாமனைவரும் அக்கியனென்றே முடியுமல்லவா? இத்தன்மையான நமக்குள் ஒருவரையொருவர் “முட்டாளே, நாயே, பேயே” என்றழைக்கும்போது நமக்கு அசஹியமான ஆக்கிரகமுண்டாகுமெனில், ஞானநந்த சுவரூபியாகிய கடவுளை நோக்கி “கல்லே, மண்ணே, காரையே” என்பதுமாத்திரமேயன்றி, அவரை அவ்வாறே மதிப்போமாகில், அவரது திருவுள்ளத்துக்கு அது எவ்விதமாய்ப்படவேண்டியதோ அதைச் சற்று கவனிக்கவேண்டியது. இதுபற்றியே யல்லவா பாகவதத்தில் இக்கொடியதொழிலை மற்ற உபாஸனமார்க்கங்களுடன் ஒ

ற்ம்போது * "நான் எப்போதும் சகல பூதங்களி
லும் அந்தராத்மாவாக வசித்துக்கொண்டிருக்கை
யில், மனிதன் அதை யறியாமல் அர்ச்சையாகிய
பரிஹாஸத்துக்கு என்னை யுட்படுத்துகிருன்" எ
று சொல்லியிருக்கிறது. குழந்தைகள் திட்டுவதை
கேட்டுப் பெரியோர் கோபிப்பார்களோ, ஆகையா
நமது சரிதையைக்கண்டு கடவுள் திருவுளத்தில்கோ
ளமுண்டாகமாட்டாதென சிலர் வாதிக்கலாம்.குழ
தைகள்திட்டுவதைக்கேட்டுக் கோபமுண்டாகாமை
ாத்திரமேயன்றி ஆநந்தமுண்டாவதும் உண்மை
ய. இதற்குக் காரணமென்னவென்று விசாரிக்கப்
குங்கால் குழந்தைகளுக்குத் தாங்கள் சொல்லும்
சாற்கள் திட்டென்றுகூட அறிந்துகொள்ளக்கூடா
ஞானசூனியத்துவமேயென்று விளங்கும். பூர்ண
கியானமில்லாவிடினும் ஆறுவயதிற்கு மேற்பட்ட
றுவர் சொல்லும் துர்பாஷையினுல் கோபம் விளே
கிறதல்லவா? ஆகையால் நாம் முற்றும் ஜடராயி
நக்கும்பக்ஷத்தில் நாமெப்படிசெய்தாலும், பாதக
ிராது. அப்படிக்கன்றி கடவுளானவர் தமது ஸ்வரூ
த்தை விளக்க வேதத்தையும், பிரபஞ்சத்தையும் அ

---

* அஹம்ஸர்வேஷு பூதேஷு பூதாத்மாவஸ்தித ஸ்ஸதா, தமவஜ்ஞாய மாம் மர்த்ய: குருதே அர்ச்சா விடம்பநம்.

ஊமத்து, அதை அறிந்து அனுஷ்டிக்க நமக்கு புத்தியையும் சக்தியையும் அளித்திருக்கையில், அவருடைய சுவரூபத்தின் தன்மை நமக்குத்தெரியாதென்றுவது,தெரிந்திருந்தும் அனுஷ்டிக்கச் சக்தியில்லையென்றுவது சொல்வோமாகில் அது சமாதானமாய் ஏறுமோ? அப்படிக்காகில் உலகத்தில் ஒருவித பாபபுண்ணியமு மில்லையென்றல்லவா சொல்லவேண்டும்? இவ்விஷயங்களில் ஸ்தூல சூக்ஷமங்களபாரமாயிருந்தும் நாம் உத்தரவாதத்தை ஒப்புக்கொள்ளுகையில் அர்ச்சாவிஷயத்தில்மாத்திரம் நமக்கு உத்தரவாதமில்லையெனக்கூடுமோ? நமக்கு சகலவிஷயத்திலும் சர்வக்கியதை யில்லையென்பது உண்மையேயாகிலும், பிரகிருத விஷயத்தில்மாத்திரம் தேடவேண்டிய ஆவசியகமின்றியே, எடுத்தவிடத்திலெல்லாம் வேதம்முறையிடுகையில், "உதட்டில்வாழைப்பழமிருக்கிறது உள்ளேதள்ளுவாருண்டோ" என்போமாகில் நாம் அடையவேண்டிய பிரயோஜன மின்னதென்று சொல்லவேண்டுமோ? சாதாரண விஷயங்களிலெல்லாம் இரவும் பகலும் முயலும்நாம் அத்தியாவசியகமான பகவத்தியானத்தைமாத்திரம் ஒரு விஷயமாகவே மதிக்காமலிருந்துவிட்டு, அது கடினமானமார்க்கமென்பது வெகு புதுமை. "எறும்பூறக்கல்தேயும்," "அடிமேலடியடித்தால் அம்மியும் நகரும்," என்னும் பழமொழிகளின் உண்மையை இதரவிஷயங்களில் ஒப்பி அ

ஷ்டிக்கும்நாம், பிரகிருத விஷயத்தில்மாத்திரம்
ப்படிச்செய்யாமைக்குக்காரணமென்ன? இந்தப்பா
த்தொழிலை யனுஷ்டிப்பதினால் பிரபலமான பகவ
ணிக்கிரகம் உண்டாவதுமன்றி, அதற்குக்கக்ஷி கட்
த்தலைப்படுவோமாகில், மற்றஜந்துக்களுக்கில்லாத
றந்தபேருகிய புத்தியை நமக்களித்ததற்காக நமது
ருதக்கியதையை விளக்கவேண்டியதுபோக, உள்
தையில்லையில்லையென்று சொல்லி கிருதக்கினரா
முழுகிப் போவோமல்லவா? உலகத்தில் எவ்விதது
்கிருத்தியத்தைச் செய்வோனும் ஒருவேளை கதிய
டையக்கூடுமாகிலும், கிருதக்கினனுக்குமாத்திரம் ஒ
க்காலும் கதியில்லையென்று,—

"எந்நன்றிகொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்நன்றிகொன்றமகர்க்கு."

என்று திருவள்ளுவநாயனாரும் விதித்திருக்கிறாரல்
லவா. உலகவழக்கமும் இதற்கிசைந்தே யிருக்கிறதல்
லவா? ஜாரன், ஜாதிகெட்டவன் முதலியவர்களை
யெல்லாம் விலக்காதநாம், நம்மிடத்திற்பெற்ற நன்
றியை மறுப்பவனைத்துரோகி யென்றும், சண்டாள
னென்றும் கடிகின்றனமல்லவா? கடவுளானவர் அ
ன்புகூர்ந்து அருமையாம் பேறளித்தும், இல்லையில்
லையென்று முறையிடுவோமாகில் இல்லாமலே செய்
வாரென்பதில் சந்தேகமுண்டோ?

நாம்விக்கிரகத்தையே தெய்வமென்றுகொள்ளும்ப
க்ஷத்தில் இதெல்லாம்சரியேயென்று ஒப்புக்கொண்டு,

நம்மவர் சிலயுக்திவாதங்கள் செய்கின்றமையால் அ
வற்றைச் சற்று யோசிக்கவேண்டியதா வசியகமாகி
றது. முதலில்நாம் விக்கிரகத்தையேஆராதிப்பதில்லை
யென்றும்,அதற்குள் ஆரோபிக்கப்பட்டிருக்கும் பிரு
ம்மத்தையே தொழுகிறேமென்றும் அவர்களுரைக்
கிறார்கள். சகலபூதங்களிலும் அந்தரியாமியாக விரு
க்கும் பரபிரம்மத்தை யாராதிக்கிறேமெனில் பிரய
த்தினமன்றி பார்க்குமிடங்களிலெல்லாம் விசித்திர
விநோதமான பூதங்களிருக்கையில் பிரயத்தினபுரஸ்
ஸரமாய் விசேஷத் திரவியச்செலவுசெய்து விக்கிர
ஹமென்னும் ஒரு பண்டத்தைப் படைப்பதற்கும், அ
தில் மந்திரங்களையோதி பிரும்மத்தை ஆவாஹனம்
செய்வதற்கும் காரணமென்ன? அப்படி யாவாஹ
னம் செய்யாதவரையில் அந்தரியாமியாகக்கூட பி
ரும்மம் அதிலில்லையென்றுவது, அல்லது ஆவாஹ
னம்செய்தபிறகு அதில் இரட்டிப்புப்பிரும்ம மிருக்
கிறதென்றுவது கொள்ளப்பொருந்துமோ? நம்மவ
ர் மந்திரபலத்தால் பிரும்மத்தைக்கட்டி விக்கிரஹத்
துக்குள்ளடைக்க சக்தரென்றே ஒப்புக்கொண்ட
போதிலும்,கடைசியில் அது விக்கிரஹத்தைக்காட்டி
லும் வேருன அதிருசியமான பொருளென்னும் பக்ஷ
த்தில், அவ்விக்கிரஹத்தால் அடையக்கூடிய பயனி
ன்னதென்று விளங்கவில்லை. அதிருசியமானதைத் தி
யானத்தினால்மாத்திரம் அறியக்கூடுமாகையால் நம்
மபண்டிதர்கள் அதிருசியமென்றே ஒத்துக்கொள்ளு

பிரும்மம் விக்கிரஹத்துக்குள்ளிருந்தாலும்வெளியி
லிருந்தாலும்நமதுகண் வாய் முதலிய இந்திரியங்களி
னுல்அறியக்கூடாததேயல்லவா? இரண்டாவது, பிரு
ம்மத்தை மனதினுலேஎட்டுவது கடினமாயிருக்கின்ற
மையால் அதற்குதவும் பொருட்டு விக்கிரஹத்தைய
வலம்பிப்பதாக நம்மவர்வாதிக்கிருர்கள். குதிரை
யை முற்றுமறியாத ஒருவனுக்கு அவ்விஷயத்தில்
ஞானமுதிக்கும்பொருட்டு ஒருகுருவியைக் காட்டுவ
தினுல் பயனுண்டோ? அவ்விரண்டிற்கும் சிலவிஷய
த்தில் சாம்மியமிருந்தபோதிலும் ஆவசியகமான இர
ண்டொரு விஷயங்களில் சாதிருசிய மில்லாமை
யாலே குதிரை இம்மாதிரியானதென்று விளக்க
க் குருவி சமர்த்த மாகாதெனில், ஒரு விஷயத்
திலாவது சாதிருசியமற்றிருக்கும் இரண்டு பதார்
த்தங்களில் ஒன்றையொன்று எப்படி விளக்கமா
ட்டும்? சிருஷ்டிஸ்திதி சம்ஹார கர்த்திருக சர்வ
க்கிய சர்வசக்த அதிருசிய அத்விதீய பரமபுரு
ஷனுக்கு, சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரவிஷயக ஞானசூ
ன்ய சக்திய பாவதிருசிய பலவற்றிலொன்ருகிய வி
க்கிரஹம் எப்படி அபிவியஞ்சகமாகுமோ எங்கள்பு
த்திக்கெட்டவில்லை. நம்ம பண்டிதர்களுடைய சா
மர்த்தியமெப்படிப்பட்டதென அறிந்துகொள்ளவே
ண்டியபோது கைநாட்டு (தற்குறி) போடும் மடை
யனைக்கொண்டு நிறுத்தினுல் இவனைக்கொண்டு அவ
ர்களுடையக் கியானத்தை யறியக்கூடுமல்லவா!!!.

ஸா ஜாத்தியமில்லாதவனாயில் ஒருபொருள் மற்றெ ன்றின் சுவரூபத்தைவிளக்க சமர்த்தமாகமாட்டாதெ ன்பதுநிச்சயம். சர்வகுஞேவேதமானபிரும்மத்துக் கும் சர்வகுஞுபாவமான பிம்பத்துக்கும் உள்ள வைஷம்மியத்தைச்சரியாய்விளக்க எங்கட்குச் சக்தியில் லாவிடினும் இதைப்படிக்கும் அன்பர்கள்ஊஹித்து இக்குறையைப் பரிபூர்த்திசெய்வார்களென்று நம்புகி றோம். கடைசியாகபலவித கவலைகளையுடைய மனிதர் புத்திசாதாரணமாய்த்தெய்வத்தைநாடாதாகையால், அவர்கட்குஞாபகம்உண்டாக்கும்பொருட்டு கேவலம் ஒருகுறிக்கொம்பாகமாத்திரம் விக்கிரகம் வைக்கப்ப ட்டிருக்கிறதேயன்றி வேறல்லவென்று நம்மவர் வாதிக்கலாம். நம்மைச்சுற்றிலுமுள்ள சகல ஸ்தாவர ஜங்கமங்களும் இடைவிடாது கடவுளின் புகழைக் கோஷித்துக்கொண்டிருக்கையில், அவரிடத்து நமது கவனத்தைச்செலுத்த இவையெல்லாம்போதாமல் தனியாயொரு குறிக்கொம்பு வேண்டுமென்பது சூரியனைத்தேடிப்பிடிக்க விளக்கேற்றுவதுபோலும். இப்படிப்பட்ட குறிக்கொம்பு வேண்டியதேயென்று ஸ்தாபிக்கப்பட்ட பக்ஷத்திலும், ஒழிந்தபோதெல்லாம் நினைவுவரவேண்டியதற்காக அவரவர்வசிக்குமிடத்திலல்லவா அதிருக்கவேண்டும்? அப்படிக்கன்றி, எப்போதோ ஒருக்காலம்மாத்திரம் உதவும்படியாகக் கோயில்களில் அதை நட்டுவைப்பதில் பயனென்ன? அந்தக் குறிக்கொம்பினால் எவ்வளவு ஞாபகம்

வரக்கூடுமோ, அவ்வளவு கோயிலுக்குப்போகப் பி
ரயத்தனப்படுவதினாலே யுண்டாகமாட்டாதோ? பி
றகு பிரயாணப்பட்டுப்போகும்போது, பந்தல்பரிவா
ரம், பாணமத்தாப்பு, தீவிட்டி, தோசைவடையோ
கரைகள். முதலிய உற்சவவிமர்சைகளை நினைத்துக்
கொண்டும் வர்ணித்துக்கொண்டும் சென்று, ஸ்தலத்
தைச்சேர்ந்ததன்மேல் முதலில் வயிற்றுப்பாட்டுக்கு
ஏற்பாடுசெய்துவிட்டு, பிறகு கும்பலில் விழுந்து ஆ
ணொன்றும் பெண்ணொன்றும் பாராமல் ஒருவர்மீ
தொருவர் உறைந்துகொண்டு கோயிலிற் புகுந்து,
கையிலுள்ள துட்டெல்லாம் கோயில் துறையாரொன்
னும் கடனுளிகட்குத் தொலைத்துவிட்டு, கற்பூர தீப
மேற்றி விக்கிரகத்திலுள்ள மேடுபள்ளம், ஆடையா
பரணங்களையெல்லாம் கணக்கிட்டு மதிப்பிட்டுக்கொ
ண்டு, இழந்த பணத்துக்குப்பதில் துளசியும் தீர்த்த
மும், பில்வமும் விபூதியும் வாங்கிக்கொண்டு, விக்
கிரகத்துடன் கோலம்சென்று ஒவ்வொரு சிறப்பை
யும் பார்க்குந்தோறும், தேரிலும் தாசியிலும் திரு
வாரூர் சிறந்ததென்றும், தெருவில் திருவடமருதூர்
சிறந்ததென்றும், பாணத்தில் பள்ளிகொண்டை சி
ரேஷ்டமென்றும், பாயசத்தில் புல்யாணி பேர்பெற்
றதென்றும், இட்டிலியில் காஞ்சிபுரம் முதன்மையெ
ன்றும், தேன்குழலில் மன்னார்கோவில் சிறந்ததென்
றும், ஞானோத்பாதகமான விசாரங்கள் செய்து
கொண்டுபோய், மண்டவப்படியில் சென்றவுடனே

வெல்லப்பானையில் ஈ மொய்ப்பதுபோல், கைநீட்டி மேல்விழுந்து, பலவித ஓகைாகளைப்பெற்று, குரங்குகளும் வெட்கும்படியாக மொக்கிவிட்டு, மீந்த காசுக்கு புஷ்பமும் சந்தனமும் வாங்கி தரித்துக்கொண்டு பரிமளிப்போர் சிலரும்; ஓரெழுத்துந்தெரியாது உடலெல்லாம் சித்திரம்வைத்து, திருவளூர் துளசியென்றும், திருப்பதி வடையென்றும், ஆழ்வார் புளியம்பட்டையென்றும், ரங்கன் அபயஹஸ்தமென்றும், அமுதன்திருப்பவித்திரமென்றும், பழனி வில்வமென்றும், பலசரக்கு செட்டியைப்போல் பற்பலவிதங்களான ஊசற்பண்டங்களெல்லாம் முடிந்தெடுத்துக்கொண்டு உற்சவம் வருமோவென்று ஏக்கமுற்றோடிவந்து, இந்திரனும் உங்கட்கீடோ, சந்திரனும் உமக்குத்தாழ்வே, நீர்செய்யும் பாகவத ஆராதனத்தால் பலவித பாவங்களெல்லாம் புண்ணியமேயாகுமென்றும், இஞ்சிதின்ற குரங்குகள்போல் பற்களையிளித்துக்கொண்டு, ஏமாந்தவர்க்குப் பூச்சுற்றி, ஏறியவாையில் நரஸ்துதிசெய்து, காசைக்கமுட்டவரும் கபடகுலீனர்கள்சிலரும்; கும்பலைத்தேடிவந்து ஒன்றுக்குப் பத்தாக விலைக்கூறி லாபம்பெறவரும் வாத்தகர்கள்சிலரும்; மன்மதன் நண்பராக மாதர்மதியைக்கெடுத்து, துட்டுக்கு ஆசைப்பட்டு துஷ்டர்வலையிற் சிக்கச்செய்து வயிறுவளர்க்கவரும் விழலர்கள் சிலரும்; இன்னமித்தன்மையான பலவகையாரும்வந்து உற்சவத்தை யலங்கரி

து ஞானவிருத்தி செய்கிறார்களல்லவா!!!. பிரு
மத்துக்குத்தான் விக்கிரஹம் குறிக்கொம்பென்று
, அந்த விக்கிரகத்தின் ஞாபகத்தை யுண்டாக்க அ
யஹஸ்தம் சாதனமாய்க் கொள்ளப்படுகிறது. இந்
அபயஹஸ்தத்துக்கு ஞாபகார்த்தம் இனி ஒருபொ
ளை நம்மவர் படைப்பாரொன்பதிற் சந்தேகமில்லை.
இவ்வாறு தெய்வததைப் பொம்மையிலும், பொம்
மையைச் சந்தணத்திலும், சந்தணத்தைத் திருமண
பெட்டியிலும்,திருமணபெட்டியைத் திருட்டுக்கூடை
யிலும் அடைக்க நம்ம பண்டிதர்கள் சமர்ததர்களா
லும், இப்படி பரம்பரையாகச்சம்பந்தமுண்டாக்கு
திஞல் பயனின்னதென்றுமாத்திரம் எங்களாலறிய
கூடவில்லை. தினந்தோறும்பொழுதுவிடிந்து அந்திய
ம்வரையில்பண்டிதர் பாமரர் சகலரும் சுகத்தைக்க
ண்டாலும், துக்கத்தைக்கண்டாலும், கடவுளைநினை
த்து எல்லாம் அவர்செயலே யென்கிறார்களல்லவா?
இவ்வாறு நித்தியஸ்மரணமிருக்கையில், இது போதா
தென்று நைமித்திக மரணமார்க்கத்தை யேன்காட்
டவேண்டும்? ஆகையால் எவ்விதத்தில் யோசித்தா
லும் இதிஞல் பிரயோஜனம்மாத்திரம் ஒன்றுமில்
லாமலிருக்கையில் பகவன்னிக்கிரகம்மாத்திரம் கை
கண்டபலஞயிருக்கிறது. நம்மபண்டிதர்கள் இதர உ
த்கிருஷ்டமார்க்கங்களுக்கு அர்ச்சையானது பிரதம
சாதனமென்றும் ஒரு யுக்திவாதம் செய்கிறார்கள்.
முதல்தரம் பண்டிதர்களெல்லாம் பாலியம்முதல் யா

வஞ்ஜீவமும் எ0 - அ0 - வருஷகாலம் இந்த அர்ச்சையைக் கட்டிக்கொண்டு திரிந்தும் வேறு உத்கிருஷ்டமார்க்கமிருப்பதாயாவது, அதற்கிது சாதனமென்றாவது மதிக்காமல் இதுவே பரமசாத்தியமென்று நம்பி காலத்தை யொழித்தார்களெனில், இதுயார்விஷயத்தில் சாதனமாய் வழங்கித்தோ, இந்தச்சாதனத்தால் இதர உத்கிருஷ்டமார்க்கங்களை யார் அடைந்தார்களோ தெரியவில்லை. ஆகையால் இதற்காதாரமாக பிரகிருதத்தில் சொல்லப்படும் யுக்திவாதங்களெல்லாம் பயனற்றதென்றும், நம்மவரனைவரும் அர்ச்சையையே தெய்வமென்று கொண்டிருக்கிறார்களென்றும் ஸ்பஷ்டமாய் ஏர்ப்படுகிறது.

ங-வது.— அர்ச்சையை அவலம்பிப்பதினால் கடவுளுக்குப் பலவிதத்திலும் பரிபவமுண்டாகிறது. விக்கிரகத்தை யாராதிப்பது சாதுவானமார்க்கமென்றே ஒருவேளை யேற்பட்டபோதிலும், அம்மார்க்கத்தினால் அவரிடத்தில் நாமடையும் கொள்கையைச் சற்று மனதிற்கொள்ளவேண்டியது. விக்கிரகங்களில் பிரும்மத்தை ஆவாகனம்செய்வதினால், அவற்றிலவர் ஆவிர்பவிக்கவாவது, இல்லாமலாவது, இருக்கவேண்டுமேயன்றி வேறுவழியில்லை. ஆவிர்பவித்த பக்ஷத்தில் சகலவிக்கிரகங்களையும் சமமாய்க் கிரகிக்கவேண்டியதும்; இல்லாதபக்ஷத்தில் அவற்றைச் சமமாய்த் தியஜிக்கவேண்டியதும், யுக்தியுக்தமாக விருக்கிறது. இப்படியிருக்கையில் இங்கிலீஷா

உத்தியோகங்களுக்குப் பலவிதப் பரீக்ஷைகளே
படுத்துவதுபோல நம்மவர் விக்கிரகங்களுக்குள்
வகுப்புகளை யேற்படுத்தி யிருக்கிருர்கள். அ
ற்றுள் முதலாவது, ஆழ்வார்களால் பாடப்பெ
ஸ்தலங்கள் சர்வோத்கிருஷ்டமானவையென்
கொள்ளப்பட்டிருக்கின்றன. இவ்வாழ்வார்கள் த
பசெய்து, மனமிரங்கிப் பாடிப் பரிமளிக்கச்செ
ஸ்தலங்கள் நூற்றெட்டுண்டு. இதினுல் ஆதியில்
ர்ச்சையைப் பிராம்மணர்கள் அவலம்பிக்கவில்லை
யன்றும் ; பிறகு தங்கள்பொருட்டோ பிறர்பொ
ட்டோ, இந்த ஆழ்வார்கள் அதை யாதரித்தமேல்,
தாரண ஜனங்கள் அதை அவலம்பித்தார்களென்
ம், ஏற்படுகிறதல்லவா.

அக்காலத்தில் கேவலம் பிராம்மணர் மாத்திர
மயன்றி கற்றுணர்ந்த சூத்திரர்களும் அதையாக்ஷே
த்தார்களென்பதற்குப் போதுமான நிதர்சனங்களி
க்கின்றன. இவ்விஷயத்தில் பட்டணத்துப் பிள்ளை
ரைத்ததைக் கவனிக்கவேண்டியது,—

சால்லிலும்சொல்லின்முடிவிலும் வேதச்சுருதியிலு
மல்லிலும் மாசற்றவர்காயந்தன்னிலுமாய்ந்துவிட்
ரில்லிலு மன்பரிடத்திலுமீச னிருக்குமிடம் [டோ
கல்லிலும் செம்பிலுமோ விருப்பானெங்கள் கண்
ணுதலே.

உளியிட்டகல்லையு மொப்பிட்டசாந்தையு மூத்தை
யறப்
புளியிட்டசெம்பையும் போற்றுகிலேனுயர் பொன்
னெனவே. [யென்று
ஒளியிட்டதாளிரண் டுள்ளேயிருத்துவ துண்மை
வெளியிட்டடைத்துவைத்தே னினிமேலொன்றும்
வேண்டிலனே.

இத்தன்மையான எண்ணிறந்த திருஷ்டாந்தங்களை யெடுத்துரைக்கக் கூடுமாகிலும் கிரந்த விஸ்தீர்ணத்துக்குப் பயந்து, சிவவாக்கியர் சொல்லொன்றை யுதகரிப்பதே போதுமென்று நினைக்கிறோம்,—

காணவேண்டுமென்றுநீர் கடன்மலைகளேறுவீர்
ஆணவமதல்லவோ வறிவிலாதமாந்தரே
வேணுமென்றவ்வீசர் பாதமெய்யுள்ளேதரிப்பரேல்
தாணுவாகநின்றசீவன் றன்சிவமதாகுமே.

தீர்த்தலிங்க மூர்த்தியென்று தேடியோடுந்தீதரே
தீர்த்தலிங்கமுள்ளினின்ற சீவனைத் தெளியுமோ,
தீர்த்தலிங்கமும் முளேதெளிந்துகாணவல்லிரேல்
தீர்த்தலிங்கர் தானதாய்ச் சிறந்ததேசிவாயமே.

ஆடுகொண்டு கூடுசெய்தமர்ந்திருக்கும்வாறுபோல்
தேடுகின்ற செம்பினைத்திடப்படப்பரப்பியே
நாடுகின்றதம்பிரானு நம்முளேயிருக்கவே
போடுபத்திரபூசையென்னபூசையென்னபூசையே

ட்டகல்லுதெய்வமென்றுநாலுபுட்பம்சாற்றுவார்
சுற்றிவந்துமுணமுணென்று சொல்லுமந்திரமேத
ட்டகல்லுபேசுமோ நாதனுள்ளிருக்கையில் [டா
சட்டசட்டிசட்டுவம் கறிச்சுவையறியுமோ.
முதலில் இவ்வாறுரைத்த சிவ வாக்கியரே பி
என்னபரிசுபெற்ருரே அல்லது வேறெந்த தாக்ஷ
பத்துக்குட் பட்டோ திருமழிசையாழ்வாராகி அ
து நல்லறிவுக்காவது, கடவுளின் கருத்துக்காவ
தேசக்ஷேமத்துக்காவது இசையாதவிதமாக அர்
சயை அவலம்பித்து வீணில்வாக் கையழித்தார்.
காலத்தில் கிரீஸ்துமதத்தில் புகுவோருக்குப் பா
மார் பலவித புரோத்ஸாஹங்கள் உண்டாக்குவது
ால, அக்காலத்திலும் அர்ச்சை நிலையுறவேண்டு
ன்கிற கருத்தினல் அப்போதுள்ள கபடபிராம்ம
அந்தத் துன்மார்க்கத்தை யாக்ஷேபிக்கத்திறமு
ல்வியுமுள்ள சூத்திரரைத் தட்டிக்கொடுத்து, பி
மணரிலும் மேலானவரென்று அவர்களைக் கொ
டாடத்தொடங்கவே, மற்றவர் அவ்விருவகையா
புங் கண்டுமலைத்து இந்த நீசமார்க்கத்தில் பிரவே
தார்களென்று கொள்ளவேண்டி யிருக்கிறதல்ல
இவ்வுண்மை யெத்தன்மையாயிருந்தபோதிலும்
கத்தில் கடவுளின் அருளால் மனிதர் மகிமை பெ
து சஹஜமாயிருக்கினும், இவ்விடத்தில் மக்களின்
வினுலே பிரும்மமும் பரிமளிக்கவேண்டியதாய் ஏ
கிறது. இரண்டாவது, புராணஸ்தலங்களெனச்சி

லஉண்டு. பழைமையைப்பற்றியோ, அல்லது இதனிர
ண்டாவதத்தியாயத்திற் கூறியவாறு நூதனமாய் கல்
பிக்கப்பட்ட புராணங்களைப்பற்றியோ, அவற்றிற்குபு
ராணஸ்தலமென்கிற பெயர்வந்திருக்கவேண்டும். ப
ழைமையைப்பற்றியெனில் ஆதியில் அங்கிகரிக்கக்கூ
டாத பதார்த்தம் பழைமைப்படுந்தோறும் கிராஹ்ய
மாவதாய்ச் சொல்லவேண்டியிருக்குமல்லவா? அப்
படியாகில் தலைமுறைதலைமுறையாய்க் கொலைசெய்ப
வரை நிந்திக்காமல் கொண்டாடவல்லவாவேண்டும்!
அல்லது விக்கிரஹத்தில் ஏற்றியஉடனே தெய்வம் இ
ளசாயிருக்கின்றமையால் கிராஹ்யமல்லவென்றும்,
அதேதெய்வம் காலத்தால் பழுத்து வயிரமேறுவதா
ல் கிராஹ்யமென்றும் கொள்ளவேண்டியதோ? புதி
யஸ்தலங்களை அம்மைப் பிடாரி கோயில்களுக்குச்
சமானமாக மதிப்பதற்கும், பழய ஸ்தலங்களில் ச
மைக்கப்படும் சோற்றில் ஒருபற்றுவது மீராமல்
மொக்குவதற்கும் காரணமின்னதென்று எங்கட்கு
விளங்கவில்லை யாகையால் நம்ம பண்டிதர்கள் த
யைசெய்து வெளியிடுவார்களென்று நம்புகிறோம்.
இவ்வாறன்றி புராணங்களின் ஆதாரத்தினாலே அ
ந்த ஸ்தலங்களுக்கு மஹிமையென்னும் பக்ஷத்தி
ல் இத்தன்மையான ஸ்தலங்களுக்காதாரமாக புரா
ணமேற்படும்வழியைக்குறித்து இரண்டாவதத்தியா
யத்தில் எச்சரித்திருக்கிறோமல்லவா! இதனால் ஒ
ரு கெட்டகாரியம் மற்றொரு கெட்டகாரியத்தின் கா

தத்தால் சாதுவாகிவிடுவதுபோலும். ஏனெனில்
ூவார்களால்பாடப்பெற்றுவது,புராணங்களால் ஆ
க்கப்பட்டாவது, பணக்கார விக்கிரஹத்தின் அபி
ணத்தைப்பெற்றுவது, இராதவிக்கிரஹங்கள் விஷ
தில் நம்மவர்செய்யும் மரியாதையின் தன்மையை
றித்து முதலத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டிருக்
து; ஆதியில் கவுரவிக்கத்தகாத இத்தன்மையான
ாயில்களே பிற்காலத்தில் புராணமென்னும் தப்பு
தவேஜுகளைப்பற்றியல்லவா பரிமளிக்கின்றன.
ற்குஹேதுவில்லாமற் போகவில்லை * "சுடேசுட்
_ சமனமாக்குகிறது" என்பதுபோல் ஒருதோஷ
மற்றொன்றால் பரிஹரிக்கப்படுகிறதென்று நம்மப
டிதரைப்போன்றவர் கொள்வதும், அவர்களிடத்
ஞானோபதேசம் பெற்றவர்கள் ஆதியில் தொடு
ும் பொய்வியாஜியத்துக்குப்பரிஹாரமாகப் பிறகு
ாய்தஸ்தவேஜு சிருஷ்டிப்பதும் என்று கொள்
வேண்டியதாகிறது. இதற்கெல்லாம் இனி தகுந்த ச
தானம்வருமாகையால் இவ்வளவு சூசிப்பதேபோ
மென்று நினைக்கிறோம். மூன்றுவது, அபிமானஸ்த
்களென்று சிலவுண்டு. சாதாரணஜனங்களுக்குள்
நவர் சிபார்சினால் மற்றொருவர் முன்னுக்குவருவது
ாலவே தெய்வத்தின்விஷயத்திலும் கொள்ளவே
டியதென ஏற்படுகிறதல்லவா! தெய்வமும் பல

* உஷ்ணம் உஷ்ணேநஶாம்யதே.

வாகில் இவ்வாக்ஷேபம் ஜனிப்பதற்கிடமிராது. விக்கி
ரஹத்தைப்பற்றிய வுடனே நாங்கள் தெய்வத்தைப்ப
லவாகவே மதித்துவிட்டோமல்லவா என்பார்களா
கில், இவ்வளவு கியான பரிபாகத்தை யடைந்தவர்க
ளோடு வாதாட எங்கட்குத் திறமில்லை. அர்ச்சையினு
ல்விளைந்த இந்தநற்பயன் அவர்கட்குச் சாசுவதமாயி
ருக்கவேண்டுமெனில் அதைத் தடுக்க எங்கட்கதிகார
மில்லாவிடினும், எங்கட்கந்த நற்பயன்வேண்டியதில்
லையென மாத்திரம் வினயமாய் எச்சரிக்கிறோம்.
ஏனெனில் அத்தன்மையான ஞானமின்றியே சகலயு
க்திகளுக்கும் சுருதிகளுக்கும் இயைந்தமார்க்கத்தில்
முயன்று, அம்முயர்ச்சிக்கு அனுகுணமான பயனைய
டைவதேயெங்கட்குப் போதும். இந்த உத்தமமான
மார்க்கத்தை யனுசரிப்பதினால் அரூபியாகிய கடவு
ளைத்தியானிக்கவாவது பூஜிக்கவாவது எங்களால் மு
டியுமோ வெனில், எங்களிலும் தாழ்ந்தவர்களுக்கும்
அது வெகு சுலபமா யிருக்குமாகையால் எங்களுக்
து அசாத்தியமா யிருக்குமென நம்பக்கூடவில்லை. மு
தலில்அவரைத் தியானிக்கும்வழியைக்குறித்து விசா
ரிப்போம். எவ்வித ரூபமுமற்றவருக்கு ஒரு ரூபமிரு
ப்பதாய் பாவித்து அந்தரூபத்தைத் தியானிக்கத்தொ
டங்கினால் அதுகடினமாகவே யிருக்கும். ஏனெனில்
உள்ளதைஉள்ளபடி நினைப்பதையும் சொல்வதையும்
விட ஒன்றைப்புதிதாய்க்கல்பித்தல் உண்மையாகவே
கடினமானதா யிருக்கும். அவர் நமது மனதிற்கும

திரம் விஷயமாவாரேயன்றி கண்களுக்கு விளங்க
ாட்டாரென சுருதி முறையிடுவதின் கருத்தெல்லா
கூடி அவரை நமது பிரகிருத உடல் கூற்றுடன் பி
த்தியக்ஷமாயறியக்கூடாது, அனுமானத்தாலே யறி
வேண்டுமென்பதே யல்லவா. அனுமானமென்பது
ாரியகாரண சம்மந்த விசாரமேயல்லவா. ஆகையா
ஒருநாளுக்கு மேல் நிலைக்காத ஒரு அற்பமானவு
அசேதனமானவும் புஷ்பத்தைச் சற்று கவனமாய்
ாக்குவோமாகில் பரப்பிரும்மமானவர் ஆயுதங்க
ும் அவயவங்களு மின்றியே அதற்குள் ஒளிந்திருந்
மற்றவர்க்கெல்லாம் அசாத்தியமான ஸௌஷ்டவ,
ஸௌகுமாரிய, ஸௌகந்திய, ஸௌவர்ணியாதிகளை யதற்
த் தந்ததுமாத்திரமேயன்றி, அதற்குள் அணுரூபமா
ஒரு பழத்தையும், அப்பழத்துக்குள் பரமாணுரூப
ாகக் காயிலையரும்பு முதலிய அவயவங்களோடு கூ
ய வெகுபெரிதான விருக்ஷத்தையும், அமைத்து அ
ற்றின் விருத்திக்ஷயத்துக்குரிய சாமக் கிரிகளையும்
வத்திருப்பதாயும், அவர்சக்திக்களவில்லையென்றும்
றியமாட்டாதவரும் உலகத்திலுண்டோ. இவ்வா
ஒரு பொருளில் மாத்திரமன்றி அணுமுதல் அண்
பரியந்தமுள்ள அஸங்கியேயபதார்த்தங்க ளொ
வொன்றிலும் இரவும் பகலுமின்றி இருந்துக்கொ
ாடு அநிர்வாச்சியமான விவித விசித்திரங்களை வி
ாப்பது மாத்திரமேயன்றி அததற்குரிய அளவு நிய
ங்களையும், சமுதாயப்பிரயோஜனங்களையும் கைவி

டாமல் முடிப்பதைக் கவனிக்கையில் அவருடைய ச
ர்வக்கியதை, சர்வவியாபகத்துவம், முதலியகுணங்க
ன் வெளியாகுமல்லவா. ஒருவ னடுத்தடுத்து இரண்
டு மூன்று விஷயங்களில் கவனத்தைச் செலுத்துவா
ளுகில் அவனை அஷ்டாவதானியென்றும் சதாவதானி
யென்றும் கொண்டாடித்து திக்கிருேமல்லவா. ஏக
காலத்தில் அநந்த விடங்களிலிருந்து அநந்தாவதான
ம் செய்வதுமாத்திரமேயன்றி பரஸ்பரவிரோதிகளா
ய்த் தோன்றும் அநந்த கல்லியாண குணங்களையும்
சமரசப் படுத்திக்கொண்டு நாம் செல்லு மிடமெல்
லாம் தொடர்ந்துவந்து விசித்திர வித்தியைக ளெ
ல்லாம், கூலிகேட்காமலே யாடிக்கொண் டிருக்கும்
கடவுளை யறிதலும் கடினமாமோ. கடவுள் முடிக்கு
ம் விந்தைக ளனைத்தையும் நமது அற்பபுத்தியாலெ
ட்டி முடியாதாகிலும், மக்களெல்லாம் சேர்ந்து வி
ளைக்கும் விந்தைக ளெல்லாம் திரண்டாலும், கடவு
ள்புரியும் விந்தைகளில் அத்தியல்பயாகத்துக்கும் ஈ
டாகமாட்டாதல்லவா. பிரும்மத்தின் தொழிலைக்கொ
ண்டே யவரை யறியவேண்டு மென்பது நாங்கள்கே
வலம் யுக்தியாற் சொல்லும் வழியென நினைக்கவே
ண்டாம். ஆதிமுதல் பிரும்மசரியத்தை யனுஷ்டித்த
வர்களெல்லாம் இந்தமார்கத்தையே அனுசரித்ததாய்
சுருதி யெங்குமுறையிடுகிறது. இதற்கு நிதர்சனமா
க சாந்தோக்கிய உபநிஷத்திலிருந்து ஒரு பிரமாண
மெடுத்துக் கூறுகிறோம்,—

சாந்தோக்கிய உபநிஷத்து ௬-வது அத்தியாயத்தி
உத்தாலகருடைய புத்திரராகிய சுவேதகேது
வன்பவர் பன்னிரண்டுவருஷம் வேதாத்தியயனம்
சய்துவிட்டு, அவர் பிதாவிடம் மீண்டு பிரும்ம வித்
யையைத் தமக்கு உபதேசிக்கவேண்டுமென்று கே
க, அவர் அப்படியே செய்யத்தொடங்கினார். அந்த
த்தியாயம் முழுமையும் பிரும்மவிஷயமாய் அவர்
சய்த பலவிதஉபதேசங்கள் யடங்கியிருக்கின்றமை
ாலும், அவற்றை யெல்லாம் இவ்விடத்தி லுரைப்ப
வசியகமாகையாலும், மூன்றுவித உபதேசங்க
ா மாத்திரம் இவ்விடத்தில் உதஹரிப்பது போது
மன்று நினைக்கிறோம். மேற்படி அத்தியாயம் -கஉ
௧௩ -௧௪- வது கண்டங்களில் * "(உத்தாலகர்புத்
திரனைப்பார்த்து) இந்தநியக்கிரோதமரத்தின் பழ
மொன்று கொண்டுவாஎன்றார். (புத்திரன்) இதோ
கொண்டுவந்தேன் பகவானே என்றார். (பிதா) அ
தை உடையென்றார். (புத்திரன்) உடைத்தேன் பக
வானே என்றார். (பிதா) அதில் என்னகாணப்படுகி
றதென்றார். (புத்திரன்) ஒரு சிறியவித்து காணப்ப

---

* ந்யகு்ரோதஃபலமத ஆஹரேதி; இதம்
ஃபகவஇதி; பிந்தீதி; பிந்நம்ஃபகவஇதி; கிம
த்ரபஸ்யஸீதி; அண்வ்யஇவேமாதாநா ஃபகவ
இதி; ஆஸாமங்கைகாம் பிந்தீதி; பிந்நாஃப

"டுகிறதென்றார். (பிதா) அன்புள்ளவனே அதை உ
"டையென்றார். (புத்திரன்) பகவானே இதோ உ
"டைத்தேனென்றார். (பிதா) அதில் என்னகாண்கிறு
"யென்றார். (புத்திரன்) ஒன்றுமில்லை பகவானேஎன்
"றார். (பிதா) எதில் உனக்கு ஒன்றும் காணப்படவி
"ல்லையோ, அதில் ஒரு பெரிய நியக்கிரோதமரமிரு
"க்கிறது. அன்புள்ளவனே அதை கவனிப்பாயாக.
"இவற்றிற்கெல்லாம் ஆத்மாவாகிய அணுசத்தியம்
"அதுஜகத்துக்கெல்லாம் ஆத்மா. நீயதுவாயிருக்கி
"றாய் சுவேதகேதுவே, என்றார். (புத்திரன்)அதை ம
"றுபடி விளக்குவீராகவென்று கேட்க (பிதா) அப்
"படியேயென்றார். (பிதா) இந்த உப்பை அந்த ஜலத்
"தில் கரைத்துவிட்டு நாளைக்காலமை யென்னிடம்
"வா என்றார். புத்திரன் அப்படியே செய்தார்.

---

வ இதி; கிமத்ர பஶ்யஸீதி; கிஞ்சந நபகவ
இதி. தம் ஹோவாச: யம் வை ஸோம்யைத
மணிமாநம் ந நிபாலயஸ. ஏதஸ்ய வை ஸோ
ம்யைஷோணிம்ந ஏவம் மஹாந் ந்யக்ரோதஸ்தி
ஷ்டதி. ஶ்ரத்தத்ஸ்வ ஸோம்யேதி; ஸ ய ஏஷோ
ணிமைததாத்ம்ய மிதம் ஸர்வம் தத்ஸத்யம்,
ஸ ஆத்மா, தத்த்வமஸி ஶ்வேதகேதோ இதி. பூ
ய ஏவ மா பகவாந் விஜ்ஞாபயத்விதி; ததா

(பிதா) குழந்தாய் நேற்றிராத்திரி நீஇந்த நீரில் கரைத்த உப்பை யெடுஎன்ருர். உப்பு கரைந்துபோனபடியால் விளங்கவில்லை. (பிதா) அந்தநீரில் மேல்புறத்தில் கொஞ்சமெடுத்தா சமனம் செய்யென்ருர். புத்திரன் அப்படியேசெய்தார். (பிதா) அதெப்படி யிருக்கிறதென்ருர். (புத்திரன்) அது உப்புகரிக்கிறதென்ருர். (பிதா) நடுவில் கொஞ்சமெடுத்து ஆச மனம்செய், எப்படியிருக்கிறது என்ருர். (புத்திரன்) அது உப்புகரிக்கிறதென்ருர். (பிதா) அடியில் கொஞ்சமெடுத்து ஆசமனம்செய் அதெப்படியிருக்கிறதென்ருர். (புத்திரன்)அது உப்புகரிக்கிறதென்ருர். (பிதா) ஆனல் அதைக் கொட்டிவிட்டு உன்வாயைக் கழுவிவிட்டு, சோசிக்காமலிரு, என்ரு

---

𑌮𑍍𑌯𑍇𑌤𑌿𑌹𑍋𑌵𑌾𑌚: 𑌲𑌵𑌣𑌮𑍇𑌤𑌦𑍁𑌦
𑌕𑍇𑌽𑌵𑌧𑌾𑌯𑌾𑌥𑌮𑌾 𑌪𑍍𑌰𑌾𑌤𑌰𑍁𑌪𑌸𑍀𑌦𑌥𑌾 𑌇𑌤𑌿;
𑌸 𑌹 𑌤𑌥𑌾 𑌚𑌕𑌾𑌰. 𑌤𑌂𑌹𑍋𑌵𑌾𑌚: 𑌯𑌦𑍍𑌦𑍋𑌷𑌾
𑌲𑌵𑌣 𑌮𑍁𑌦𑌕𑍇𑌽𑌵𑌾𑌧𑌾 𑌅𑌙𑍍𑌗 𑌤𑌦𑌾𑌹𑌰𑍇𑌤𑌿;
𑌤𑌦𑍍𑌧𑌾𑌵𑌮𑍃𑌶𑍍𑌯 𑌨 𑌵𑌿𑌵𑍇𑌦 𑌯𑌥𑌾 𑌵𑌿𑌲𑍀𑌨𑌮𑍇𑌵𑌾𑌂.
𑌅𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌾𑌦𑌾𑌚𑌾𑌮𑍇𑌤𑌿; 𑌕𑌥𑌮𑌿𑌤𑌿; 𑌲𑌵𑌣𑌮𑌿𑌤𑌿;
𑌮𑌧𑍍𑌯𑌾𑌦𑌾𑌚𑌾𑌮𑍇𑌤𑌿; 𑌕𑌥𑌮𑌿𑌤𑌿; 𑌲𑌵𑌣𑌮𑌿𑌤𑌿; 𑌅𑌨𑍍𑌤𑌾
𑌦𑌾𑌚𑌾𑌮𑍇𑌤𑌿; 𑌕𑌥𑌮𑌿𑌤𑌿; 𑌲𑌵𑌣𑌮𑌿𑌤𑌿; 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑌾
𑌸𑍍𑌯𑍈𑌤𑌦𑌥𑌮𑍋𑌪𑌸𑍀𑌦𑌥𑌾 𑌇𑌤𑌿; 𑌤𑌦𑍍𑌧 𑌤𑌥𑌾

"ர். அவரப்படிசெய்துவிட்டு, நான் நீரில் கலந்த உப்
"பு எப்போதுமிருக்கிறது என்றார். (பிதா) சத்திய
"மும் அப்படியே குழந்தாய், நீயதைக் காணுவிடினு
"ம் அது இந்ததேஹமெங்கும் வியாபித்திருக்கிறது.
"இதற்கெல்லாம் ஆத்மாவாகிய அணுசத்தியம். அது
"ஜகத்துக்கெல்லாம் ஆத்மா. நீஅதுவாயிருக்கிறாய்
"சுவேதகேதுவேஎன்றார்.(புத்திரன்)அதைமறுபடிவி
"ளக்கு வீராகஎன்றார். (பிதா) அப்படியே என்றார்.
"(பிதா)ஓகுழந்தாய்! ஒருவனைக் கண்ணைக்கட்டி கா
"ந்தாரதேசத்தினின்றும் வெளியிற் கொண்டுபோய்
"விட்டுவிட்டால், அவன் நான்கண்ணைக்கட்டிக் காட்
"டில் விடப்பட்டேனென்று முறையிடுவான். பிறகு
"ஒருவன் அவன் கண்கட்டையவிழ்த்து, காந்தாரத்

---

காரு. தச்சச்வத்ஸம்வர்ததே, தம் ஹோவாசா
த்ர வாவ கில ஸத் ஸோம்ய ந நிபாலயஸே அத்ர
ஏவ கிலேதி; ஸ ய ஏஷோணிமா ஐததாத்ம்யமித
ம் ஸர்வம், தத் ஸத்யம், ஸ ஆத்மா தத்த்வமஸி ச்வே
தகேதோ இதி. பூய ஏவ மா பகவான் விஜ்ஞா
பயத்விதி; ததா ஸோம்யேதி; ஹோவாச: ய
தா ஸோம்ய புருஷம் கந்தாரேப்யோபிந
த்தாக்ஷமானீய தம் ததோதிஜனே விஸ்ருஜே
த், ஸ யதா தத்ர ப்ராங் வா, உதங் வா, அதராங் வா, ப்ர

துக்கு இதுவழி, இந்தவழியே போவென்கிறான். புத்தியுள்ளவன் ஊருக்குஊர் கேட்டுக்கொண்டு கடைசியாக காந்தாரத்தைச் சேருகிறான். இவ்வாறேதகுந்த ஆசாரியனை யுடையவன் கற்றுக்கொண்டு முக்தனாகி பேறடைகிறான். இதற்க்கெல்லாம் ஆத்மாவாகிய அணுசத்தியம். அதுஜகதாத்மா. நீயதுவாயிருக்கிறாய் சுவேதகேதுவே என்றார். (புத்திரன்) அதை மறுபடி விளக்கு வீராகஎன்றார். (பிதா) அப்படியேயென்றார்" என்று சொல்லியிருக்கிறது. இவ்வளவு சுலபமானவிஷயத்தையும் அறியமாட்டாத மந்தர்களும் உலகிலிருப்பார்க ளெனக்கூடுமோ.? இவ்விதத்தியானத்தை இடையந்தரமின்றி செய்ய மனிதரால் முடியாதெனச் சிலர் சொல்லலாமாகையா

---

த்மாயீதாபிநத்தாக்ஷ ஆநீதோபிநத்தாக்ஷோ விஸ்ருஷ்டஃ. தஸ்ய யதாபிநஹநம் ப்ரமுச்ய ப்ரப்ரூயாதேதாம் திசம் கந்தாரா, ஏதாம் திசம் வ்ரஜேதி; ஸ க்ராமாத் க்ராமம் ப்ருச்சந் பண்டிதோ மேதாவீ கந்தாராநேவோபஸம்பத்யேதைவமேவேஹாசார்யவாந் புருஷோ வேத தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்ய இதி. ஸ ய ஏஷோணிமைததாத்ம்யமிதம் ஸர்வம் தத்ஸத்யம் ஸ

ல், தியானநைரந்தரியதாரதம் மியங்களையும்,அவற்றி ற்குரிய பயன்களையும் குறித்துச்சொல்லும்சுருதியை இவ்விடத்தில் உதஹரிக்கிறோம்.

பிரசிநோபநிஷத்து ஐந்தாவது பிரசினத்தில் பிரும்மத்தியானத்தில் நமதுமனம் இவ்வளவுகாலம் நிலைத்திருந்தால் இவ்வளவுபயன் கிடைக்குமென்று ஸ்பஷ்டமாயுரைத்திருக்கிறது. அதில் * "பிறகு சைப்பி "யரென்னும் சத்தியகாமர், ஓபகவானே! மக்களில் "பிரணவமாகிய ஓங்காரத்தைத்தியானிப்பவன் அதி "னால் எந்தலோகத்தை வெல்லுகிறானென்றுகேட்க, "அவரிவ்வாறுவிடையுரைத்தார். ஓஸத்தியகாமனே! "ஓங்காரமே பரமானவும் அபரமானவும் பிரும்மம்.

---

ஶ்ருத்வா, தத்க்ஷமபிப்லுத கேதாஜதி. ஸர்வ யணவஶாஸ்த்ரவாந் விஜ்ஞாயைகமிதி; தயா ஸோத்யேதி, ஹோவாச.

* அத ஹைநம் ஶைப்ய: ஸத்யகாம: பப்ரச்ச: ஸ யோ ஹ வை தத்பகவந் மநுஷ்யேஷு ப்ராயணாந்தம் ஓங்காரமபித்யாயீத கதமம் வாவ ஸ தேந லோகம் ஜயதீதி. தஸ்மை ஸ ஹோவாச: ஏதத்வை ஸத்யகாம! பரம் சாபரம் ச ப்ரஹ்ம யதோங்கார:; தஸ்மாத்வித்வாநேதேநைவாயதநேநை

ஷைகயால் அறிந்தவன் இதினுல் இரண்டிலொன்
றையடைவான். அவன் அதை ஒருமாத்திரைக்கால
ம் தியானம் செய்வானுகில் அவன் அதினுலே ஞா
னமடைந்து விரைவில் ஜகத்தில் உண்டாகிருன். அ
வனை ருக்குகள் மனுஷ்ய லோகத்தை யடைவிக்கின்
றன. அவன் அவ்விடத்தில்தபசினுலும், பிரும்மசரி
யத்தாலும்,சிரத்தையாலும்,நிறைந்தவனுகமஹிமை
யையனுபவிக்கிருன். இரண்டுமாத்திரைக்காலம்,அ
தைத் தியானிப்பானுகில் அவன் அந்தரிக்ஷத்தை அ
டைந்து, யஜுஸுகளால் ஸோமலோகத்தை ய
டைகிருன்; ஸோமலோகத்தில்ஐசுவரியத்தையனுப
வித்துவிட்டு மறுபடிவருகிருன். அவன் மறுபடியும்
ஓம்என்னும் அக்ஷரத்தால் மூன்றுமாத்திரைக்காலம்

---

𑌤𑌰𑌮𑌨𑍍𑌵𑍇𑌤𑌿. 𑌸 𑌯𑌦𑍍𑌯𑍇𑌕𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑌭𑌿𑌧𑍍𑌯𑌾
𑌯𑍀𑌤 𑌸 𑌤𑍇𑌨𑍈𑌵 𑌸𑌂𑌵𑍇𑌦𑌿𑌤𑌸𑍍𑌤𑍂𑌰𑍍𑌣-
𑌮𑍇𑌵 𑌜𑌗𑌤𑍍𑌯𑌾𑌮𑌭𑌿𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑌤𑍇. 𑌤𑌮𑍃𑌚𑍋 𑌮-
𑌨𑍁𑌷𑍍𑌯𑌲𑍋𑌕𑌮𑍁𑌪𑌨𑌯𑌨𑍍𑌤𑍇. 𑌸 𑌤𑌤𑍍𑌰 𑌤-
𑌪𑌸𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑍇𑌣 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑍋 𑌮-
𑌹𑌿𑌮𑌾𑌨𑌮𑌨𑍁𑌭𑌵𑌤𑌿. 𑌅𑌥 𑌯𑌦𑌿 𑌦𑍍𑌵𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣 𑌮-
𑌨𑌸𑌿 𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌸𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑌂 𑌯𑌜𑍁𑌰𑍍𑌭𑌿𑌰𑍁-
𑌨𑍍𑌨𑍀𑌯𑌤𑍇 𑌸𑍋𑌮𑌲𑍋𑌕𑌂. 𑌸𑍋𑌮𑌲𑍋𑌕𑍇
𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌮𑌨𑍁𑌭𑍂𑌯 𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑌰𑍍𑌤𑌤𑍇.
𑌃 𑌪𑍁𑌨𑌰𑍇𑌤𑌂 𑌤𑍍𑌰𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣𑍋𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑍇

"பரமபுருஷனைத் தியானிப்பானாகில் ஒளிபொருந்தி
"ய சூரியனைச் சேர்ந்து, பாம்பு தோலுரிப்பதுபோ
"ல், பாபத்தினின்றும் விடுபட்டு, ஸாமங்களால் பி
"ரும்மலோகத்தை அடைகிறான்" என்று சொல்லி
யிருக்கிறது. இவ்வளவு சுலபமாக நற்கதியடையக்கூ
டுமென்பதற்கு ஹேதுவில்லாமற் போகவில்லை. ஒரு
வன் இவ்வாறு தியானித்துக் கடவுளின் விசித்திரச
க்தியையும், தனது அசக்தியையும், அக்கியதையையு
ம், மனதிற்கொள்வானாகில் பிரும்மத்துக்கு முகோல்
லாஸ முண்டாகும்படியானவழியில் அவரைத்தொ
ழுவதற்கு மார்க்கந்தேடியதை அனுஷ்டிப்பான். பிர
கிருதஸ்திதியிலிருந்து கொண்டே இதையுங் கைவி
டாமல் உயர்ந்த மார்க்கத்தையுந் தேடிக்கொள்ளலா
காதாவென்று சிலர் ஆக்ஷேபிக்கலாம். ஆகிலும் சற்
று யோசித்துப் பார்ப்பவர்க்கு இது மனிதர் இயல்பு
க்கு இசையாத காரியமென்று தானாய்விளங்கும். ந
மதுதேசத்தில் எவ்வளவு அயோக்கியனாகிய பிராம
ணனுக்கும் பொருளளிப்பது தர்மமென்று மற்றவ

---

[Grantha-script verse, partly cut off at the right edge; not transcribed reliably]

சகாய்க்கிரகித்து அவ்வாறே செய்துவருகிறபடியா
ல்லவா, சாதாரண பிராம்மணர் "எனக்குப் படிப்
பில்லாவிடில் பரவாயில்லே, நான் ஆசாரியபுருஷ
ஞயிருக்கிறேன் போ"வென்று திரிந்துகொண்டு
கவுரவமான தொழில்களெல்லாம்புரிந்து, அடிக்க
ஆமசிராத்தங்கள் கிடைக்க வேண்டுமெனப் பிரார்
தித்துக் கொண்டு காலத்தைக் கழிக்கின்றனர். இ
படிக்கன்றி மொண்டி முடம், கூன் குருடு, முத
ிய உழைக்கத் திறமற்றவர்களுக்குக் கொடுப்பது
ாத்திரமே தர்மமென்றும், எந்த வர்ணத்தில் பி
ந்த சோம்பேறிகளுக்கும் ஈதல் அதர்மமென்று
, அறிந்துகொண்டு அவ்வாறே அனுஷ்டிப்போ
ாகில், வேலயற்ற சோம்பேறிகளெல்லாம் நல்ல
ார்க்கங்களே யனுசரித்து, முயன்று கவுரவமாய்
காலத்தைக் கழிப் பார்களேயன்றி பிராணனேவி
மாட்டார்களென்பது நிஸ்ஸந்தேகமானவிஷயம்.
துநிற்க நமது தேசத்தில் ஆதியில் எத்தன்மை
ான நல்ல உத்தேசியங்களுடன் அன்ன சத்திர
களேற்பட்டபோதிலும், பிற்கால் அந்த உத்தே
யங்கள் மறைந்து மண்மூடிப்போய், சோம்பேறிச்
சாறுண்டு கொழுத்தவர்களே "உருசிகண்டபூனே
உரியை உரியைத்தாவுமென"சருடும்பமாய்ச் சத்தி
ச்சாப்பாட்டுக்குப் பாத்தியஸ்தராய்நின்றதற்கு தஞ்
ாவூர் ராஜாவின் தர்மசத்திரங்கள் தகுந்தநிதர்சன
ங்களாகும். இவ்வாறு பழகிவிட்டபேர்கள் உடலி

ற்காவது, மனதிற்காவது, வேலையுமற்று, மானமும்
செற்று, ஈனமுமுற்று, வயிறு சுண்டச்சுண்ட நாக்
குகளைத் தொங்கவிட்டுக்கொண்டு, சாயங்காலம்
மூன்றுமணி நாலுமணி வரையில் காத்திருந்து,
சோற்றைத் தண்டிக்கொண்டு "அன்னவிசாரமது
"வே விசார மதுவொழிந்தால், சொன்னவிசாரந்
"தொலையாவிசாரநற்றோகையரைப்,பன்னவிசாரம்ப
"லகால் விசாரமிப்பாவிநெஞ்சு" என்று பட்டணத்
துப்பிள்ளை இவர்கள் பொருட்டேபாடினுரென, பக்க
த்துத்திண்ணைகளெல்லாம் புறண்டு, சோறுஜரித்தத
ன்மேல் இரவெலாம் ஓய்வின்றித் தெருதிரிந்து வந்த
னரென்பது அனைவர்க்குந்தெரிந்தவிஷயமாகையால்
அதை விசேஷித்து வர்ணித்துரைக்க வேண்டியதில்
லையென நம்புகிறோம். பிறகு நம்மதேசத்தாருடைய
துளர்ப்பாக்கியத்தினுல், தஞ்சாவூர் ராஜியமழியவே,
இச்சோம்பேறிகளுக்கு ஜீவனோபாயமுமற்று, தொ
ன்று தொட்டுவந்த பழக்கத்தால் வேலைசெய்யவும்
அனர்கராகி, பார்ப்போரெல்லாம் பச்சாத்தாபப்படு
ம் படியாகப் பாதவிப்பவர் எத்தனை பேருளரென்ப
தைச் சற்று கவனிக்கவேண்டியது. ஆதிமுதல் இச்
சோம்பேறித்தொழிலில் பழகாவிடில், அவர்களும் ம
ற்றவர்களைப்போலவே கவுரவமாய்ப் பிழைப்பார்க
ளென்பதில் சந்தேகமுண்டோ. இவ்வாறே அர்ச்சை
யை அவலம்பிப்பவர்,ஒருவிதமார்க்கத்திலும் சேராத
அதை ஒருசுலபமானமார்க்கமாகக்கிரகித்து மோசம்

பாகின்றமையால், அதைவிட கஷ்டமானதென்று
கொள்ளப்பட்ட மார்க்கத்தை மனதில்ஸ்மரிக்கவும்
மாட்டார்கள்; அதை யவலம்பிக்க அனர்ஹராயும் ஆ
கிவிடுகிறார்கள். இப்படிக்கன்றி மேலே உதகரித்தசா
ந்தோக்கிய உபநிஷத்து, பிரசுனோபநிஷத்து வாக்கி
யங்களால் அதிசுலபமானதென்று ஏற்படுகிற தியா
ன மார்க்கத்தை அவலம்பிப்போமாகில், அன்னிய
தேசத்துச் சிறுவரெல்லாம் வெகு சுலபமானதெ
ன்றனுஷ்டிக்கும் நல்ல மார்க்கத்தை நாம் அசா
த்தியமானதென்று உரைக்கமாட்டோமல்லவா. இ
னி அம்மார்க்க மென்னவென விசாரிக்கவேண்டிய
தாகிறது. விலையுயர்ந்த பண்டங்களைக் கொண்டுதொ
ழுவதினால் அவர் சந்துஷ்டி யடைவாரென்று மலைக்
கவேண்டாம். இதுபற்றிதான் பாகவதத்தில் * "ஓநிர்
"த்தோஷமானவளே! சகலபூதங்களுக்கும் அவமா
"னம் விளையும்படியாக என்னை அர்ச்சையாக்கி உய
"ர்ந்த பதார்த்தங்களைக்கொண்டு பூஜிப்பவரிடத்தில்
"நான் சந்தோஷ மடையவே மாட்டேன்" என்று
சொல்லியிருக்கிறது. பலவிதத் தீமையெல்லாம் புரிந்
துவிட்டு, உத்தியோகஸ்தர்களுக்கு லஞ்சங்கொடுத்து
நன்மைபெற்றுக் கொள்வது போல கடவுளுக்கும்

---

* 𑌅𑌹𑌮𑍁𑌚𑍍𑌚𑌾𑌵𑌚𑍈𑌰𑍍𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑍈𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯
𑌯𑍋𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌯𑌾𑌨𑌘𑍇! 𑌨𑍈𑌵 𑌤𑍁𑌷𑍍𑌯𑍇𑌽𑌰𑍍𑌚𑌿
𑌤𑍋𑌽𑌰𑍍𑌚𑌾𑌯𑌾𑌂 𑌭𑌊𑌤𑌗𑍍𑌰𑌾𑌮𑌾𑌵𑌮𑌾𑌨𑌿𑌨𑌃.

பொருளளித்து ஏமாற்றிவிடலாமென்று மலேக்க வே
ண்டாம். அவரைத் தொழும் வழிதா னென்னவெனி
ல் நமது நிலையையும் அவர் தகையையும் மனதிற்
கொண்டு, காமக்கிரோதாதிகளுக்காள்பட்டு நாம்புரி
ந்த பாவத்தொழில்களேக் குறித்து உண்மையாய் அ
னுதாபப்பட்டு, அவற்றையெல்லாம் மன்னிக்கவேண்
டுமென கசிந்துருகிப் பிரார்த்தித்து, இனி நல்வழியி
ற் செல்ல நற்புத்தியளிக்கவேண்டுமெனக் கேட்டுக்
கொண்டு, வாயினால் கேட்டுக் கொண்டவாறே மன
தினால் சகலபிரயாசையும்பட்டு, தீமையை யொழித்
து நன்மையை இயற்றமுயன்று, கடவுளின் கட்டளை
களைத்தவருது நடந்து, அவரளிக்கும் நன்மைகளுக்
கெல்லாம் நமது நன்றி யறிவைவிளக்குவதே உண்
மையானபூஜையாகும். பலவித சம்ஸார பந்தங்க
ளால் பாதிக்கப்பட்ட நமக்கு அவரை யிவ்வாறு நிர
ந்தரமாய் தியானிக்க முடியுமோ வெனவேண்டாம்.
அவருடைய சிருஷ்டியிலடங்கிய சகலவித பூதங்க
ளும் குறையின்றிவாழவேண்டியதே அவருடைய மு
க்கிய உத்தேசியமாகையால், பெற்ருேர் பிறந்தோர்,
மனேவி மக்கள்மார், நண்பர்சுற்றத்தார், தேசத்தார்
பிராணி சாமானியங்கள் முதலிய பலவகையா ரிடத்
தில் நமக்குள்ள பலபடித்தான கடமைகளேயும்
உத்தரவாதங்களேயும் மெய்மனச்சோர்வின்றி சத்தி
யமாயும் வஞ்சனேயின்றியும் செலுத்துவதே நாம்
கடவுளுக்குச் செய்யவேண்டிய பூஜையில் முக்கி

மான பாசமாகும். நமது காயமுள்ள வரையில்
யிகமான தர்மங்களும் வியாபாரங்களும் ஒழியு
ன்பது கனவிலும் முடியாது. ஆகிலும் கல்வி
லும்அப்பியாசத்தாலும் கூடியவரையில்அவற்றை
க்கிரிகித்து குற்றமற்றவரையில் அவற்றை அனுஷ்
த்துப், பாத்திரமறிந்து இரப்பவர்க்கிட்டு, புலையுங்
காலையுங்களவுந் தவிர்ந்து, நிலைபெற அறத்தின் நு
பத்தை யறிந்து, நிலையாய் நடப்போமாயின், கடவு
ருப்பதாய் மதிக்காவிடினும் நமது தொழிலுக்குஅ
ர் கூலியளித்தே தீரவேண்டுமாகையால், நீதிதவரு
வாழுக்கமே நாமவருக்குச் செய்யும் பூஜைகளிலெ
லாம் சர்வசிரேஷ்ட மானதென்று ஏற்படுகிறது.
மே மக்களுலகம் விட்டு மறுமையைச்சேர்ந்தால்,
சிதாகம் ஊணுறக்கமின்றி அவருடைய இன்பக்கட
ல்மூழ்கி, ஆநந்தத்திலீடுபட்டுக் கொண்டிருப்போ
மன நம்மவரனைவரும் ஒத்துக்கொள்ளுகையில், அ
ருக்குப் பிரதிநிதியாய் வைக்கப்பட்டிருக்கிற பொ
மைகளுக்கு உண்ணவென்றும் குடிக்கவென்றும், உ
க்கவென்றும் உறங்கவென்றுங், கலியாணமென்றும்
ல்லெடுப்பென்றும், சொல்லிக்கொண்டு, அதின்தாரி
திரியத்தாலும், பிச்சையெடுக்கவும் சக்தியில்லாமை
ாலும், அவற்றிற்குக் குமஸ்தாவாகத்தாங்கள் வருவ
ாகத் தெருத்தெருவாய்க் கிண்ணிபிச்சை யெடுப்பத
கு ஹேதுவென்னுவாகும். அதைவியாஜமாகக் கொ
ண்டுபலர்வயிறுவளர்க்கவேண்டுமென்பதேயல்லவா?

உதரநிமித்தம் பகுகிருதவேஷம்என்பது எத்தேசத்தி
லும் ஒருவாறு அனுஷ்டானத்தி லிருந்த போதிலும்,
அதைக்கடவுளிடத்திலும் உபயோகித்து, அவரையும்
ஏமாற்றி நாம் வயிறுவளர்க்கத் துணிகிறேமல்லவா
அனியருக்கு இதுவெகுபுதுமையாகத்தோன்று மா
லும், நமக்குமாததிரம் பழமையே,ஆயிரம் வருஷ
திற்கு மேற்பட்டபழமையே!!

மேற்கண்ட மூன்றுவகுப்புகளிலும் சேராமல்
னிளக்காலத்திலாவது ஆழ்வார்களுடைய வாவது,
ராணங்களினுடையவாவது, பணக்கார விக்கிரஹங்
ளுடையவாவது அபிமானத்தைப் பெற்றுக் கதி
டையலாமென்று உமேதுகாத் திருக்கும் விக்கிர
ங்கள் நமதுதேசத்தில் எண்ணிறந்திருக்கின்றன.
வயமாய் உமேதுவார்களாயும், நம்மவரில் பெரியே
ரால் அவமதிக்கப் பட்டும், இருக்கும் இவற்றின் யே
க்கியதைகளை நாங்களும் வெளியிழுப்பது தர்மமல்
வாகையால் இவ்வளவு எச்சரித்ததே போதுமென்
நினைக்கிறேம். இனியொருவேளை இவைமேற் க
ட மஹிமைகளைப் பெற்றலோவெனில், அம்மஹி
களைப்பெற்ற விக்கிரஹங்களுக்குக் கிடைத்த வெ
மானங்களை இவையும் பங்கிட்டுக்கொள்வதில் எங்
ளுக்காக்ஷேபமில்லை. அர்ச்சையினுல் பிரும்மவி
யத்தில் நமக்குண்டாகும் சிலாக்கியமான கொ
கை இவ்வளவேயென்று நினைக்கவேண்டாம். வே
த்தில் பரப்பிரும்மத்தின் பலகல்லியாண குணங

ாயனுசரித்து இந்திரன், அக்கினி, விஷ்ணு, ருத்திர
ர், என்கிற பலபேர்கள் அவர்க்குவந்தபோதிலும், அ
வரிடத்தில் நமக்குப்பழுதான கொள்கை யுண்டாகா
மல், அப்பெயர்கள் பலவாகிலும் அவையெல்லாம் கு
றிக்கும் பொருள் ஒன்றேயென்று விளங்கும் பொரு
ட்டு * "அவரே பிரும்மா, அவரே சிவன், அவரோ இ
ந்திரன், அவரே அக்ஷரன், அவரே ஸ்வராட்," என்
றும் † "அதுவே அக்கினி, அதுவேசூரியன், அதுவே
வாயு, அதுவே சந்திரன், அதுவேசுத்தம், அதுவே
பிரும்மம், அதுவேஆபங்கள், அதுவேபிரஜாபதி" எ
ன்றும் இன்னுமிதேமாதிரியாக சுருதியில் பலவிடங்க
ளில் முறையிட்டிருக்கிறது. அர்ச்சையினல்வந்த பய
னென்னவென்ருலோ பிரும்மமே பலவானதுமன்றி
வாதிப்பிரதிவாதிகளாய் கும்பினியார் கோர்ட்டில்வ
ந்துநிற்கவும், ஒன்று தோற்கவும் ஒன்று ஜயிக்கவும் இ
டமானதேயாம். இவ்வாறு அர்ச்சையினல் விளையத்த
க்க ஞானேத்கர்ஷத்தைக்குறித்து விசேஷமாய் விரி
த்துரைக்கஇந்தச்சிறியசஞ்சிகைக்குஇசையவில்லையா

---

* ஸ ப்ரஹ்ம, ஸ ஶிவ:, ஸேந்த்ர:, ஸோ க்ஷர:, பரம: ஸ்வராட்.

† ததேவாக்நி:, ததாதித்ய:, தத்வாயு:, தது சந்த்ரமா:, ததேவ ஶுக்ரம், தத்ப்ரஹ்ம, தா ஆப:, ஸ ப்ரஜாபதி:.

கையால் இதை இவ்வளவுடன் முடித்துவிட்டு இதர பாதகங்களைச் சற்றுக் குறிப்பிடுகிறோம்.

ச. விக்கிரஹசப்தத்துக்குப் பொருளென்னவென்று நிகண்டுகளைப்பரிசோதிக்குங்கால், சண்டையென்றுஅர்த்தமேற்படுகிறதல்லவா? அதற்குவந்தபேரை நம்மவர் ஸபலமாக்குகிறார்களென்பது எல்லோருக்குந் தெரிந்தவிஷயம். ஒருமஹாராஷ்டிரனும் தமிழனும் கூட்டுப்பயிரிடத்தொடங்கி ஒருவன் கன்னு (கரும்பு)சாகுபடிசெய்ய வேண்டுமென்றும், மற்றொருவன் அதுகூடாது, கரும்பு பயிரிடவேண்டுமென்றும், சொல்லிக்கொண்டு பொருள்தெரியாமல் தலையையுடைத்துக்கொண்டகதை யெல்லோருக்குந்தெரியுமே. இம்மாதிரியாகவே நம்மில் பண்டிதபாமர சாமான்னியமும் சிவனே சிரேஷ்டமென்றும் விஷ்ணுவே சிரேஷ்டமென்றும், விவாதப்பட்டு சிவன் கால்பிடிக்கவும் விஷ்ணு உதவானென்றும், விஷ்ணுவுக்கு வேலைக்காரன் சிவனென்றும் வாய்கொண்டவரையில் திட்டிக் குடுமியைப்பிடித்துக்கொண்டு கோர்ட்டுகளில் வந்து நின்று ஆகாசம்அரைவிரல் கடையெனமதித்துத் தப்புதஸ்தவேஜுகள் ஸிருஷ்டித்துப் பொய்சாக்ஷிகள் சொல்லுவதுமன்றி அவரவர்கக்ஷி ஜயிக்கும்நிமித்தம் கொடியதீவினைகளையெல்லாம் புரியபின்னிடையாமலிருப்பதும் நம்மவரனைவர்க்கும் தெரிந்த விஷயம். பெண்டிழந்தராமன் தன் கோரிக்கை கூடிவரவேண்டுமெனத் தங்கள்சிவலிங்கத்தைப் பிரார்த்தித்துப்

ழித்து விட்டுப்படையெடுத்துச் சென்றமையாலே
ஙகையில் வெற்றி பெற்றுனென ராமேசுவரபுரா
த்திலும்; சிவன் பிதுரஹத்தி தோஷநிவாரணார்த்
ாக கோவிந்தராஜன் முன்வந்து ஒத்தைக் கால்த
ம் செய்து நாட்டியமாடியதாக சிதம்பரத்திலுள்
விஷ்ணுஸ்தலபுராணத்திலும், இன்னுமித்தன்மை
ன ஹாசியமானகதைக ளெல்லாம் அந்தந்த ஸ்த
புராணங்களிலும்; சொல்லியிருப்பதாய் ஞாபிப்ப
ம்அனுவசியகமெனநம்புகிறோம்.
இவ்வளவேயன்று; பிரும்மத்தின் ஒவ்வொருபே
ர அவலம்பித்த குற்றத்திற்காக ஒருவர் முகத்தில்
ம்ருருவர் விழியாமல் ஒருவரையொருவர் பாஷ
டியென்றும் சண்டாளனென்றும் திட்டிக்கொண்
சைவ வைஷ்ணவமாத்துவர்களாயும் இன்னுமனே
உட்பிரிவுகளாயும் பிரிந்து வைஷம்மியக்கடலில்மு
கிப்போவதை யறியாதவர்வெகுசிலர். இத்தீமைக
ளல்லாம் அர்ச்சையினிடத்தில் ஏன் ஆரோபிக்கவே
ாடுமென்றாலோ அதைச்சற்று விளக்குகிறோம். கே
லம் தியானமார்க்கத்தை யவலம்பித்தவரையில்,
ரும்மத்தை யெந்தப் பெயரைக்கொண் டழைத்த
பாதிலும் அப்பெயர்களாலெல்லாம் கருதியபொ
;ளொன்றே யாகையால் இவ்வித பேதங்களேற்
டுவதற்கு ஹேதுவேயிராது. விக்கிரகங்க ளேற்
பட்டபிறகோவெனில் விக்கிரகங்களே தெய்வமெ
ர்கிற தூர்க்கியானம் ஜனித்தபடியாலும், இந்தவிக்

இரகங்கள் ஆவணிமாதத்து நாவல்பழம்போல் ம
யத் தொடங்கியபடியாலும், தெய்வமேபலவெ
று நிச்சயிக்கவும், அவற்றுள் தாரதம்மியங்களை க
ற்பிக்கவும் இடமுண்டாயிற்று. உலகத்தில் சிலர்
த்கியானிகளாகவும், சிலர்அக்கியானிகளாகவும்,
லர் துர்க்கியானிகளாகவு மிருப்பார்களேயன்றி வே
றுவகையாரிலர். பிரகிருதவிஷயத்தில் சத்கியானி
ளென்பவர் கடவுளின் தத்துவமான சுவரூபத்
யறிந்துகொண்டு, அவரைத் தொழுவதற்குரித்த
ன மார்க்கத்தைத் தேர்ந்து அவலம்பிப்போரே யா
கடவுளென்பவர் ஒருவரிருக்கிறு ரென்ருவது,அவ
வணங்கித் தொழநாம் கடமைப்பட்டிருக்கின்ருெ
ன்ருவது அறியாதவரே அக்கியானிக ளாவார்க
இவ்விரண்டு வழிகளையும் விட்டுக், கடவுளுக்கு
குச்சிதமான ரூபத்தை யாரோபித்து, சாதாரண
ணிதர்க்கே அவமானம் விளைக்கத்தக்க ஹேயமார்க்
ங்களைக் கைப்பற்றி, அவரைத் தொழுகிருமென்
பரிஹஸிப்பவர் துர்க்கியானிகளாவார்கள். காளித
சன் எத்தன்மையானவ னென்ருெருவனைக் கேட்
ம் போது அவன் ஆசுகவியென்றும், கவிசிரேஷ்
னென்றும், போஜனுடைய வித்துவத்ஸபைக்கு நா
கனென்றும், விடைவருமாகில் அது காளிதாஸன்
னதிற்கு உண்மையாகவே உற்சாகமளிக்கும். அல்
து காளிதாசனெனும் பிராணியேகிடையாது, அல்
துஅவனை நான் அறியவேமாட்டேனென்று அவன்

டயுரைப்பானாகில், அதனால் காளிதாசனுக்குச் சந் தாஷமுண்டாகாவிடினும் மனஸ்தாபத்துக்கும்ஹே விராது. அப்படிக்கன்றி காளிதாசனென ஒருபி ாணியுண்டு, ஆனால்அவன் சொல்லிமுடியாத மூட னென்றும் துர்ஜனனென்றும்விடையுரைக்கப்பட்டா , அதைக் கேட்கும் காளிதாசனுக்கு விளையத்தக்க னஸ்தாபத்தை விரித்துரைக்கவும் வேண்டுமோ? வ்வாறே கடவுளுக்குப் பூர்ணதிருப்தி யுண்டாகும் டியான தியானமார்க்கத்தால் அவரைத் தொழுதே றிக்களிக்காவிடினும், அவர் திருவுள்ளத்துக்குத் தா ௐவுவரும்படியாக அவரைக் கல்லென்றும் கட்டை யென்றும் மதித்து, ஹேயமார்க்கங்களால் பூஜையெ ன்னும் பரிஹாசத்தைச் செய்வதைவிட, முற்றும் நாஸ்திகனாகவிருந்து, உலகத்தார் நல்லொழுக்கங்க ளைக் கேவலம் சங்கேதமென்றுகொண்டு அனுஷ்டிப் பதும் வெகுமேலான மார்க்கமாகும். இது கேவல ம் யுக்திக்குமாத்திரம் இசைந்த வாதமெனக் கொள் ளவேண்டாம். சுருதியும் இதையே ஸ்தாபிக்கிறது. வாஜஸனேய உபநிஷத்தில் * "இயற்கையைத் தொ "ழுவோர்(நாஸ்திகர்)அந்தகாரத்தை யடைவார்கள்; "படைப்பை(அர்ச்சாதி சிருஷ்டிகளை)த் தொழுவோ "ர், இன்னும் கொடிய அந்தகாரத்தை யடைவார்".

---

* அஈ꞉ தஃ꞉ வ்ரவிஶந்தியெஸம் ஹூதி உ◌வாஸதெ; ததொ ஹூய ஊவ தெ த மொஉஸம்ஹூத்யாஈ ரதாஃ.

என்று சொல்லியிருப்பதாய் இதன்முதல் அத்தியா யம் - கசு. வது பிரமாணத்தில் உதகரித்திருக்கி ரேமல்லவா? இதுநிற்க கேவலம் தியானமார்க்கத் தையே அவலம்பித்துவந்த வியாஸபாராசராதிகள் காலத்தில் தென்கலை வடகலை, ஸ்மார்த்த வைஷ்ண வமென்கிற வைஷம்மியமாவது, பாந்தவம் போஜ னம் முதலியவற்றைத் துறத்தலாவது, உண்டாயிரு ந்ததாக எவ்விடத்திலும் பிரமாணத்தைக் காணேம். இதற்கு ஹேதுவென்ன வெனில் அவர்கள் கடவுளை ப்பலபெயர்களால் வியவஹரித்த போதிலும், அப் பெயர்களெல்லாம் குறித்த பொருளொன்றேயென அறிந்திருந்தார்கள். பிறகு அர்ச்சையேற்படவே ஒ வ்வொரு செப்புக் கட்டியையும் ஒவ்வொருகல்லையு ம் தனித்தனியான தெய்வமாகக் கொண்டு, அவற்று ள்ஒன்று உதைத்ததாயும் மற்றொன்று உதைபட்ட தாயும் ஐதிகங்களைக்கற்பித்துக் கொண்டு, தாரதம்மி யங்களை யேற்படுத்தி, அதற்கேற்படுத்திய எல்லையை க்கடந்து செல்லும் தெய்வத்தின்மேல் இதரதெய் வங்கள் வியாஜியமாடிக் கோயிலை ப்பிடிங்கி ஏலம் போடும் மரியாதை நம்மவரனைவர்க்குந் தெரியும். தப்புதஸ்தவேஜு சிருஷ்டித்தவர்களுக்குக்கூட கழு தைமேல் வைத்துக்கோலம்காட்டுவது தகாதென அ தைத்துரைத்தனத்தார் சிலகாலமாய் நீக்கிவிட்டபோ திலும், நம்மவர் மாத்திரம் தெய்வமாய்க் கொண்டப ண்டத்திற்குப் பிசாசு(மோஹினி)முதலிய ஹேயமான

ஷம்போட்டு குரங்கு பெருச்சாளி பாம்புமுதலிய
கனங்களின்மேல் வைத்துக்கட்டித் தெருத்தெரு
ய்க்கோலமிழுப்பதேசர்வோத்கிருஷ்டமானபூஜை
ன்று மதிக்கிறர்களல்லவா? விக்கிரகங்கள்தான்
சதனபதார்த்தங்கள், அவற்றிற் கவமானமில்லை
ன்றுலோ, சைதனியத்தைக் குறியாகக் கொண்
ராமானுஜாசாரியர் முதலியப் பிராணிகளுக்கும்
விதத் தொழில்களால் அவமானமில்லை யெனக்
மோ? இவர்கள் விபவத்தில் சகலத்தையும் தி
கம் செய்துவிட்டு சன்னியாசிகளாகவிருந்து கா
தை யொழித்திருக்கையில், அவர்களிடத்தில் சி
பர்களுக்குள்ள பக்திரசத்தை விளக்கும் பொரு
, விக்கிரகங்கள் வார்ப்பித்துவைத்து நவரத்ன
தமான ஆபரணங்களாலும் விலையுயர்ந்த ஆடை
ாலும் அலங்கரித்துப் பலவித வேஷங்கள்போட்
சகலவிதவாகனங்கள்மீதுமேற்றி, புஷ்பசந்தனதா
லாதி வாசனைத்திரவியங்களையுமீந்து, ஒகரைபணி
ர பாயசாதி ராஜஸாஹாரங்களை யெல்லாம் நிவே
ம்செய்து, பாணமத்தாப்பு திவிட்டிகளால் பிரு
மாத்ஸவாதி திருவிழாக்களைச் சிறப்பித்து, கொ
விலைமாதருடைய சதிர்கச்சேரிக்கு அவர்களை யி
த்துவருவதை அவர்கள் நேராய்ப் பார்த்திருப்பார்
ாகில், இவற்றுலெல்லாம் அவர்கள் மனதிற்கு
வளவு ஜுகுப்ஸை யுண்டாகுமோ அதைச்சற்
கவனிக் கவேண்டும். இந்தப் பேய்க்கோலங்க

ளாலெல்லாம் அவர்களுக்குத் திருப்தியேயெனி
அவர்கள் சன்னியாசத்தின் தன்மை வெகு விந
யானதாக விருக்கவேண்டும். இத்தன்மையான
றப்புகளால் அவர்களுக்குத் திருப்தியுமில்லை அ
ருப்தியுமில்லையென்றும், நமது பக்திப்பெருக்கை
ளக்கமாத்திரமே யிவையெல்லாம் செய்யப்படு
தென்றும் சிலருரைக்கின்றனர். அவர்கள் திருப்தி
ன் பொருட்டில்லாத ஒருகாரியத்தைச் செய்
ஞல் நமது பக்தி யெப்படிவிளங்குமோ தெரிய
லை. அவர்களியற்றிய நூல்களைக்கற்று நிலையுறச்
ய்வோமாகில், சிஷியசுவரூபம் நிலக்கும். அப்ப
கன்றி தாய் தந்தைகளிடத்திலுள்ள விசுவாசத்
விளக்கத் தாய்க்குக் குடிசைகாரிவேஷமும், தக
னுக்கு நாய்வேஷமும்போட்டுப் பார்ப்பது அவ
ளிஷ்டத்துக்கிசையுமோ, நமது நிலைமைக் குத்த
சையுமோவெனச் சற்றுயோசித்துப்பார்க்கவே
யது. இங்கிலீஷார் துரைத்தனத்தில் பலபக்க
ளிலும் சாஸ்திராப்பியாசங்களால் துரபிமான
ங்கிக்கொண்டுவரும் இக்காலத்திலே, கஅ௫0
த்தில் மயிலாப்பூரில் பிச்சையெடுத்துக்கொண்
ந்த அப்பரென்னும் ஒருபரதேசிக்கும், கஅ௫உ
த்தில் உஸ்ஸூரில் தாசில்தாரராயிருந்த ந
மாசாரி யரென்பவருக்கும் விக்கிரகங்கள்வா
த்து, கோவில்கள் கட்டப்பட்டு பிரும்மோத்ஸவ
கள் நடந்து வருகின்றனவெனில், சிலகாலத்துக்

சற்று எழுதப்படிக்கத் தெரிந்தவர்களுக்கெல்லாம்
க்கிரகம் ஏற்படுவது ஆச்சரியமல்ல. இந்த ஆசார
னால், இத்தேசத்தில் தெய்வத்துக்குக் குறிப்பாக
யன்று எத்தனை பொம்மைக ளேற்பட் டிருககின்
னவோ, அத்தனை பக்தவிக்கிரகங்களும் உண்டாயி
. இவற்றினிடத்தில் அனைவருக்கும் பக்தியுண்டா
ம்பொருட்டு, பரமபதத்திலிருந்து ஒடிந்து விழு
த உத்தரணியின்துண்டு ஒருபக்தராகவும் விள
கின்கரி மற்றொருபக்தராகவும், விஷ்ணுவின் கூத்தி
ார் கொண்டைபுஷ்பம் இன்னொரு பக்தராகவும்,
ன்னும் இவ்வாறே அவ்விடத்திலுள்ள ஒவ்வொரு
ாமானும் ஒவ்வொரு பக்தராகவும், அவதரித்து இ
வுலகத்தைப் பரிசுத்தமாக்க வந்ததாய் புராணங்
ளெழுதிவைப்பது புதுமையான ஆசார மல்லவா
கையால் அதைக்குறித்து விசேஷித்துப் பிரஸ்தாபி
க வேண்டியதில்லையென்று நினைக்கிறோம். பிரும்
ந்தான் அதிருசியமானதாகையாலும் அதை நிரா
ம்பமாய் உபாசித்து முடியாதாகையாலும், அத
குப்பிரதி நிதியாகபிம்பங்களை யேற்படுத்திக் கொ
ண்டதாய்ச் சொல்லப்படுகிறது. நமது ஆசாரியனும்
அதிருசியமெனக்கூடுமோ? அவரும் நம்மைப் போல
வ கரசரணாத்தி யவயவங்களோடு கூடியவராயி
ருக்கையில் அவரைத்தியானித்து முடியாதெனக்கூ
டுமோ! சாதாரண சினேகிதர்களுக்கு போடோகி
ராப்படம் பிடித்துவைத்துக் கொள்வதுபோல் ஆசா

ரியருக்கும் பிரதிமைவைத்துக் கொள்வதில் ஆக்ஷே
பமென்னவென்று நம்மவர்கேட்கலாம். ஒருவருடை
ய போடோகிராபைப் பார்த்தஉடனே அதற்குடை
யவருடைய முகக்களை, சாயல் முதலிய சகலமும்
யமறவிளங்குவது போல், ஒரு ஆசாரியனுடைய மு
கச்சாயலை விளக்க அவருடைய விக்கிரகம் சமர்த்
மாகுமோ? ஒருவருக்கே பலகோயில்களில் வைக்
ப்பட்டிருக்கிற பலவிக்கிரகங்களை யொன்றுடனெ
ன்று ஒப்பிடுவோமாகில், அவற்றில் ஒன்றின் மு
த்தைப்போல் மற்றொன்றிருக்கமாட்டா தென்பது
அனுபவசித்தம். அன்றியும் ஆசாரியன் ஞாபகம் நம
க்குண்டாகும் பொருட்டே விக்கிரகம் வைக்கப்பட
டதென்பது யுக்திக்குப் பொருந்தாது. ஏனெனில்
இந்தவிக்கிரகத்துக்கே அபிஷேக அலங்கராதிகள்
செய்து, தீர்த்தப்பிரசாதங்கள் பெற்றுக்கொள்ளுகி
றோமாகையால், அந்த விக்கிரகமே ஆசாரியனென
றுவது, அல்லது அதற்குள் ஆசாரியன் ஆவிர்பவித்
திருக்கிறாரென்றுவது கொள்ளவேண்டியது ஆவசி
யகமாகிறது. நாம்பொடிபடச்சுட்டுப் புனலிடைமு
ழ்கிவிட்ட ஆசாரியனே இந்த விக்கிரகமென்று சொ
ல்ல யாரேனும் துணிவார்களென்று நினைக்கக்கூடவி
ல்லை. விக்கிரகத்தில் அவர் ஆவிர்பவித்திருக்கிறாரெ
வெனில் அதுவும் யுக்திக்கிசையவில்லை. நம்ம ஆசாரி
யனும் ஜீவகோடியில் சேர்ந்தவரேயல்லவா! நமக்
கெல்லாம் முக்தியளிக்கும் அவர் மனுஷியாவஸ்தை

ழிந்தமேல் முக்தியைச் சேர்ந்தாரென்பதில் சந்தே
கிக்கக்கூடுமோ. அவர் முக்தியடைந்தால் புனராவர்
த்திகிடையாதே. புனராவர்த்தி யில்லாதவரையில் அ
வர் விக்கிரகத்துக்குள்ளெப்படி யாவிர்பவிக்கக்கூடு
ம்? கடைசியாக அவர் திரும்பிவரவும் ராதாரிபெற்
றிருக்கிறு ரென்றாலும், அவர்உலகத்துக்குச் செய்த
உபகாரத்துக்காக சகலவிதசிறையினின்றும் விடுப
ட்டு சுவதந்திரராய் சஞ்சரிக்க வேண்டியதுபோக,
சாதாரணமனிதருக்கு முள்ள கண் வாய்முதலியஞா
னத்துவாரங்களையும் அடைத்துவிட்டு, அவரை அபே
த்தியமானசிறையில் அடைத்து வைத்திருப்பதாய்க்
கொள்ளப் பொருந்துமோ ? இந்த பக்தவிக்கிரகங்க
ள், ஈசுவரனுக்கு அபிவியஞ்சகமென்று சொல்லப்ப
ட்ட விக்கிரகங்களைத் தாய்ப்பிரதிகளாகக் கொண்டு
எழுதிய நகல்களேயாகையாலும், இந்தநகல்களின்சு
வரூபத்தால் தாய்ப்பிரதிகளித் தன்மையானவையெ
ன்று அறிந்துகொள்ளக் கூடுமாகையாலும், இந்தநக
ல்களின் சுவரூபம் இந்தசங்கிரகமான விசாரத்தா
லே தெளிவாய் விளங்குகின்றமையாலும்; தாய்ப்பி
ரதிகளைக்குறித்துச் செய்யவேண்டிய தீர்மானமின்
னதென்று நாங்கள் குறிப்பிடவேண்டிதில்லை. இப்
பாகத்தை முடிக்குமுன் இன்னொரு விநோதமான
சங்கதியைக்குறித்துச் சிலசொற்களைச் செலவழிக்
கிறோம். நம்மவர்முகத்தில் தரிக்கும் ஊர்த்துவபுண்
டிரமென்னவென விசாரிக்கப் புகுங்கால், நம்மவ

கள

ர் அதை விஷ்ணுபாதமென்பார்கள். அப்படிப்பட்ட விஷ்ணுபாதத்தை நாமும், நம்மஆசாரியரும் சிரஸா வகிப்பது தகுமாகிலும், விஷ்ணுவுக்கு ஆரோபிக்கப்பட்டிருக்கிற விக்கிரகத்தின் முகத்தில் அதின்காலையெடுத்து வைப்பதற்குக் காரணமின்னதென்று அறியக்கூடவில்லை, கோலாடக் குரங்காடுமென்று, நாமாட்டிய வழியெல்லாம் பிரும்மம் ஆடித்திரவேண்டுமென்கிற லோகோத்தரமான கொள்கை, இந்த அர்ச்சையீன்ற பயனேயல்லவா.

ரு - வது. அர்ச்சையின் சம்மந்தமாக ஜாரத்துவத்துக்கு எவ்வளவு ஆஸ்பதமுண்டாகிறதோ அதைச்சற்று கவனிக்கவேண்டியது. கோயிலிற்கூடும் கும்பல்களில் வியவஸ்தையற்று ஆண்களும் பெண்களும் ஒருவர்மேல் ஒருவர்விழுவதினால் சாதாரணஜனங்களுக்கு விளையத்தக்க புத்திக்கேட்டைக்குறித்து வளர்த்தியுரைக்காவிடினும், மனிதர்புத்தியையும் சுவரூபத்தையும் கெடுப்பதையே தங்களுக்கு ஜீவனோபாயமாகக் கொண்டிருக்கும் விலைமாதருக்குக் கோயிலை உறைபிடமாக்கியதால் விளையுந் தீமைகளையும் மறக்கலாமோ. அவர்களைக்கோயில்களில் சேர்த்ததில் முதல்பிரயோஜனமென்னவெனில், முதல்தரம் பண்டிதர்கள்கூட கோயில்களிலுள்ள விக்கிரகங்களையவர்களுக்கு நாயகர்களாகவும், அவர்களை யவற்றிற்கு கூத்தியார்களாகவும் மதிக்கும்படியாயும், மனிதரில் ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொள்ளவும் லஜ்ஜைப்படுகி

ற்ற ஹேயமான தொழிலைத் தெய்வத்தினிடத்திலும்
ஆரோபிக்கும் படியாயும், நேரிடுகிறது. இந்த விக்கிர
ங்களுக்குப் பூஜைசெய்யும் அர்ச்சகர்களென்னும்ச
ந்புருஷர்கள் அவற்றிற்கு குமஸ்தாவாகப்பக்தர்களுக்
குப்பிரசாதமளிப்பதுபோல் விலைமாதருக்கும்நாயக
களாக விருக்கிறார்களென்பது லோகப்பிரசித்தம்.
அவ்வாறிருப்பதே அவர்களுக்கு சுவரூபமெனஸ்தாபி
க்கும்பொருட்டு திருக்கண்ணபுரத்தார் உரைக்கும் ஒ
ரு ஐதீஹத்தை யிவ்விடத்தில் கூறுகிறோம். அந்தஸ்
தலத்திலுள்ள ஒரு அர்ச்சகன் கோயிலுக்கு வந்தபுஷ்
பத்தைத் தன்விலைமாதுக்களித்து, அவள்சூடினமேல
தை விக்கிரகத்துக்குச் சாற்றினதாயும்; அதில் ஒரு
மயிரிருக்கக்கண்டு சந்தேகித்தமணியகாரன் அவனை
விசாரிக்கும்போது அவன் விக்கிரகத்தின் தலையில் ம
யிர்முளைத்திருக்கிறதென்றதாயும்; பிறகு அந்தவிக்கிர
கத்தைப் பரிசோதிக்குங்கால் அது தன்பக்தனாகிய
அர்ச்சகனைக்காப்பாற்றும் பொருட்டு மயிர்த்தலையுட
ன்விளங்கினதாயும்; ஆகையால் தான் அதற்குச்சவுரி
ராஜனென்கிற பெயர்வந்ததாயும்; அந்தஸ்தலத்தார்
உரைக்கும்கதையைப் பலர்கேட்டிருப்பார்களே. சர
க்குப்பிடிப்பவர் சந்தைக்குவருவதுபோல், கும்பல்
கூடும்படியான கோயில்களுக்குவேசிகளியல்பாகவே
வருவார்களாகிலும், அர்ச்சையால்லாபமடையக்கரு
தியபார்ப்பார் அதுவேபோதாதென்று நினைத்து, விய
பசாரிகளுக்குள்ளும் தாரதம்மியத்தைக் கல்பித்து

க்,கோயிலில் பணிசெய்யும் விலைமாதர்கள் தாசிகளெ
ன்றும், கோயிலில் சம்மந்தமில்லாதவர் குடிசைக்கா
ரிகளென்றும்,வியவஸ்தை யேற்படுத்தியபடியால்இந்
தமேன்மைக்காசைப்பட்டுச்சகலகுடிசைக்காரிகளும்
விக்கிரகங்களுக்கு வைப்பாட்டிகளாகக் கோயிலுக்
குவரும்படி நேரிடுகிறது. இயல்பாயுள்ள குற்றங்களை
மறைத்து, இல்லாதஅழகை யாரோபித்துக்கொண்டு,
முனிகளும் மதிமயங்கும்படியாக இரவலாடை யாப
ரணங்களைத் தேகத்தில்பல அவயவங்கள் தெரியும்ப
டியாகத்தரித்துக்கொண்டு, மனோக்கியமான சாரீரத்
துடனும், அதிகுச்சிதமான அபிநயங்களுடனும் நடி
ப்பதுபோல், அரைமனதுள்ளவரை யிழுத்து அடி
யோடு படுகுழிபாய்ச்சும் இக்கலியுக மிருத்தியுக்க
ளின் சான்னித்தியத்தால் விளையத்தக்க தீமைகளை ந
ன்றாயறியவிரும்புவோர் திவ்வியஸ்தலங்களில் வசிக்
கும் கோயில் துறையார் முதலிய மஹானுபாவர்களு
டைய சரிதையைக் கவனித்தாலன்றி, நன்றாய்த்தெ
ளியமாட்டார். இத்தன்மையான நீசமார்க்கத்தைக்
கோயில்களில் ஏற்படுத்துவானேனெனில், அதின்
பொருட்டாகவாவது பலர்கோயில்களுக்கு வருவார்
களென்பதே அதின் உத்தேசியமென்று கோயில்களி
ல் தொண்டுபட்ட பெரியோர்கள் விடையுரைக்கின்
றனர். இவ்விதமான நீசவலைகள் வைத்துப்பிடிக்கத்
தொடங்கியவரையில் அர்ச்சையை அவலம்பித்தவர்
வெகுசிலரென்று ஏற்படுகிறதல்லவா? கோயில்க

ாலும் மதங்களாலும், ஜனங்களின் கொள்கையும்
டையும், சீரடைந்து நீதி நிலைக்கவேண்டியதா யிரு
க, சுவபாவத்தில் நல்ல நடைத்தையுள்ளவர்களெ
லாம், நமது கோயிலில் புகுந்தால் நடைகோணிச்
ரழியும்படிநேரிடுகிறதல்லவா? உண்மையானபக்தியு
ன்கோயிலுக்குவருவோர் வேசிகளைமதிக்கமாட்டா
களாகையால், இவர்களால் அவர்களுக்குயாதொரு
மையும் விளையத்தக்கதில்லையென சிலர்யுக்தியாய்
ாதம் செய்கிறார்கள். யாருக்கு வேசிகளால் தீங்கு
ிளையாதோ, அவர்களைக்கோயிலுக்கு ஆகர்ஷிக்கத்
ாசிகள் ஆவசியகமில்லை யென்பதை மாத்திரம் கவ
ிப்போரில்லை. தாசிகளின் ஆகர்ஷணத்தினால் கோ
ிலுக்குவருவோர் தாசிகளைக்காட்டிலும் வேறொன்
றையும் காணப்போகிறதில்லை யாகையால், அவர்க
் கோயிலுக்கு வந்தும் பயனில்லை. அவர்களை வியா
மாகக் கொண்டே கோயிலுக்கு வருவோர் சற்றே
ாவது விக்கிரகத்தைப்பார்க்கும்படி நேரிடலாமே
யென்று சிலர் வாதிக்கின்றனர். வீட்டில் பழகும் த
லை செம்புகளெல்லாம் லோஹமயமா யிருக்கையி
், வேசிகளுக்கடிமைப் பட்டாவது கோயிலிலுள்ள
லாஹத்தைப் பார்ப்பதினால் பயனென்ன ? தாசிக
ளின் ரூபசவுந்தரிய லாவணியங்களை சாக்ஷாத் கரித்
த தேகதியானமா யிருப்பவன் ஒருவேளை விக்கிர
த்தைப் பார்த்த போதிலும், அதின்வடிவுதவிர வே
றொன்றும் அவன்மனதிற் செல்லாது. ஒருவேளைய

தைத்தெய்வமென்று நினைத்தே அவனதைப் பூஜிக்க த்தொடங்கினும், அப்போதும் தன்பிராணநாயகிகளாகிய மதனசுந்தரி, லீலாவதி, ஜகன்மோஹினி, ஹிருத்தாபஹாரி முதலியவர்க ளெல்லாம் நோவிலா வாழ்வுடனும், குறையிலாச் செல்வத்துடனும், மாறு தயவ்வனத்துடனும், என்றும் பதினாறு வயதினராயிருந்து, இணைபிரியாது தன்னுடனேயிருந்து, விதவித வரசரதி கேளிகள்புரிந்து இன்பந்தந்து, தான்பர லோகம் செல்லுங்கால் அவர்களும் கூடவரும்படியாக அனுக்கிரஹிக்க வேண்டுமென்று பிரார்த்துக் கொள்வார்களேயன்றி, வேறெதையாவது நினைப்பாரெனக் கூடுமோ? இத்தன்மையானவர் பிரகிருதத்தில் பலருளரென்பதில் சந்தேகிக்க வேண்டாம். எந்தவியாஜத்தைக் கொண்டாவது பகவந்நாமத்தை உச்சரித்தாலும் போதுமென்பதற்கு நம்மவரில் வெகுவினோதமான உபாக்கியானமொன்றுண்டு. ஒருவேடன் தெய்வத்தின் பெயரைக்கூட உச்சரிக்கிறதில்லையெனப்பிரதிக்கியை செய்துகொண்டு, தன்மக்களிருவர்க்கும் சின்னநாரை, பெரியநாரையென்று பெயரிட்டானென்றும்; அந்தியம காலத்தில் மூத்தவன் அருகிலில்லாமையால் இளையவனை யழைத்து நாராய் அண்ணனைக் கூப்பிடென்று னென்றும்; அது நாராயண சப்தத்துக்குச் சமானமாகி விட்டபடியால், அதை உச்சரித்த மாத்திரத்தில் அவன் கதி யடைந்தானென்றும்; நம்மவ ருரைக்கின்றன

. பகவந்நாமோச்சாரணத்துக்குள்ள மகிமையை
அதிசயோக்தியாய் உரைத்திருப்பதாய்க் கொள்ளும்
பக்ஷத்தில் இந்த உபாக்கியானம் வெகு அழகானதெ
ன்றே ஒத்துக்கொள்ள வேண்டுமாகிலும், கேவலம்
மனதும் பிரவர்த்திக்காமல், அவர் நாமத்தை யுச்சரி
ப்பதினுலாவது, அல்லது துர்விஷயத்தில் அவர்உத
வியைக் கோருவதினுலாவது, கடவுள்மனமிரங்கி ந
மக்கு உதவுவாரென்பது எங்கள் புத்திக்கெட்டவி
ல்லை. இவ்விடத்திலுள்ள கோயில்களை யிவ்வாருக்
கிவிட்டது மன்றி, பரமபதம் செல்லும் போது ந
ம்மை எதிர் கொள்ள அனேக தாசிகள் வருவா
ர்களென ஜாமீன்கூறிய ஆசாரியர்களும் பலருள
ர். இதில் நம்பிக்கையற்றவர் விசாரணையால் தெளி
வார்களாகையால் அதைக்குறித்து இவ்விடத்தில் வி
ரித்துரைக்க வேண்டியதில்லை. கடைசியாக, புத்தி
குன்றி யவருக்கே கோயில்க ளேற்பட்டதாய் ஒத்
துக்கொள்ளும் நம்மவர் அத்தன்மையான புத்திகுன்
றி யவர் வேசிகட்குமாத்திரம் வசப்படமாட்டாரெ
ன்பது எவ்வளவுநேரோ எங்கள் மனதுக் கெட்டவி
ல்லை. புத்தியுள்ளவரெல்லாம் வேசிகளிணக்கத் தா
ல் புத்திகெடுவார்களெனில், புத்திகுன்றியவர் கதி
கைமுதிக நியாயமாயிருக்கிறது. இந்தத்துர்மார்கத்
தைக் கோயிலில் அங்கீகரிக்கவேயல்லவா, வருத்தமி
ன்றிப்பணத்தை யடைந்தவெறும் பெரியமனிதரெல்
லாம் லஜ்ஜைவிட்டு, "என்மேளம் நன்ருயாடுகிருள்

"என்மேளம் நன்றாயாடுகிறாள்" என்று வெளியிட்டு
ப்பிரதிஷ்டைகூறிக் கொள்ளுகிறார்கள்.

௬-வது. அர்ச்சையினால் சோம்பேறிப் பிழைப்புக்கும்
பொய்மோசம்முதலிய சகலபாபங்களுக்கும் எவ்வள
வு இடமுண்டாகிறதோ அதைச்சற்று மனதிற்கொள்
ளவேண்டும். இரண்டுகோயில்கள்விவாதப்பட்டுக்கோ
ர்ட்டுகளில்வந்து விழுந்தால் சித்தாந்தஸ்தாபனத்துக்
காகவென்று கோயில் துறையார்கள் தொத்துவியாதி
களைப்போல் கிராமாந்தரங்களில்பிரவர்த்தித்துப்பலவி
தவரிகள்போட்டுப் பொருள்சேர்ப்பது அனைவர்க்கும்
தெரிந்தவிஷயம். இவ்வாறுவிவாதமில்லாவிடில் கோ
யில்துறையார்களுக்கு இலாபம் கிடையாதாகையால்
விவாதத்தைக்கல்பித்துப் பாமரஜனங்களை யேமாற்றி
ப்பொருள்பறிப்பதே அவர்களுக்குப் பிரதானஉத்தே
சியமாகவிருக்கிறது. ஜனங்கள் மனப்பூர்வமாய் ப
பொருளளிக்கின்றனரேயன்றி ஏமாந்தல்லவென்று
நினைக்கவேண்டாம். ஏனெனில் மூக்கில் நாமத்தை
யிழுபபதிலும் அழிப்பதிலுமே பிரமாதம் சம்பவிப்
பதாக பலபண்டிதரென்பவர் சொல்வதைக் கேட்டு
அவ்விரண்டு மதங்களுக்கும் உள்ள உண்மையான
பேதங்களை யறியாமலே பொருளளிக்கிறார்களென்ப
தற்கு சாக்ஷி விசாரிக்கவேண்டிய ஆவசியகமில்லை
தென்கலை வடகலைசண்டையில் அவரவர் கக்ஷிக்கு
ஆவேசத்துடன் பொய்சாக்ஷி சொல்லவரும் இருவ
வரைப் பிடித்துக் கொண்டு உங்கள் மதங்களுக்குள்

தாரதம்மியங்கள் என்னவென்று கேட்போமாகி
அவர்களுரைக்கும் விடையே எங்கள் பேச்சின்
ண்மைக்குப்போதுமான நிதர்சனமாகும். மதங்க
ளயும் நீதிகளையும் குறித்தஞானத்தை சாதாரணஜ
னங்கள் அறிந்துகொள்ளலாகாதாவெனில் நம்மவ
ல் என்னப்பன் கூத்தாடிஎனக்குப் பிச்சை போ
டன்கிறபடி ஆசாரியபுங்ஸ்துவம் புத்திர பௌத்
திரபாரம்பரியமாய் வரவேண்டியதென்கிற ஏற்பா
ட்டினல், ஒற்றைக்கண்ணனுக்கு சுந்தரமென்று பெ
ரிடுவதுபோல் கையெழுத்துப் போடமாட்டாதவ
ரெல்லாம் பெரும்பாலும் ஆசாரியபுருஷர்களுக்கு
ள்ளே யிருப்பார்கள். இவர்களால் அடையத்தக்க
ஞானவிகாசத்தை வர்ணித்து எங்களால் முடியாதா
கையால் வைஷ்ணவர்களுக்குள் வழங்கும் ஒருஉபா
க்கியானத்தை இவ்விடத்தில் உரைக்கிறோம். வெ
குகாலம்வரையில் செல்வப்பிள்ளையாக வளர்ந்த ஒ
ருவர் பிதுர்வியோக மடைந்தபின்பு ஆசாரிய புங்ஸ்
துவத்தை வகித்துக் கொள்ளும்படி நேரிட்டபடியா
ல் சிஷர்களுக்கு உபதேசிக்கும் பொருட்டு ஒருதனி
யன் செய்துகொடுக்கும்படி மற்றொருவரைக் கேட்
க, அவர் *“பொட்டைத்தலையும் சிங்கப்பல்லும் தொ

---

* கூடஷ்லாகூ௶ம் வஜ்ராடிம் ஷிஹுவக்த்ரம்

ஷிவஞ்ஜிஜம் ஸம்ஹஜவலாயிநம் வம்தெ தாதம்ஸம்

காஶ ஹாயிநம்.

ந்திப் பொதியும்கொழுப்பும் டம்பமுமுடையவும் சங்
கரம்பாடிக் கூனிபெற்றவும் தாதாசாரியரைச்சேவிக்
கிறேன்"என்று ஒருதனியன் செய்துகொடுத்தார். இ
ந்தத்தனியனை வைத்துக்கொண்டே அவர்சிஷியர்களு
க்கெல்லாம் உபதேசித்து வந்தாரென வைஷ்ணவர்க
ள் வேடிக்கையாக உரைத்தபோதிலும், இது அசம்
பாவியமென்று நினைக்கவேண்டாம். ஏனெனில் ஆசா
ரியர்கள் கிரந்தம் சாதிக்க தொடங்கையில் அவ்விட
த்திலுள்ளவர்க ளெல்லாம் அய்யாதிருவடிகளைப் பற்
றினவர் தானுவென்றும், திருக்காப்புசேர்ததாயிற்று
வென்றும் விசாரித்துக்கொண்டு "சுஹிஷிவ்ய வ
காயாம் நாகூஹெஜூம் விஹீஷணம்" என்பது
போன்ற வாக்கியங்களைக்கிரமப்படி ஊர்த்துவசுவரத்
தில் உச்சரிததுவிட்டு " விஹீஷணம் = விபீஷணும்
"வாருக்கு, பஹம்மாயாம் = கால்களில் சலங்கைக
"ளைக்கட்டி, நாகூஹெஜூம் = ஒரு பெரிய எந்திர
"த்தின்மேல் உட்காரவைத்து, சுஹிஷிவ்ய =தீர்த்த
"மாட்டினார்கள்"என்று பொருள்கூறுவதும் அத்தரு
ணத்தில் அயலார்யாரெனு மிருந்தாக்ஷேபித்தால் "ஒ
ருவீட்டுக்கு இரண்டுவாசல்படி யிருந்தால் காலக்ஷே
பத்துக்கு விரோதம்"என்று முடித்துப்புஸ்தகத்தைக்
கட்டுவதும் பழமொழியாகிவிட்டதல்லவா? இவ்வி
ஷயத்தைக் குறித்து வேறுகிரந்தத்தில் விசாரிக்கப்ப
டுமாகையால் இவ்விடத்தில் விரித்துரைக்க வேண்டி

தில்லை. ஆகிலும் ஆசாரியபுருஷர்கள் அனைவரு
இத்தன்மையரே யென்று நாங்கள் உரைக்கவில்
). நல்லசக்தியுள்ளவர்களோ வெனில் தாங்களறிந்
தை அயலாருக் குரைத்துவிட்டால் தங்கள்மகிமை
றையுமென்றே, அல்லது லாபம் குன்றுமென்
று சகலத்தையும் ரகசியங்களென்றும், அதை அய
ாருபதேசிக்கக்கூடாதென்றும், முதலில் தங்களுக்
நக் குத்தகை யாக்கிக்கொண்டு தங்களிடத்தில் உ
தேசம் பெற்றுக்கொள்வதற்கும் அநந்த நிற்பந்தங்
ளையும் தடைகளையும் ஏற்படுத்திவிடுகிற படியால்
அவர்களிடத்தில் உபதேசம் பெற்றுக் கொள்வோர்
வெகுசிலராயும், அந்தச்சிலரும் அதையாக்ஷேபிக்க
க்கூடாதவராயும் ஆகிவிடுகின்றனர். உபதேசிக்கும்
விஷயம்உண்மையில்ஹாசியமாயிருந்தாலன்றி அதை
ரகஸியமாய்வைப்பதற்கு ஹேதுஇன்னதென்று விள
ங்கவில்லை. உபதேசிப்போருடைய பொருளாசை
யே அதற்கு ஹேதுவெனில் நாங்களதை யாக்ஷேபிக்
கவில்லை. வெகுகாலம் குருகுல வாசம்செய்து, மகா
விசுவாசம் பெற்று, ஸ்ரீபாததீர்த்தமும் கௌபீனதீ
ர்த்தமும் சாப்பிட ஒப்பிச், சொன்னதற்கெல்லாம்தலை
யாட்டும் நிலைமைக்குவந்து, அப்பன்தேடிய அரும்
பொருளெல்லாம் கக்கினலொழிய இந்த லோகோத்
தரமான ரகசியங்களை அறியக்கூடாமல் போகின்ற
மையால், வேகுபேர் இந்த ஞானவிகாசமின்றியேகா
லத்தைக்கழிக்கும்படி நேரிடுகிறது. கடைசியாக அ

ஜைப் பெற்ற சிலரும் அதனாலடைந்த முடிவென்ன வெனில் தமதாசாரியன் கக்ஷியை ஸ்தாபிக்க எத்தன்மையான கொடியகிருத்தியங்கள் செய்தாலும் அவையெல்லாம் ஆசாரியன் கடாக்ஷமாகிய தாம்பிர பஸ்மத்தினால் சுகிருதங்களாகிய சுவர்ணமாகிவிடுகிறதென்பதேயாம். இவ்வாறு சிஷியர்களுடைய மௌட்டியமே தங்களுக்கு பரமப்பிரயோசனமெனக் கொண்டிருக்கும் ஆசாரியர்களுடைய ஆக்கினைக்கு ஒருபாலும், பாமரபந்துக்களுடைய மெரட்டுக்கொருபாலும், பயந்து மனமில்லாதவரும் வயிறெரிந்தாயினும் பொருளைத் தொலைக்கிறார்கள் என்பதும், இவ்வாறு கொள்ளையிடும் பொருளைக்கொண்டு கோயில்துறையாரும் ஆசாரியபுருஷர்களும் வீடு தோட்டம் தாசிதர்ப்பார்களுடன் வாழ்வதும், லோகப்பிரசித்தம். மற்றகொடிய கிருத்தியங்களை விரித்துரைத்தால் பிரகிருதத்தில் பெரியமனிதரென்று பெயரிட்டுக் கொண்டிருக்கும் பலருக்குமனவருத்தமுண்டாகுமாகையால் இவ்விஷயத்தில் அவரவர்மனதே சாக்ஷியென்று குறிப்பிடுவதேபோதும். இது நிற்க இம்மார்க்கத்தினால் மனிதர் தர்ம சுவருபத்தைமறந்து, அதர்மங்களையே தர்மமெனக்கொண்டு, புரிகின்ற கொடுமைகளை நினைக்கில் மனமெரிகின்றது, சொல்லநா வெழும்பவில்லை, கேட்கக் கர்ணகடூரமாகவிருக்கும். வெளிஜில்லாக்களில் உயர்ந்த அதிகாரிகளுக்கு இந்த பக்திரசம் பெருகத்தொடங்கினால், ப

வைக்கொன்று செருப்புதானம் செய்வதுபோல ப
வாயிரம் குடும்பங்களைக்கெடுத்து அவர்களுடைய
ஷ்டார்ச்சிதத்தைக் கதறும்படிப்பறித்து கோயில்க
ரக்கட்டிக் களிப்பதை யறியாதவரு முண்டோ?
வ் விஷயத் திற்குப் பொருளளிப்பவரெல்லாம்
ன முவந் தேயளிக்கிருர்களென்றுபிர
க்கவேண்டாம். சைவர்களும் மாத்துவர்களும் த
கள்தங்கள் மனைவிமக்கள்மாருடைய போஷணைக்
ாகக் கஷ்டப்பட்டு சம்பாதிக்கும் பால் தயிர் முத
ிய பண்டங்களெல்லாம் அவர்கள் மனம்எரியப் பறி
துக்கொண்டு, வைஷ்ணவர்களுடைய பக்தவிக்கிர
ங்களின் தலையில் கொட்டுவதினுல் அவ்வாறு செய்
வர்க்கு என்னபயன்கிடைக்கும்.? பொருளுக்குடை
வருடைய வயிற்றெரிச்சலைக்கண்ட கடவுளானவர்
ித்திய விழலர்களுடைய தேகத்தினின்றும், அவ்வள
ரத்தத்தைக் கறக்கமாட்டாரோ? இக்கொடுமை
ள் பொறுக்காது கடவுள் இப்பாவிகளை, வம்ச
த்ரோடு நசிக்கச்செய்தால் கபடிகளாகிய பிராமணர்
அவர்கள் செய்தபுண்ணியத்தினுல் கூண்டோடு கை
லாசம் சென்ருர்கள் என்றுபுகழ்வது பிறர்க்கும் கு
ல்லாய்போடவேணுமென்ருே, மற்றெந்தஏதுவைப்ப
ற்றியோ அவரவரே யறிந்துகொள்ளக்கூடும். பெரி
பவரெல்லாம் அனுஷ்டித்த இந்தமார்க்கத்தை நிந்தி
யமா யுரைக்கலாமாவென்ருலோ, ஆதியில் சூத்திர
ரை மோசம்செய்வதற்காக உண்டாக்கிய இவ்வேர்ற

பாட்டை பிராம்மணர் ஏகதேசமாகிலும் அவலம்பி
காவிடில், சூத்திரரும் அதையனுஷ்டிக்க ஒப்பாமையா
ல்அவர் பொருட்டென்று அனுஷ்டிக்கத் தொடங்
வே, சணப்பன் வீட்டுக்கோழி தானாய்விலங்கில்மாட
டிக்கொண்டதுபோல, இவர்களும் அச்சேற்றில் கழு
த்தளவுசிக்கிக் கொண்டார்கள். பிறகு பழக்கத்தினா
வியங்கியமும் ஜுகுப்சையும் நீங்கிக்கொடியதொழி
லும்நல்வினையாய் விளங்குவதற்குத் திருஷ்டாந்தமா
கக்கசாப்புக்காரன் கைகூசாமல்ஆடுமாடுகளைஹிம்சிப
பதையும் மலையாளத்து ஸ்திரீகள் பசுப்பிராயமாய்
திரிவதையும்உதகரிப்பதேபோதுமென்றுநினைக்கிறோ
ம். இந்தக்கொடியமார்க்கத்தினால்விளைகின்றஅளவற்
ற தீமைகளை விரித்துரைக்க ஒரு புருஷாயசும் போ
தாதாகையாலும், நாங்களெழுதக் கருதிய புத்தகம்
வெகுசிறிதாகையாலும், அதைஇவ்வளவுடன் சங்கிர
கித்து முடிக்கிறோம்.

கடைசியாகநம்மமுன்னோர்கள்இருந்தஸதிதியையு
ம், அக்காலத்தில் அன்னியநாட்டாருடையநிலைமை
யையும், பிரகிருதத்தில் நமக்கும் அன்னியருக்குமுள்
ள பேதத்தையும், சற்று மனதிற் கொள்வோமாகில்
கைப்புண்ணுக்குக் கண்ணாடிவேண்டியிராது. எதுவ
ரையில் நமதுதேசத்தில் இந்தத்துர்மார்க்கமேற்பட
வில்லையோ, எதுவரையில் சர்வசிரேஷ்டமானவும்,
ஞானநந்த சுவருபியானவும், பிரும்மம் ஒருவரையே
நமது மனம் வணங்கிற்றோ, அதுவரையில் நமதரசர்

ர ஏகசத்திராதி பத்தியம்செய்துகொண்டு, தாங்க
ம் அகண்ட ஐசுவரியத்தை யனுபவித்து, தங்கள்
ுகளையும் குறைவின்றிப்பாலித்துவந்தார்களென்று
, பிறகு இந்தவிஷம் நமது தேசத்திற்பிரவேசித்த
ாதிலும் அதுகியானமற்ற ஒருமூலையில்மாத்திரம்
ுங்கிக்கிடந்தவரையில் அதற்கியைந்தவாறு நம
இராச்சியம் பல சிற்றரசுகளாய்ப் பிரிந்த போதி
ம் அன்னியராச்சியத்தாருக்கு இதில் பிரவேசமின்
நாம்ஒருவாறு சுகமாய்வாழ்ந்து வந்தோமென்று
; கடைசியாகக், கரைபுறண்டு ஒன்றுன தெய்வத்
த யுறங்கச்செய்துவிட்டு அனைவரும் கல்லையும் சட்
டையையுமே தெய்வமென்று கொண்டாடவும், சா
ரணமனிதர்களுக்கும் விக்கிரகங்களை வார்ப்பித்து
வற்றைப் பிரும்மத்துக்கேகியாேபதேசம் செய்
வையென்றும் பிருமத்துக்கு மேலானவையென்
ம் மதிக்கவும், தொடங்கவே கடல் கொதித்தால்
ளாவத்தண்ணீரில்லை என்கிறவும் குரங்கின்கையில்
ந்தியைக்கொடுத்தால் குடிகெட்டுப் போமென்கிற
ம், நியாயப்படிக்கு இனி நம்மவருக்கும் அரசாக்ஷி
ும் வெகுதூரமென்று நினைத்துக் கடவுளானவர்
ம்மை அயலாருக்கு அடிமையாக்கி அவர்களுதைத்
ாலும் தட்டிக்கொடுத்ததாகத் தேற்றரவு செய்து
காள்ளவேண்டிய பிருகிருத நீசதசைக்குக்கொண்
வந்தாரென்றும் சரித்திரங்களா லேற்படுகையில்
ர்ச்சையினுடைய சுவரூபத்தையு ம்அதனால் கடவு

ளடையும் ஆநந்தத்தையுங்குறித்துவி வரிக்கவேண்டு
மோ ? இப்போது உண்மை நம்மவர் மனதுக்கெட்
டாவிடினும் பிரகிருதத்தில் வடகலையாருக்கு ராச்சி
யம் கிடைத்தால் அவர்கள் தங்களினத்தார் தவிர ம
ற்றவரை யெல்லாம் உடனே பரலோகத்துக்குச் செ
லுத்துவார்களென்றும் ; இவ்வாறேஒவ்வொருபிரிவ
ருக்கும் ராச்சியாதிகாரம் வரும்பக்ஷத்தில் அவர்க
ள் இந்தப்பிரதானதருமத்தைமுதலில் செலுத்திவிட்
டுப் பிறகு மற்றகாரியங்களில் பிரவேசிப்பாரென்
றும் சொல்வோமாகில் அனைவரும் ஒப்புக்கொள்வா
ர்களென்பதில் சந்தேகமில்லை. இனியாவது அர்ச்சை
யினால் நாமடைந்தஅந்தசுத்திக்கும் நாமரசையிழந்
தற்கும் உள்ளசம்பந்தத்தின் சுவரூபம் நம்மவரனை
ர்க்குந்தெளிவாய் விளங்குமென நம்புகிறோம். நம்
டைய பிரகிருத தீனதசைக்கு இது ஒன்றேகாரண
மென்று நாங்களுரைக்கவில்லை. நம்ம பெண்பாலு
பவிக்கும் துன்பங்கள்முதலிய இன்னும் பலகாரண
ங்கள்இதன் பொருட்டுப் பிரவர்த்தித்தபோதிலும்
வற்றுள் இந்த பகவன்னிக்கிரகமேபிரதானமான
ன்பது எங்கள்கருத்து. இச்சண்டாள மார்க்கத்தின
ல்லவா நமது ஐகமத்தியம் செத்து நாமெல்லாம்
யிர்ப்பிணங்களானோம். முடிவில் நாம்நமது அறி
ன்மையாலாவது அயலார் மோசத்தினாலாவது ம
மயங்கிப்போவது, மனிதராகியாமதியல்புக்குப் பு
மையல்ல. ஆயினும் உண்மை வெளியானபிறகும்,

க்குத் தாழ்ந்தவரால் வெளியான அநுதி யுண்மை
யை அவலம்பித்தல் அகவுரவமென்றுமதிப்பதுமாத்
திரமே, கடவுளிடத்தில் அறிவைப்பெற்ற நமது சுவ
ரூபத்துக்கு அடுக்காதகாரியமாம். அநுதியாய் உடம்
பில் ஊறிய வியாதியென்று சிகிச்சை செய்யாவிடி
ல், நாமடையத்தக்க முடிவைக்குறித்து உபநியசிக்க
வேண்டுமோ. ஆகையால் துரபிமானத்தைத் தூரவி
ட்டு த்திரயோசித்ததின்மேல் எங்கள் பேச்சின் உ
ண்மை விளங்குமாகில், பிறகாவது நம்மவர் இதுவ
ரை யவலம்பித்த துர்மார்க்கத்துக்காகமுழுகிவிட்டு,
நமது பெருங்காலத்தைப் பாழுக்கிறைத் தோமே
யென்றனுதாபப்பட்டு, இனியாவது சலிக்காத சன்
மார்க்கத்தை யளிக்கவேண்டுமெனஉள்ளூற அவ்வள்
ளலைக்கேட்டுக்கொண்டு தாங்களும் சீரடைந்து அய
லார்க்கும் சீரளிப்பார்களென்று நாங்களாந்தரியமா
ய் நம்பி, நமக்குள்ளேசாக்ஷியாய் உறையும் ஆணும்
பெண்ணுமல்லதை வணங்கி அன்புடன் பிரார்த்தித்
துக் கொள்ளுகிறோம்.

## நான்காவது அத்தியாயம்.

கடைசி அத்தியாயமாகிய இதில் நம்மபண்டிதர்க ளின் ஆக்ஷேபங்களை யோசிப்பதில், அவர்கள் இயற் றுவித்த கண்டனத்தில் குறிப்பிடத்தக்க வாக்கியங்க ளை வரிசையாய் எழுதி அவற்றின் சுவரூபத்தை விசா ரிப்பது உசிதமென்று நினைக்கிறோம்.

க. துவக்கத்தில் அவர்கள் "பெருலவுபடு வே "தக்குழுக்கலைந்து நன்னிதி பெருகவென்றே" எ ன்று அன்புகூர்ந்து பிரார்த்திக்கிறார்கள். நன்னி தி யெதுவோ அதுவே பெருகவேண்டுமென்பதே எங்கள் பிரார்த்தனையும். நீதிபரவி, ஐக மத்தியம், ஜனித்து, தேசம் க்ஷேமமடையுமெனில், எங்கள் கூ ட்டம் கலைவதினால் யாதொரு பாதகமுமில்லை. எங்க ள்முயற்சிக்கும்,சிந்தைக்கும் இயைந்தவாறுகூலிகொ டுப்பவர் சர்வக்ஞியராகையால் அவருக்கு ஒருவரு டைய சிபார்சு ஆவசியகமில்லை. ஆகிலும் அவர்கள் கோரிக்கை பழுதானபக்ஷத்திலும் நாங்கள் அதினு ல் மனம்நோவவில்லையாகையால், கடவுளும் அவர்க ளைக் கடியாமலிருக்க வேண்டுமென உண்மையான வினயத்துடன் கடவுளைப் பிரார்த்திக்கிறோம். இவர் கள் எங்களைத் திட்டவேண்டுமெனச் செய்த யத்தன

னது, நித்தியத்துவம் கேட்கப்போன கும்பகர்
ணன் நித்திரத்துவம் கேட்டதுபோலாயிற்று. ஏனெ
னில் "பெருலவுபடு" என்னும் விசேஷணம் எங்களை
யாட்டும் முன்வேதத்தைப் பற்றுகிறது. ஒருவேளை
அவர்கள்கருத்தே அப்படி யிருந்தாலுமிருக்கலாம். ஏ
னெனில், உண்மையில் இவர்கள் வேதத்தைச்சுருட்
டி மூலையில்போட்டுவிட்டு, "அன்னியமிந்திரம் கரி
ஷ்யாமி" (வேறுஇந்திரனைப் படைப்பேன்) என்று
புராண, ஆகம, தமிழ்ப் பிரபந்த, சம்பிரதாயாதிக் கி
ரந்தங்களை முடிந்துவைத்துக் கொண்டு நடக்கிறவர்
களல்லவா? ஆனால் இவர்கள் தங்கள் மகிமையைக்
கூறும்போதும் சங்கல்பங்கள் செய்துகொள்ளும்
போதும், நாளதுவரையில் வேதமார்க்கப் பிரதிஷ்
டையுடையவரென்றும், சிரௌதஸ்மார்த்தர்களென்
றும் சொல்லிக் கொள்ளுகிறார்களே யெனில், அது
நாளதுவரையில் அவர்கட்குத் தட்டுப்படாமையா
லேயன்றி வேறல்ல. ஏனெனில் வைஷ்ணவர்கள்
ஆதியாய் வழங்கிவந்தமந்திரங்களி லெல்லாம், *
"பிராம்மணர்களைச்சேவிக்கிறேன்"என்றுவருவதெல்
லாம் மாற்றி † "ஸ்ரீவைஷ்ணவர்களைச் சேவிக்கி
றேன்" என்று சொல்லிவருவது லோகப்பிரசித்தம்.
நவீனர்கள் உபயவேதாந்தப்பிரவர்த்தகரென்கிற பெ

---

* ப்ராஹ்மணேப்யோ நம:.
† ஸ்ரீவைஷ்ணவேப்யோ நம:.

யரைவைத்துக்கொண்டிருக்கிருர்களல்லவா? இவற்றில் ஆழ்வார்கள் பாடலும் ஒருவேதாந்தமாகக்கிரகிக்கப் பட்டிருக்கிறது. வேதத்தின்பற்றை வைத்துக் கொண்டாலல்லவா இந்த உபத்திரவமெல்லாம் விளைகிறதென்று இனிநம்மவர் ஆகமப்பிரதிஷ்டை யுடையவரென்னும் பிரிதை வகித்துக்கொள்வார்களென்பதும் சம்பாவியமே.

உ. சபக்ஷகரால் "பொய்யையும் மெய்யாய்ப்பே "சும் புகழுடை விபக்ஷகரே" என்றழைக் கப்பெற்ற விபக்ஷகர் சபக்ஷகரைநோக்கி "சத்தியவாதியான "சபக்ஷகனென்னும் பேர்கொண்ட நித்தனே" என்றழைத்ததுமன்றி "அக்கன சபையாருக்குத்தூதாகநா "னமைந்தேன்" என்று எங்கள் ஸமாஜத்தாருக்கு வகாலத்தில்லாமல் வக்கீலாகத் தான்வந்ததாயும் வீ டையுரைத்திருக்கிருன். விபக்ஷகன் பொய்யனென்பதை ஆக்ஷேபிக்க எங்களுக்குத் திறமில்லை. ஏனெனில் எங்களுக்குவக்கீலெனப் பிரத்தியக்ஷப் பொய்யரைத் தவளைமெய்யனென்று சாதிக்க எங்களால்முடியாது. ஸபக்ஷகனுடைய யோக்கியதையைக் குறித் தோவெனில், ஆயிரப் புளுகனென்று பிரிதுகூறும் விபக்ஷகனுக்குப் பிராணசிநேகித னென்பதொன்றுதவிர, அவன்வரலாற்றில் வேறென்றையும் நாங் களறியோம். "அதிருக்கிட்டும், இதற்கென்னசொல் "லுகிருய்"என்று ஒவ்வொரு பிரதிக்கியையையும் ஒப்புவிக்க மாத்திரம் திறமுடைய விபக்ஷகனைத் தேடி

வத்துக்கொண்டு வாதிக்கத் தொடங்கியதில் சப
நகனுடைய உத்தேசியம் இன்னதென்று விளங்கவி
லை. ஒருதலை வழக்காடும் பழக்கமே அதற்கு ஹே
வெனச்சிலரும், புஸ்தகம் பெருத்துக்காட்ட விப
நகளை வியாஜமாகக் கொண்டு, அனுபயுக்த விஷய
களைக் கிரந்தகர்த்தா எழுதி யிருக்கிறாரெனச் சில
ரும், உரைக்கின்றனர். ஆயினும் உண்மை யின்னதெ
ன்று சொல்ல நாங்கள் கடமைப்பட்டிருக்க வில்லை.

ங. "கூர்மையான புத்தியோடும் நேர்மையான
பத்தியோடும் நான்சொல்லுகிற வசனத்தைக் கேட்
பீராக"என்று அவர்கிரந்தத்தைத் தொடங்குகிறார்.
வேதஸமாஜகண்டன மெழுதியிருக்கும் ரீதியே அவ
நடைய "கூர்மையானபுத்திக்கும்;" அவரெடுத்த க
ஷியின் சுவரூபமே அவருடைய "நேர்மையான பத்
திக்கும்"போதுமான நிதர்சனமாயிருக்குமாகையால்
அவரவற்றை வெளியிட்டுக்கூறியதனுவசியகம். ஒரு
வேளை மத்தியஸ்தர்களவற்றையறிந்து கொள்ளாமற்
போவார்களோவென்கிற சங்கையால், அவரவ்வாறு
கூறும்படி நேரிட்டிருக்கலாம். நாங்களதை ஆக்ஷே
பிக்காமை மாத்திரமேயன்றி, அனைவரும் அதை நம்
பவேண்டியதென்றும் கேட்டுக்கொள்ளுகிறோம்.

ச. "உங்கள் வேதஸமாஜத்தின் முதலாவது
"நிபந்தனையைக் கேட்க ஆரம்பத்திலுண்டான ச
"ந்தோஷமும் முடிவி லுண்டான மனவருத்தமும்
"இங்கு சொல்ல முடியாதனவா யிருக்கின்றன.'

என்று சொல்லி யிருக்கிறது. இதுவரை சூத்தி ராதிகளை ஏமாற்றி மோசம்செய்து வந்தவாறு, இனி யும் செய்வதற்கு நாங்கள் தடையாக வருவதினால், அவருக்குமனவருத்தமுண்டாவதுசஹஜமேயாகிலும் ஆதியிலவர்க்குண்டான சந்தோஷத்துக்கு ஹேதுவி ன்னதென்று விளங்கவில்லை. இதுவரையில் நடந்த மோசமின்னதென்று இவ்விடத்தி லுரைக்கவேண்டி யதில்லை யாகையாலும், அதைக்குறித்து எங்களு டைய நான்காவதுவிண்ணப்பத்தில்விவரமாய்ச்சொ ல்லப்படுமாகையாலும், இந்தக்கண்டனை யென்பதை யியற்றினவர் துணிந்து சுருதிப்பிரமாண மிருப்பதா ய் உதஹரித்திருப்பதொன்றை யிவ்விடத்தில் திருஷ் டாந்தமாயுரைப்பதே போதுமென்று நினைக்கிறோம்.

ரு. "இந்தக்கூட்டத்தில் உண்மையான ஸத்ஸ "ம்பிரதாயமறிந்த ஞானிகளாகிய புண்ணியவான் "களும், தாய் தந்தை குருவின் வார்த்தை தவறுத "கண்ணியவான்களும் சேரமாட்டார்களென்று நிச் "சயிப்பதற்குச் சந்தேகமில்லை" என்று கண்டனைக் காரர் உரைத்திருக்கிறார். இவர் ஆதரிக்கும் ஸத்ஸம் பிரதாயத்தின் ஸ்வரூபம் இதன்முன் மூன்று அத்தி யாயங்களால் நன்றாய் விளங்குமாகையால் அவர்க ளிக்கூட்டத்திற் சேரமாட்டார்களென்பது புதுமை யல்ல. நாங்கள் கண்ணியவான்களென்று விலா சம் போட்டுக்கொண்டு திரியவில்லை யாகையால் எங்களை அவர் கண்ணியவான்க ளல்லவென்பதினால்

ங்களுக்கு மனவருத்தமில்லை. தாய் தந்தை குருவி ன் வார்த்தையைத் தவறுதல் கண்ணியத்துக்கு இ சையாதென்பது சாமானிய விதியேயல்லாமல் சா தாரணவிதியல்ல. "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்"*என்றும், "தாயைத் தெய்வமாகஅடை, தந்தையைத் தெய்வமாகஅடை; குருவைத் தெய்வ மாகஅடை; விருந்தைத்தெய்வமாகஅடை,"என்றும் சொல்லியிருப்பதுஉண்மை. உலகத்தில் மனிதர்க்குக் கற்பிக்கவேண்டிய விஷயங்கள்பலவும், கற்பிக்கவே ண்டாத விஷயங்கள் சிலவும், உளவென்பதில் சந் தேகமில்லையே. பிறருபதேசமின்றி எழுதப்படிக்க வும், ஒருதொழிலில் முயலவும்மாட்டாத ஒவ்வொரு வனும் பிறர்சகாயமின்றியே சுவயமாய் உண்டு குடி த்து உறங்கக் கற்றுக்கொள்ளுகிறானல்லவா? இதினா ல் அத்தியாவசியகமான விஷயங்களில் உபதேசம் அனுவசியகமா யிருக்கும்படி கடவுளமைத்திருக்கிறா ரென்பதில் சந்தேகமில்லையே. இவ்வாறே நாமனைவ ரும் அனவரதம் கடவுளைத் தொழுதேற்றிக் களிக்க வேண்டுமென்று ஒப்புக்கொண்டிருக்கிறவிஷயத்தை த்தாய் தந்தை குருவிருந்தைத் தொழவேண்டுமென் கிற வேதவாக்கியத்தில் சொல்லாம லிருப்பதினாலே

---

* மாத்ருதேவோபவ, பித்ருதேவோப வ, ஆசார்யதேவோபவ, அதிதிதேவோ பவ.

தேவ பூஜைவிஷயம் அனைவருக்கும் சுவயமாய்த்
தெரிந்திருக்கவேண்டிய அத்தியாவசியகமானதாகை
யால் அதை வெளிப்பட உரைக்கவில்லையென்றும்; ம
ற்றவர்களுக்குரிய தாரதம்மியக்கியானம் சொன்னா
லன்றி விளங்கமாட்டாத கவுண தர்மங்களாகையா
ல் அவற்றை முறையாயடிக்கிச் சொல்லியிருக்கிற
தென்றும் விளங்கும். "முந்தித்தவங்கிடந்து முன்னூ
"று நாட்சுமந்து, அந்திபகலாய் சிவனையாதரித்துத்,
"தொந்திசரியச் சுமந்துபெற்ற பிறகோவெனில் வ
"ட்டிலிலும் தொட்டிலிலும் மார்மேலும் தோள்மே
"லும் கட்டிலிலும்வைத்தென்னைக் காதலித்து முட்
"டச்சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டி நோவாம
"லேந்திமுலைதந்து வளர்த்தெடுத்துத்தாழாமேயந்தி
"பகல் மாகக்குருவி பறவாமற்கோதாட்டி மெள்ள
"முகம்மேல்முகம்வைத்து,முத்தாடி என்றன்மகனே,
"உரிசையுள்ளதேனே, தெள்ளமுதே,"என்றழைத்து
மகன்களிக்க முகமலர்ந்து அவன்வருந்த ஆவியொ
டுங்கும் தாயைக் கடவுளுக்கு மாத்திரம் தாழ்ந்த
வளாகிலும் மற்றவரனைவர்க்கும் மேலானவளென்று
விளக்க சுருதியானது அவளை முதலில் உரைத்தது.
நாம் தோன்றியது முதல் நமதுயிர் வாழ்க்கைக்கின்
றியமையாக்கருவியாகிய பொருளைப்படைத்து ரக்ஷி
த்து அறிவைப்புகட்டி அன்புபாராட்டி தன்பேறுக
ளிலெல்லாம் சிறந்தது மக்கட்பேறென மதித்துத்
தானுயிர்வாழு மளவுமாத்திரமேயன்றி பிறகும் சுக

ந்தோஷ ஆனந்த அனுபவங்கள் தன் மக்களுக்கு
லைத்திருக்க வேண்டுமென இரவும்பகலும் உழை
துப்பொருள்குவித்துத் தன்மக்களிடத்தில் ஒப்புவி
பதுமன்றித் தான்மாண்டபிறகும் மக்கள்மஹிமை
யக் காப்பாரென்கிற திருப்தியுடனும் கண்மூடும்த
ந்தை, தாய்க்கொப்பாகாவிடினும், மற்றவர்க்கெல்லா
சிறந்தவனுகையால் சுருதிஅவனை இரண்டாவதா
விதித்தது. கடவுளும் தாய்தந்தைகளும் பிராணி
ாமானியமும் நமக்குப்புரியும் நன்மைகட்காக நா
செய்யக்கடமைப் பட்டிருக்கும் தொழில்களின்
னவையென்றும், தர்மாதர்ம தாரதம்மியங்க ளித்த
ன்மையானவையென்றும் பொருள்படைத்துச் செல
வழிக்கவேண்டியவழியின்னதென்றும்,இம்மையிலும்
மறுமையிலும் சுகம்பெறுவதற்கு உபாயங்க ளின்ன
வையென்றும், அன்புகூர்ந்து உபதேசிக்கும் ஆசாரிய
னை மூன்றுவதாகக் கொள்ளுகிருர்கள். சன்மார்க்க
ங்களை யவலம்பித்து நன்முயர்ச்சி செய்தும் அல்ல
துமுயலச்சக்தியற்றும் உணவுகிடைக்காமல் ஆத்மஹ
த்திக்குப் பயந்து ஆவசியகத்துக்காகக் கடவுளாலே
வப்பட்டு ஒருவாயன்னங்கேட்க நம்மிடம்வரும் அதி
திகளுக்கு நாம்மனமிரங்கி உதவினுல் கடவுள்மனமு
வப்பாராகையால் விருந்தினர் மற்றவர்க் கொப்பாகா
விடினும் அவரையும் மனத்தாழ்வு வாராதுஆராதிக்
க வேண்டுமென்கிற ஹேதுவினுல் அவர்கள் பூஜியர்
களுக்குள் கடைவராய் வைக்கப்பட்டனர். இவ்வா

று இயல்பா யேற்பட்டிருக்கும் தார தம்மியங்க
க்கவனிக்காமல் விருந்தின்பேச்சைக்கேட்டுக்குரு
க்கைவிட்டாலும் குருவின் பேச்சைக் கேட்டுத் த
ய்தந்தைகளைக் கைவிட்டாலும், இவர்களில் யார்பே
ச்சைக் கேட்டாலும் கடவுளைமதிக்காவிடிலும் பி
மாதம் வந்துறுமென்பதில் சந்தேகமுண்டோ? மே
குறித்த ஐவகையாரில் இருவர் நம்மை ஏககாலத்தி
ல் ஒன்றுக் கொன்று நேர்விரோதமான இரண்
டுமார்க்கங்களிற் செல்லும்படி ஆக்கியாபிப்பார்
ளெனில் நாம் அவ்விருவழியிலும் செல்ல முடியா
தாகையால் அவற்றில் ஏதாவது ஒன்றையே அவ
ம்பிக்கவேண்டுமென்பது நிச்சயம். ஆகிலும் அவ
ற்றுள் எதை யொழிக்கக்கூடும், எதை யவலம்பிக்க
வேண்டும், என்பதை முந்தியறிந்துகொள்ளவேண்டி
யது நமக்கு விலகாக்கடமையாகும். ஏனெனில்
தாழ்ந்தவரை இணங்கி உயர்ந்தவர் கோபத்தைத்
டுக்க நம்மால் முடியுமோ! இதுபற்றிதான் இரண்டு
விபத்துக்கள் வந்துறுமாயின் அவற்றுள் லேசானத
ற்குள் பட்டுபெருவானதைத் தடுக்கமுயல்வதே புத்
திசாலித்தனமென அனைவரும் ஒப்புக் கொள்வார்க
ள். மனிதனுடைய சுவரூபஸ்திதி ஆவசியகாதிகளு
க்கனுகுணமாக அவனுக்குரிய கடமைகளில் பல
படித்தான தாரதம்மியங்கள் ஏற்பட்டிருக்கின்ற
ன. நமது ஆத்மா நித்தியமாயன்றி இவ்வுடலோடு
பிறந்து இவ்வுடலோடழியும் பக்ஷத்தில் நாம் தாய்

ந்தைகளைவிடக் கடவுளை மேலாகக் கொள்ளவேண்
ய ஆவசியகமில்லாமை உண்மையே. அப்படிக்க
றி நாம் இவ்விடத்தில் அனுபவிக்கத்தக்க பூர்ணாய
ஸும் இனிகடவுளிடத்தில் பணிசெய்யவேண்டிய
கணித அசங்கியேய அநிர்வாச்சிய அநந்த காலத்
டன் ஒப்பிடுகையில், கேவலம் பூஜிய (0) மாகவி
ங்குமாகையால் இந்தச் சுன்னை காலத்தில் நமக்கு
ந்துவா யிருப்பவருடைய விரோதம்பெரிதோ, இந்
பூஜியகாலத்திலும், இனியுள்ளநித்தியகாலத்திலும்,
மக்குத் தாய்தந்தை நண்பர் சுற்றம்முதலிய சகல
ாயுமுள்ளவர் விரோதம் பெரிதோஎன்பதை மன
ந்தற் கொள்வோமாயின் முன்னுவது பின்னுவருசம்
ந்தமற்று நடுவில் சிலவருஷகாலம் ஒட்டுறவாடு
வார்க்குப் பயந்து நன்மைக்குமுதும் தீமைக்குவி
டிமுமான நித்திய பந்துவை மதிக்கவேண்டியதி
ல்லையெனச் செய்யும் ஞானோபதேசத்தின் மதிப்பை
க்குறித்து விரித்துரைக்க வேண்டிய ஆவசியகமில்லை.
நல்லவிஷயத்தில் தாய்தந்தைகள் மாத்திரமேயன்
றி மற்றயாருரைத்தாலும் அவர்கள் பேச்செல்லாம்
கேட்க நாங்கள் கடமைப் பட்டிருந்தபோதிலும்
கொள்ளை கொலைமுதலியவற்றைச் செய்யும்படி யா
ர்சொன்னபோதிலும் அதுஉபதேசமாகுமோ, அதை
யவலம்பிக்க வேண்டியதும் விதியாகுமோ ? கடைசி
யாக நாங்கள் எங்களுக்கு மேற்பட்ட பலவகையா
ருக்குமுள்ள உண்மையான தாரதம்மியத்தை மன

திற்கொண்டு எங்களுடைய தந்தைகட்கு மாத்திரமே யன்றி அவர்களுடையவும், அனைவருடையவும், தாய் தந்தைக்கும் மனஸ்தாபமில்லாமல் நடக்க முயலு மெங்கள் மீதுஹேதுவின்றி யாரேனும் மனவருத்தம டைந்தால் அதற்காகநாங்கள்சங்கடப்பட்டு முடியா து. எங்களுடைய பிரவிருத்தி நல்லதாகவே யிருந்து எங்கள்அப்பன் திருவுள்ளத்துக் கிசைந்திருந்தால் அ தையாதரிக்க வேண்டியவழியவர்க்குத்தெரியும்.

சு. "ஆனால் மிகவும் மகிமைதங்கிய வேதப்பிரதி "பாத்தியமான ஹிந்துமதத்திற் பிறந்தும் பாலியவி "யற்கையினாலேயோ மற்றஎவ்விதவிதிவசத்தினாலே "யோ கரும்புகசப்பது வாய்க்குற்றமென்பதுபோல "மதிமயக்கத்தினால் நமதன்பருக் குண்டாயிருக்கும் "புன்மதிக்கிரங்கி பெரியோர்களாலேவப்பட்டயாம் "வெளியிடுகிற வேதார்த்தங்களை நன்றாயறிந்துகொ "ள்ளும்" என்று சொல்லியிருக்கிறது. நமதுஆதிமத ம்"மிகவும் மஹிமை தங்கிய வேதப்பிரதிபாத்தியமா "ன"தென்பதில் எவ்வளவும் சந்தேகமல்லை. ஆகினு ம் பிரகிருதத்தில் நம்மவர் அவலம்பிக்கும் துர்மார்க் கத்தின் சம்மந்தத்தினால் "தான் கெட்டதுமன்றி ச "ந்திரபுஷ்கரணியையும் கெடுத்தானெ"ன்பதுபோ ல வேதத்தின் மஹிமையையும் குறைக்க முயல்வதி ல்இவர் கருத்தின்னதென்று விளங்கவில்லை. நாங்கள் பார்த்தவரையில்வேதத்தால்நிந்திக்கப்பட்ட இக்கொ டிய வழியை வேதப்பிரதிபாத்தியமானதென்று இவ

சொல்லத் துணிந்தது வெகுஆச்சரியமாக விருக்கி றதுமன்றி அதற்காதாரமாக அவர் சுருதிகளையெடுத் துரைக்கத்துணிந்தது இன்னும் வெகுஆச்சரியமாகவி ருக்கிறது. இவர்பிரமாணமாக அவலம்பிக்கும் கிரந்த ங்களினால் உபதேசிக்கப்பட்ட சத்தியத்தின் சுவரூப த்துக்கு இதில் அவருதகரிக்கும் சுருதிப் பிரமாணங் களே நிதர்சனமென்பாராகில் அதின் தன்மையைம த்தியஸ்தர்களே யறிந்துகொள்ளவேண்டியது. நவீன மாய்க்கும்பகோணத்தில் ஏதாவது வேதம்சிருஷ்டிக் கப்பட்டிருந்தால் அதில் ஒருவேளை இந்த அர்ச்சை பிரதிபாதிக்கப் பட்டிருக்கலாமென்பதில் சந்தேகமி ல்லை. ஆகிலும் பட்டியமான சுருதிகளென்று அனைவ ராலும் ஒப்புக் கொள்ளப் பட்டிருக்கிற வேதமுழு மையும் அர்ச்சையை நிந்திக்கிற தென்பதற்கு இந் தவிண்ணப்பத்தில் நாங்களெடுத்துரைத்த அனேக ப்பிரமாணங்கள் போதுமான ருஜுவாயிருக்குமா கிலும் அதை அர்த்தாந்தரமாயாவது எவ்விடத்தி லாவது சுருதி ஆமோதித்ததென்பதற்கு யிதுவரையி ல் ஒரு பிரமாணமாவது தலை நீட்டவில்லை. சாணி யைப் பரிமளமாகக் கொண்ட நம்மவருக்குத் தித்தி க்கும் கரும்பின் சுவரூபத்தை விசாரித்தால் அது எ ங்கட்குமாத்திரமே யன்றி, சுவரூபவிசாரம் செய்யு மனைவருக்கும் கசப்பது புதுமையல்ல. இப்பேய்க்க ரும்பே அவருக்கு இவ்வளவு இனிப்பளிப்பதற்கு வே தத்திற்குறித்தநற் கரும்பையுண்டு அப்பியசிக்காமை

யே காரணமெனச் சிலருரைக்கினும் அவ்விஷயத்தில் நாங்கள் அபிப்பிராயஞ்சொல்லக்கடமைப்படவில்லை. அவருண்ணுங் கரும்பும் வேதத்திற்கூறிய கரும்பும் கடைத்தெருவில்வந்துவிட்டபடியால்அவரவருடைய சுபாவத்துக்கும் உரிசைக்குமியைந்தவாறு இஷ்டமானதைக் கொள்ளுவார்கள். எங்கட்கு ப்"புன்மதி"யில்லையென்றுவது நாங்கள் "மதிமயங்க" மாட்டோமென்றுவது நாங்களுரைக்கவில்லையாகிலும் பிரகிருதத்தில் எங்கட்குண்டா யிருக்கும் 'புன்மதியும்' 'மதிமயக்கமும்' சுருதியையும் யுக்தியையும் ஆதாரமாகக்கொண்டிருக்கின்றன வென்பதில் சந்தேகமிராது. நமது அன்பருடைய நன்மதிக்கும் தெளிவிற்கும் ஆதாரமாக அவர் உதஹரித்த சுருதி "பஞ்சபாண்டவ "ரை நானறியேன், கட்டிற்காற்போல் மூவரல்ல "வா" என்பதுபோல் முடிந்ததற்காக நாங்களுண்மையாகவே பரதவிக்கிறோம். "எங்கள் புன்மதிக்கிரங்கி"ய இவர் தமது அந்தஸ்துக் கிரங்கி யிருப்பாராகில் இந்தத்தொழிலில் ஆழமறியாமற் காலிட்டுக்கொண்டிருக்கமாட்டார். தம்மையேவியதாய்ச்சொல்லும் "பெரியோர்கள்" நேராய்ச் சஞ்சிகை யெழுதாமல் இந்தக்குள்ளரைக் கொண்டாழம்பார்க்க எத்தனித்ததற்குக் காரணமென்னவெனச் சற்று யோசித்திருப்பாராகில் இவரித்தொழிலுக்கு வந்திருக்கமாட்டாரென்பதற்குச் சந்தேகமில்லை. ஆதியிற் பிறந்த வேதத்தை மூலையிலடக்கத் தமிழ்வேதம் வந்ததுபோ

, அதை மூலையிலடக்க வெங்கிட சேஷாத்திராசா
யர் வேதம்வெளியாகிறபடியால் அதையெல்லாரும்
வனமாய்க் கேழ்க்கவேண்டியதே. அதுபற்றிதான்அ
ர் அதை "நன்றாயறிந்து கொள்ளுமெ"ன்கிறார்.
எ. "சர்வலோகசரண்ணியராயும் சச்சிதாநந்தசு
வரூபராயுமிருக்கிறசாக்ஷாத்பரப்பிரும்மத்தினு
டையதேஜோமயமாகிய முகத்தினின்றுபிராம்மண
ரும், தோளினின்று க்ஷத்திரியரும், தொடையினின்
றுவைசியரும், பாதத்தினின்று சூத்திரரும், மனதி
னின்று சந்திரனும், கண்ணிலின்று சூரியனும், முக
த்தினின்றுஇந்திரனும், அக்கினியும்,பிராணத்தினின்
றுவாயுவும், நாபியினின்று அந்தரிக்ஷங்களும்,மற்றி
ன்னமுள்ள அனேகவிதமாகிய வஸ்துக்கள் யாவும்
அந்தப்பிரும்மத்தினது திவ்விய ரூபத்தினின்றே உ
ற்பத்தியாயின வென்றும், அதினுடைய நிறம்நீல
மாயும் வெண்மையாயுமிருக்குமென்றும், அந்தப்ப
கவானே பிரும்மாவென்றும், சிவனென்றும், சொ
ல்லப்படுமென்றும், நமதுஆரணம் மூன்றும் பிரசி
னம் பன்னிரண்டா மனுவாகதில் ஆரம்பமாகிற பு
ருஷசூக்தமென்கிற சுருதி முறையிடுகிறதே" எ
ன்று சொல்லியிருக்கிறது. இதைகுறித்துக் கூடியவ
ரையில் விரிவாய் இதின் முதல்அத்தியாயத்தில் சர்ச்
சித்திருக்கிறோமாகையால் பிரகிருதத்தில் விசேஷ
மாயுரைக்க வேண்டியதில்லை. இந்த புருஷசூக்தம்
கேவலம் குணார்த்தவாதமேயன்றி பூதார்த்தவாதமல்

லவென்று முதலத்தியாயத்தில் ஐயமற நிரூபித்துக்
காட்டப்பட்டது. அப்படிக்கன்றி,அதை பூதார்த்தவா
தமாகவே கொள்ளவேண்டுமென்னும் பக்ஷத்தில் அ
தில் விராட்டின் அவயவங்களி னின்றும் பிராம்மண
தி மனிதர்களும் இந்திராதிதேவர்களும் உண்டான
தாக வெளியாகின்றமையால் விராட்டென்பதற்கு
பொருளென்னவென்று விசாரிக்க வேண்டியதாக இ
ருக்கிறது. வித்தியாரண்ணியரும் மஹீதரரும்பிரப
சமே விராட்டாகவும், பிராம்மணாதி மனிதர்களு
இந்திராதி தேவர்களும் அந்தப் பிரபஞ்சத்துக்கு
வையவங்களாகவும், வர்ண்ணிக்கப் பட்டிருப்பதா
பாஷியஞ்செய்திருப்பதை முன்னேயேநிரூபித்திருக்
றோம்அன்றியும்*"அதினின்றும்விராட்டுண்டாயிற்று
என்கிற வாக்கியத்தினால் விராட்டுக்கு ஒருகாரண
ருந்ததாயும் இது உண்டானதாயும் ஏற்படுகிறபடி
ல் "அது" என்னும் பொதுப்பெயர் பிரும்மத்தை
ளக்கிறதென்றும், விராட்டென்பது அதின்னின்று
வேருனவும், அதின்னின்றுமுண்டானவும், பிரபஞ்
மென்றும் நிச்சயிக்கவேண்டி யிருக்கிறது. அப்படி
கன்றி விராட்டைப் பிரும்மமென்றே கொள்ளும்
க்ஷத்தில்,அதற்கொரு உற்பத்தியையும்,அந்தஉற்பத்
க்கொருகாலத்தையும், காரணத்தையும், அங்கிகரிக்
வேண்டியதாகிறது. இது சகலருடைய மதத்துக்கு

* தஸ்மாத்விராளஜாயத.

வ்வாதகொள்கையல்லவா? அன்றியும் "அதைஎத்த
விதமாகக்கல்பித்தார்கள், அதற்குமுகமெது, தோ
களெவை, தொடைகளும்,பாதங்களுமெவையென்
சொல்லப்படுகின்றன"என்கிற வினுக்களுக்கு வி
டயாக நமதுஅன்பர் உதகரிக்கும்வாக்கியம் வருகி
றமையால் முதலில் இவ்வினுக்களின்பொருளைச் ச
று மனதிற்கொள்ளவேண்டியதாகிறது. "எத்தனை
தமாகக்கல்பித்தார்"என்னும்போது எத்தனைவிதமா
வர்ணித்தாரென்று சொல்லக் கூடுமேயன்றி, அ
த சிருஷ்டி பரமாயாக்கி எத்தனைவிதமாக சிருஷ்
த்தார்களெனப் பொருந்துமோ? அப்படியாகில்
ார் எதைக் கல்பித்தார்களென்பதைச் சற்றுயோசி
கவேண்டியது. அவ்வாக்கியசந்தர்பத்தால்அதற்குக்
ர்த்தாதேவதைகளென்றேர்ப்படுகிறது. கர்ம்மம்யா
ரனில் நமதன்பர்சொல்லுகிறவாறுபிரும்மமாகவே
ருக்கவேண்டுமெனில்பிரும்மத்துக்குஒருகர்த்தா இ
ந்ததாக ஒருவருமொப்பமாட்டாராகையாலும்,பிர
ஞ்சத்தைபிரும்மமேசிருஷ்டித்ததாகப்பலரும், சது
முகன்சிருஷ்டித்ததாகச்சிலரும், சொல்வார்களேய
ன்றிஇதரதேவதைகள்சிருஷ்டித்ததாகஒருவரும்சொ
ல்லமாட்டார்களாகையாலும், இவ்விடத்தில்கல்பனை
யென்பதற்கு வர்ணனையென்று பொருளாகுமேயன்
றி சிருஷ்டியென்ருகமாட்டாது. இதுதான் சரியான
கொள்கையென்பதை "தொடைகளும் கால்களுமெ
வையென்று சொல்லப்படுகின்றன"என்கிறவாக்கி

யம் ஸ்தாபிக்கிறது. ஏனெனில் நம்மன்பர் வாதிக்கி
றவாறு தொடைகளும் பாதங்களும் எவையென்று
சிருஷ்டிக்கப்படுகிறதென்றால், பொருளே யில்லாம
ல்போகிறது. இதற்குவிடையாக பிராம்மணன் அத
குமுகமானானென்பதில், பிராம்மணனை உபாதானகா
ரணமாகவும்,முகத்தைக் காரியமாகவும்,சொல்லியிரு
க்கின்றமையால் அதுண்டானதற்குமுன் பிராம்மண
னிருந்ததாய்ச்சொல்லவேண்டியதாகிறது. வர்ணனை
யொன்றுதவிர மற்றொன்றிலும் இவ்விதமாய்நேரிடுவ
துசாத்தியமல்லவெ. க்ஷத்திரியன் தோள்களாக்கப்ப
ட்டான், வைசியன் எதுவோ அதுவே அதற்குத்தொ
டைகள்,என்கிறவாக்கியங்களும் மேற்குறித்தகொள்
கையின்நேர்மையைஸ்தாபிக்கின்றன.பாதங்களினின்
றும் சூத்திரனுண்டானான், என்கிறவாக்கியத்திற்கு
இவ்வாறே பொருள்செய்யாவிடில் மேற்குறித்தசங்க
ர்ப்பங்களுக்கும் இவ்விதமாகஉலகங்களைக்கல்பித்தா
கள் என்று இதின்முடிவில் வருகிறவாக்கியத்திற்கு
இசையாமற்போகுமல்லவா? இந்தஹேதுக்களாலெல்
லாம் இது கேவலம் பிரபஞ்சவர்ணனையென்று ஏ
படுகிறது. அப்படிக்கன்றி இதை சிருஷ்டி பரமா
வே கொள்ளவேண்டுமென்னும் பக்ஷத்தில் சிருஷ்டி
யைச்சொல்லவேவந்த ஐத்திரீயஉபநிஷத்தின் சகாய
த்தால் இதற்குப்பொருளேற்படவேண்டியதாகிறது
இந்த உபநிஷத்தில் பிரும்மம்முதலில் ஜலத்தினின்
றும் ஒருபுருஷனைச்சிருஷ்டித்ததாகவும் இப்படிச்சி

டிக்கப்பட்ட புருஷனுடைய அவயவங்களினின்று
சூரியாதி தேவதைகள் உண்டானார்களென்றும் ஸ்
ஷ்டமா யேற்படுவதாய் இதின் ருசு-ருடு பக்க
களினால் விளங்கும். இவ்வாறு பிரும்மத்தினால் சிரு
டிக்கப்பட்ட ஒருவனுடைய அவயவங்களைபிரும்ம
தின் அவயவங்களென்றுபற்கூசாமற்சொல்லிக்கோ
ட்டாரையேமாற்றுவதுபோல் நம்மவரையேமாற்ற
ம்மன்பர் துணிந்தபோதிலும், அவருக்குள்ளும் வெ
ியும் சாக்ஷியாகவிருக்கும் பரமபுருஷன் அன்புகூர்
து உண்மையை நமக்கு வெளியிடாமலிருப்பாரோ!
இது அர்த்தத்தில் சந்தேகம்ஜனிக்கத்தக்கவாக்கியமா
கையால்அவர்இதைப்பிசகாய்க்கிரகித்துதஹரித்தாரே
யன்றி, மோசக்கருத்துடனல்லவென யாரேனும் நம்
மன்பரைச் சமர்த்திக்கத் தொடங்கு வார்களாகிலும்,
இவருதஹரிக்கும் மற்ற சுருதிப் பிரமாணங்களைக் க
ண்ணுற்றமாத்திரத்தில் இவர் நெஞ்சு தைரியத்தைக்
கண்டு வருந்தி இவரைக் கைவிடுவார்க ளென்பதில்
நாங்களீஷத்தேனும் சந்தேகிக்கவில்லை. நாங்கள்மே
லே அனுவதித்த நம்மன்பருடைய வாக்கியத்தில் "அ
தினுடைய நிறம் நீலமாயும் வெண்மையாயு மிருக்
கும்" என்று சொல்லிருக்கிறதல்லவா? இது உத்தர
நாராயணத்தைச்சேர்ந்ததேயன்றிபுருஷஸூக்தத்தை
ச்சேர்ந்ததன்று. இவ்விடத்திலும் வாக்கியமுழுமையு
ம் மொழிபெயர்த்து எழுதப்பட்டால் ஒருவரும்மோ

சம் போவதற் கிடமிராதாகையால் அதை இவ்விடத்
தில் உரைப்பது உத்தமமென்று நினைக்கிறோம்.

*“எதுசகலத்திற்கும் மஹத்தான ஸ்தானமோ அ
“து ஹிருதயமென்றறி. அது நரம்புகளால் சூழப்ப
“ட்ட ஒரு பையைப்போலும்; அதில் ஒரு சிறிய
“துளையுண்டு. அதில்சகலமும் வைக்கப்பட்டிருக்கிற
“து. அதின்மத்தியையில் மேல்நோக்கிய வெகுசூக்ஷ
“மமான ஒரு அக்கினிசிகை வைக்கப்பட்டிருக்கிறது.
“அந்தச் சிகையானது கருமேகத்தின்நடுவில்உள்ளமி
“ன்னல் கொடியைப்போல் பிரகாசிக்கின்றது. செ
“நெல் நுனியைப்போல் சூக்ஷ்மமாயும், செவந்தநிற
“முடையதாயும்,உள்ளது. அந்தச்சிகையின்மத்தியை
“யில் பரமாத்மா யிருக்கிறார்.” என்று சொல்லியிரு
க்கிறது. இதில்நீருண்டகரிமேகத்தின்நடுவில்மின்ன

---

* 𑌹𑍃𑌦𑌯𑌂 𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌯𑌾𑌦𑍍 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌯𑌤
𑌨𑌂 𑌮𑌹𑌤𑍍. 𑌸𑌨𑍍𑌤𑌤𑌂 𑌶𑌿𑌰𑌾𑌭𑌿𑌸𑍍𑌤𑍁 𑌲𑌮𑍍𑌬𑌤𑍍𑌯𑌾
𑌕𑍋𑌶𑌸𑌨𑍍𑌨𑌿𑌭𑌂. 𑌤𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑍇 𑌸𑍁𑌷𑌿𑌰𑌂 𑌸𑍂
𑌕𑍍𑌷𑍍𑌮𑌂, 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂. 𑌤𑌸𑍍𑌯 𑌮𑌧𑍍𑌯𑍇
𑌵𑌹𑍍𑌨𑌿𑌶𑌿𑌖𑌾𑌣𑍀𑌯𑍋𑌰𑍍𑌧𑍍𑌵𑌾 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾. 𑌨𑍀
𑌲𑌤𑍋𑌯𑌦𑌮𑌧𑍍𑌯𑌸𑍍𑌥𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌲𑍍𑌲𑍇𑌖𑍇𑌵 𑌭𑌾𑌸𑍍𑌵𑌰𑌾
𑌨𑍀𑌵𑌾𑌰𑌶𑍂𑌕𑌵𑌤𑍍𑌤𑌨𑍍𑌵𑍀 𑌪𑍀𑌤𑌾 𑌭𑌾𑌸𑍍𑌵𑌤𑍍𑌯𑌣𑍂𑌪
𑌮𑌾. 𑌤𑌸𑍍𑌯𑌾𑌃 𑌶𑌿𑌖𑌾𑌯𑌾 𑌮𑌧𑍍𑌯𑍇 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑍍𑌯
𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃.

காடியைப்போன்ற ஒளியைநமது ஹிருதயத்திலுள்ளதாய்ச்சொல்லப்பட்ட அக்கினிசிகைக்குவிசேஷணமாய்ச்சொல்லிவிட்டு அந்தச்சிகையின் நடுவில்பரமாத்மாவிருப்பதாய்ச் சொல்லியிருக்கிறதேயன்றி, அந்த பரமாத்மாவினுடையவர்ணமென்று சொல்லவில்லையல்லவா? ஒருவேளைஇதைப் பரமாத்மாவுக்குத்தான் விசேஷணமெனத் துணிவாரோவெனில் அதற்கிடமில்லை. ஏனெனில் "ஐய்யுஹூா,ஹாஸ்ஹுா" என்கிற விசேஷணங்கள் ஸ்திரீலிங்கசப்தங்களாகையால் சிகைஎன்கிற ஸ்திரீலிங்கத்தோடு பொருந்துமேயன்றி பரமாத்மாவென்கிற புல்லிங்க சப்தத்தோடுபொருந்ாதென்பது சம்ஸ்கிருதத்தில் விசேஷணவிசேஷியங்களின்சம்மந்தத்தையறிந்தவர்களுக்கெல்லாம்விளங்குமாகையால் இதற்கு வேறுபொருள்செய்ய நம்மன்பர் இனிதுணிவாரென்று நாங்கள் நம்பவில்லை. மேலேயனுவதித்த வாக்கியத்திலேயே. "அந்தப்பகவானே பிரும்மாவென்றும், சிவனென்றும் சொல்லப்படும்" என்று சொல்லியிருக்கிறது. இதை யாக்ஷேபிப்போர் ஒருவருமில்லை. பரமபுருஷனுக்கு ஜாதகர்ம நாமகர்மங்கள் செய்யவில்லையென்றும், அப்பொருளைவிளக்க ஒவ்வொரு தேசத்தாரும் ஒவ்வொருசமயத்தாரும் ஒருபெயரை யிட்டுக்கொள்வது ஆவசியகமென்றும் ஏற்படுகிறதல்லவா! அவருடைய அநந்த கல்லியாணகுணங்களெல்லாம் விளக்கத்தக்க ஒரேபெயரை யிடுவதற்கு நம்மால் முடியாதாகையால் அவருடைய ஒவ்

வொரு குணத்தையும், அனுசரித்து ஒவ்வொருபெய ரையிட்டபோதிலும் பெயர்களின்பன்மையால்அவை விளக்கும் பொருளும் பலவாமோ? இது எவ்விதமாக நம்மன்பருடையகொள்கையை ஸ்தாபிக்கிறதோ தெரியவில்லை. எங்கள் புத்திக்கெட்டியவரையில் அவருக்கு விரோதமாய் முடிகின்றதேயன்றி அனுகூலமாய்த்தோன்றவில்லை. எப்படியெனில் நம்மவர்பொம்மைகளைப்படைத்து வைத்துக்கொண்டு விஷ்ணுவேறென்றும் சிவன்வேறென்றும் அவர்களில் ஒருவர் சிரேஷ்டமென்றும் மற்றொருவர் நிகிருஷ்டமென்றும் போராடித்தலையை யுடைத்துக் கொள்வது பழுதேயன்றி, எந்தப்பெயராலழைத்தபோதிலும் எங்களுத்தேசியம் பிரம்மமேயென்னும் எங்கள் கொள்கைப்பழுதானதல்லவென்று ஏற்படுகிறதல்லவா ?

அ. இந்தசுருதியினால் நம்மன்பரடைந்த பிரயோஜனம் போதாதென்று "இதின்பாஷியத்தைப் பரி "சோதித்தால் பரமாத்மாவினுடைய குணங்களெல் "லாம் உள்ளங்கைக்கனிபோலக் காணலாம்" என்று சொல்லியிருக்கிறார். இவர் இன்னபாஷியத்தைக்குறிப்பிடுகிறாரென்று விளங்கியபக்ஷத்தில் அதை யெடுத்து உரைப்பது சுலபமாகிலும் இவ்வாறு பொதுப்பட உரைத்தால்வேலைமெனக்கெட்டு உலகத்திலுள்ள பாஷியங்களை யெல்லாம் இவ்விடத்திலுரைக்க நாங்கள் கடமைப்பட்டிருக்கவில்லை. ஸம்ஸ்கிருதத்தில் பத்துசுலோகம் படித்தவர்கூட இவர் சொல்லுகிறவிதமாகப்

பாருள் கூறமாட்டார்களெனில் வேதத்திற்குப்பொ
ள்செய்யவரும் சமர்த்தர்கள் இவ்வளவு ஹாஸ்யமா
பொருளுரைப்பார்களாவென்பதை யோசிப்பதே,
தைப்படிப்போருக்குத் திருப்தியை யுண்டாக்குமெ
லும், இதுவரையிலுண்டாகிய யாதொரு கவுரவமு
ள பாஷ்யத்திலும் இத்தன்மையான பொருளில்லை
யன்று நாங்கள் உரைக்கிறோம்.

கூ. "இப்படிக்கொத்த அப்பிராகிருத திவ்வியமங்
கள விக்கிரஹத்தை-அரூபியென்று சொல்வதுநியா
யமாகுமா! ரூபமில்லாததற்கு நாமமேது நாமரூப
மில்லாததற்கு சர்வவல்லமையேது அது சிருஷ்டி
யாதிகிருத்தியங்கள் எப்படிசெய்யும்"எனநம்மன்ப
கேட்கிறார். "அவரை அரூபியென்று சொல்வதுநி
யாயமாகுமா"என்னும் வினாவிற்கு விடையுரைக்கஇ
ண்டுவழிகளுண்டு. பிரமாணத்தைக்கொண்டு சாதிக்
வேண்டுமெனில் நம்மன்பரைப்போல் பழமொழிக
ளயும் பாட்டிக்கதைகளையும் உதஹரிக்காமல் பிர
ாணங்களி லெல்லாம் சர்வசிரேஷ்டமானதென்று
நம்மவரனைவரும் ஒத்துக்கொள்ளும் வேதத்தினின்று
ம் பலபிரமாணங்களினால் அவர் ரூபமற்றவரென்று
மாத்திரமேயன்றி அவருக்கு ரூபமிருப்பதாய் மதிப்ப
வன் அதோகதியாய் முழுகிப்போவானென்றும் ஸ்ப
ஷ்டமாய் இதுவரையிலே ஸ்தாபிக்கப்பட்டபடியால்,
இனிபுனருக்தியாவசியகமில்லையென்று நம்புகிறோம்.
அதையுக்தியினால் ஸ்தாபிக்கவேண்டுமெனில்எவ்விதயு

க்தியினாலும் அவர் அரூபியென்று ஏற்படுகிறதேய ன்றி ஸரூபியென்பதற்குயாதொருஆதாரத்தையும் கா ணோம். ஈசுவரனுக்குக்கரசரணாத்தியவயவங்களோடு கூடிய ஒருரூபத்தை யாரோபிப்போமெனில் அவருக் கு ஸர்வவியாபகத்துவம் எப்படி சித்திக்குமோ தெரி யவில்லை. அவர் கேவலம் இடைவெளியான ஆகாசத் தில்மாத்திரமேயன்றி- பூமி சூரியசந்திராதிப் பிரப ஞ்சங்களிலும் அந்தந்தப் பிரபஞ்சத்திலுள்ள மேடுப ள்ளம், படுகுழிப்பிலங்கள், குகைகள், துவாரமில்லா. விடங்கள் முதலிய எங்கும் அவர்வசிப்பதாய் அனைவ ரும்கொண்டிருக்கையில், அவருக்குரூபமுண்டெனில் அவருடைய கைகளும் கால்களும் மேற்கூறிய மூலை முடக்குகளிலெல்லாம் எவ்வாறுபுகுந்து புறப்படுகின் றனவோ எங்கட்கு விளங்கவில்லை. அகண்டாகாரமா ன ஆகாசத்தில் பரவியிருக்கும்அவருடைய கையோ காலோவாகிய ஒரு அவயவத்தை சுவர்கோபுரம் முத லிய கட்டிடங்கள் கட்டிக்கண்டித்து காயப்படுத்தும் போது அந்த ரணத்தையாற்ற நம்மன்பர் வருவார் போலும். இதெப்படியிருந்தபோதிலும்ரூபமிருந்தேதீ ரவேண்டுமென்பதற்கு நம்மன்பர்சிலயுக்திகள் உரைக் கின்றமையால்அவற்றைப்பரிசோதிக்கத்தொடங்குகி றோம். முதலாவது—"ரூபமில்லாததற்கு நாமமேது" என்கிறார். நம்மன்பர் அர்ச்சையைஅனுஷ்டித்ததின்பி ரயோஜன மென்னவெனில் இனி நன்மை தீமை மன து புத்தி முதலியவற்றை மண்ணாலும் மரத்தாலும்

செய்துஅவர்முன்கொண்டுவந்தாலொழியஉலகத்தில்
ன்மை தீமை மனசு புத்தி ஆகாசம்முதலியபொருள்
ளிருப்பதாய் ஒப்பமாட்டார். இதுவரையில் ஒருவரு
் நன்மைதீமைகளை மண்ணால்படைத்து அவர் முன்
கொண்டுவராமையாலே உலகத்தில் நன்மைதீமைக
ள் இல்லையெனவே நிச்சயித்து உள்ளதை இல்லையெ
ன்றும் இல்லாததை யுள்ளதென்றும் அவர்சொல்லத்
துணிந்தார்போலும். இவரேபிரும்மத்துக்களித்தபஞ்
சவிக்கிரகங்களில் பரம்அந்தரியாமி, இவ்விரண்டிற்கு
ம் ரூபமில்லையாகையால் அவ்விரண்டுமில்லை யென்ற
ல்லவா அவர்சொல்லவேண்டும். நாங்கள் விசேஷசி
ரமப்படாமலே அவர் முதல் யுக்தியின் சுவரூபம்நன்
ருய் விளங்குமாகையால் அவருடைய இரண்டா
வது யுக்தியை யோசிப்போம். அதென்னவெனில்
"நாமரூபமில்லாததற்கு ஸர்வவல்லமையேது" என்
பதேயாம். உலகத்தில் கையும்படைத்துக் கத்தியும்
படைத்தவன் வெட்டுவதொரு ஆச்சரியமல்ல. நினை
யாமல் நினைத்துச், செய்யாமற் செய்வதே யல்ல
வாபுதுமையாகும். இதுபற்றியேயல்லவாபிரம்மத்தி
ன் மஹிமையை விளக்கும்பொருட்டு * "அவன்கை
"யின்றி கிரஹிப்பான்; காலின்றி நடப்பான்; கண்
"ணின்றிகாணுவான்; காதின்றிகேட்பான்; அறியத்

*

"தக்கவையெல்லாம் அவனறிவான்; அவனை யறிய "வோ ஒருவனுமில்லை. அவனைவேறுவிதமாகச்சொல் "லிமுடியாமல் ஆதிமகாபுருஷனென்றூர்கள்" என்று சுருதிமுறையிடுகிறதல்லவா? நம்மன்பர் இதற்குப் பொருள் கூறுங்கால் ஒருவேளை பிராகிருத கைகால் கண் காது இல்லையென்பது இதன்கருத்தேயன்றி அப்பிராகிருத சரீரமுமில்லையென்பதல்ல என்றுகூறலாம். ஆகிலும் "ஸவ்யகூராவ்ரூ கூரூம்" என்கிற வாஜஸநேய ஸம்ஹிதாவாக்கியத்திற்கு மஹீதரர் செய்திருக்கிற பாஷியத்தை இதின்முதலத்தியாயத்திலுரைத்திருக்கின்றமையால் அதைநோக்குங்கால் பிரும்மத்துக்குஎவ்விதசரீரமுமில்லையென்று ஸ்பஷ்டமாய் ஏற்படும். ஒருவேளை அவருக்கு அப்பிராகிருதசரீரமுண்டென்று ஸ்தாபித்தபோதிலும் அதிஞலெங்கட்கு ஒருபாதகமுமில்லை. சைதன்னியலேசமு மில்லாமல் கேவலம் ஜடபதார்த்தமாகிய அர்ச்சா விக்கிரஹங்களுடையரூபமும் அப்பிராகிருதரூபமேயெனநம்மன்பர் சொல்லத்துணிவாராகில் அவர்சொல்லின் சுவரூபத்தை மனுஷிய சாமான்னியமும் எளிதிலறிந்துகொள்ளலாமாகையால் அதைநாங்கள் சிரமப்பட்டு கண்டிக்கவேண்டிய ஆவசியகமில்லை. இதுநிற்க நமம்ன்பர் அர்ச்சாவிக்கிரஹங்களிடத்தில் என்ன சர்வசக்தி

---

வெத்தி வெஷ்யம் நவதஸ்யாஸ்தி வெத்தா; தமாஹுரஸ்ர்யம் வுருஷம் மஹாநதம்.

துவத்தைக்கண்டு மகிழ்கிருரோ நாங்களறியக்கூட
வில்லை.கோயில்துறையார்கொள்ளையடித்தாலும்,வழி
யேபோவோர்கதவைமூடினாலும்,துரைத்தனத்தார்வ
ரும்படியைக் கட்டினாலும்பார்த்துப்பரதவிக்கவும் க
ண்ணும்மனமுமற்றஇந்தப்பொம்மைகள்பொய்க்கால்
களும்பொய்க்கைகளும் பெற்றிருந்தும் செய்யுந்தொ
ழிலின்னதென்றுஎங்கட்குவிளங்கவில்லை. ஆகிலும் அ
தின் பக்தர்களுக்குள் வைஷம்மியம் உண்டாகும்ப
க்ஷத்தில் அது செம்பாயும் தவலையாயுமாத்திரம் அவ
தாரமெடுப்பதைப்பார்த்திருக்கிறோம். உலகத்திலுள்
ள பிராணிகளைப் போலன்றி விலக்ஷணமான இறப்
பையும் பிறப்பையும் உடைமையினால் "அஜாயமா
நோபஹுதாவிஜாயதே"என்கிற சுருதியினால்
பிரும்மத்திற்குமிதற்கும் ஏகதேச சாம்மியதையையா
வது கல்பிக்கும் பக்ஷத்தில் அதை நாங்களாக்ஷேபிக்
கவேண்டியதில்லையாகிலும், இதின்மூன்ருவது அத்தி
யாயத்தில் அதைச்சுருக்கமாய் எச்சரித்திருக்கிறோம்.
அவருடைய மூன்ருவது யுக்தியாகிய "அதுசிருஷ்டி
யாதி கிருத்தியங்களை எப்படிசெய்யும்" என்பது இர
ண்டாவதுயுக்தியைக்காட்டிலும்வேருனதாயில்லையா
கையால் அதைத்தனித்து யோசிக்கவேண்டியதில்லை.

௧௦. "எங்கும் நிறைந்த பிரும்மமே பூமியில
"னேகவித உருவெடுத்ததென்றும், வராஹஅவதார
"மெடுத்துபிரளயஜலத்தில்முழுகிக்கிடந்தபூமியைத்
"தூக்கியதென்றும் நமதுஎஜுர்வேதம் கூறுகின்ற

"ம் : இரண்டாவது, பிரசனம் ; நான்காது அனுவா
"கத்தில்சொல்லுகிற சுருதி முறையிடுகிறதே" என்று
சொல்லியிருக்கிறது. இந்த சுருதிக்குமொழிபெயர்த்
துரைப்பதேபோதுமென்றுநினைக்கிறோம். அதில்*"ய
"க்கியமானது தேவதைகளினின்றும் ஒளிந்தது. அ
"து விஷ்ணுரூபமெடுத்துக்கொண்டு பூமியில்பிரவே
"சித்தது. அதை தேவதைகள் கைகளைஸம்பரித்து அ
"பேக்ஷித்தார்கள். அதை இந்திரன் மேன்மேலும் க
"டந்தான். என்னை யிப்படி யாரிழுத்துக் கொண்டு
"போகிற தென்றவன் கேட்டான். (அது) தூர்க்கத்
"தையழிக்கும் நானென்று விடையுரைத்தது. நீயா
"ரென்றுகேட்க, நான் தூர்க்கத்தினின்றும் கொண்
"டுவருவோனென்று (அது) சொல்ல, தூர்க்கத்தில்அ
"டிப்பவனென்கிறாய் இந்தத்திருடனாகியவராகன் ஏ
"ழுமலைக் கப்புறத்தில் அசுரர்களடைந்த பொருளை

---

* [illegible]

"யெடுத்துக் கொண்டிருக்கிறான் அவனையடியென்று
"(இந்திரன்) சொன்னான். அதுதர்ப்பமுஷ்டியையெ
"டுத்துக்கொண்டு ஏழுமலைகளையும் பேதித்து, வராக
"னைக்கொன்றுவிட்டது. தூர்க்கத்திலிருந்து கொண்
"டுவருவோனென்கிறாய் இதைக்கொண்டுவாவென்
"று அவன்சொன்னான். அப்போது இவர்களுக்கு ய
"க்கியமே யக்கியத்தைக்கொண்டுவந்தது." என்று
சொல்லியிருக்கிறது. இந்த மொழிபெயர்ப்பைப்பார்
ப்பதினாலே நம்மன்பருடைய பேச்சின்சுவரூபம்வெ
ளியாகும். வராகன் என்கிற சொல் இந்த சுருதியி
ல் வருவதினால் அது வராஹாவதாரத்தைக் குறித்து
ச்சொல்வதாய் நம்மவரை யேமாற்றப் பிரயத்தனப்
பட்டாரல்லவா? பவுராணிகர்கள் சொல்லும் வராக
ம் விஷ்ணுவின் ஒரு அவதாரமாயிருக்கையில், இந்த
வராகன் ஒருராக்ஷஸனாக விளங்குகிறான். அவதாரவ
ராகன் தான்வந்தவேலை முடிந்தவுடனே அந்தர்த்தா
னமானதாகப் புராணங்கள் சொல்லுகையில்,இந்தவ
ராகன்அடிபட்டுச்செத்தான். பூமியைப்பாதாளலோ
கத்துக்குக் கொண்டுபோன ராக்ஷஸனையழித்து மறு

---

கிரீணாம் பரஸ்தாத் வித்தம் வேத்யமஸுராணாம் பி
பர்தி, தஞ்ஜஹி யதி துர்கே ஹந்தாஸீதி. ஸ
தர்ப்பபிஞ்ஜூலமுத்வ்ருஹ்ய ஸப்த கிரீந்பித்வா த
மஹந் ஸோ(அ)ப்ரவீத் துர்கே வை ஹந்தா
வோசதா ஏதமாஹரேதி. தமேப்ய ஆஹரத் யஜ்ஞ
ஞேந யஜ்ஞமாஹரந்.

படி அதை வராகம் கொண்டுவந்ததாய்ப் புராணங்க
ளாலேற்படுகயில், தேவலோகத்தினின்றும் பூமியில்
ஒளிந்துகொண்ட யக்கியம் இந்திரனுடைய உத்தர
வுப்படிவராகனென்னும் ராக்ஷஸனையடித்துவிட்டு, ம
றுபடி தேவலோகம் சென்றதாய் இந்தசுருதியினால்
ற்படுகிறது. இதில் திருடனென்று சொல்லப்பட்டவ
ராகனே நம்மன்பருக்கிசைந்த வராகாவதார மெனி
ல், அவரப்படியே வைத்துக்கொள்வதற்காக்ஷேபமில்
லை. உலகத்தாரிதைப் படித்தபிறகு இஷ்டமானபடி
பொருள் செய்துக்கொள்ளட்டும். நம்மன்பர் மீதுத
யவினால்இதுவே வராகாவதாரமென்பார்களாகிலும்,
எங்களுக்குப் பாதகமில்லை. பிரகிருதத்தில் எங்கள்
ஆக்ஷேபமெல்லாம் அர்ச்சையின்மீது பொருந்துகிற
படியாலும், நம்மன்பருரைக்கும் பொருளே இந்தசு
ருதிக்கென்னும் பக்ஷத்திலும், அதுவிபவத்தை ஸ்தா
பிக்குமேயன்றி அர்ச்சைக்காதாரமாகமாட்டாதாகை
யாலும், பிரகிருதத்தில் இதையோசிக்க வேண்டியஆ
வசியகமே இல்லை.

கக. "நரசிம்ம உபநிஷத்தினாலேயும், இராமதா
"பினியென்கிற உபநிஷத்தினாலேயும் இப்படிக்கின்
"னம் அநேகசுருதியினாலேயும் பகவான் அருபியல்
"லவென்பது நிச்சயிக்கப்படுகிறதுந்தவிர அவதாரா
"திபகவல்லீலைகளும் வெளியாகின்றனவல்லவா." எ
ன்றுசொல்லியிருக்கிறது. நம்மன்பர்செய்தயுக்திகளு
க்குள் இதிற்சிறந்தது வேறொன்றுமில்லை. சமுத்திரத்

னக்குள் ஒருருபாய்போட்டிருக்கின்றேன் அதையெ
டுத்துக்கொள்ளென்றால் அதற்காகப் பிரயாசப்படும்
வைத்தியக்காரனும் உலகிலுண்டோ? நரசிம்மதாபி
னி,ராமதாபினி உபநிஷத்துஎன்றுபெயரிடப்பட்டஇ
ரண்டுபுஸ்தகங்களையும்மொழிபெயர்த்து,மூலத்தையு
ம்மொழிபெயர்ப்பையும் அச்சிடும்பக்ஷத்தில் அதமப
க்ஷம் இருநூறுபக்கங்களுக்கதிகம்பிடிக்கும். இத்தே
சத்தில் ஒருவரிடத்திலிருந்த சதோபநிஷத்து என்னு
ம் கிரந்தத்தைவாங்கி அதிலடங்கியிருக்கும் மேற்கூ
றியஇரண்டு உபநிஷத்தென்னும் சுவடிகளைவெகுகவ
னமாய் நாங்கள்மாத்திரம்படித்துப்பார்த்ததுமல்லா
மல்பலபண்டிதர்களுக்குங்காட்டியதில், அவற்றில் அ
ர்ச்சையைக்குறித்து ஒருஎழுத்தாவது காணோம். ஆ
கையால் அதைவீணுக்கு மொழிபெயர்த்துப் பிரகாச
ப்படுத்துவதினால்எங்களுக்குப்பணச்செலவும் காலவி
ரயமும், இதைப்படிப்போர்க்கு தலைநோவுமுண்டா
வதுமன்றி வேறொருப்பிரயோஜனமும் தோன்றவில்
லை. அதில் உண்மையாகவே அர்ச்சைக்கு ஆதாரமு
ண்டெனில் அந்தபாகத்தை யவர் இதுவரையில் குறி
ப்பாயுரைத்திருப்பார்; அல்லது இனியாவது எடுத்து
ரைப்பாராகையால் அப்போதுஅதையோசித்துக்கொ
ள்ளலாம். அவற்றில் ஒருவேளை அர்ச்சையைக்குறித்
துஏதாவதுபிரஸ்தாப மிருந்தபோதிலும், இவற்றைந
ம்மவரனைவரும் வேதமென்றாவது, பிரமாணமென்றா
வதுகொண்டிருக்கும்பக்ஷத்தில்அப்போதுஅதையோ

சிக்கவேண்டியதுதான். ருக்கு,யஜுஸ்,ஸாம, அதர்வ ணவேதங்களும்,அவற்றைச்சேர்ந்தபிராம்மணங்களும், அவற்றிலிருந்து எடுக்கப்பட்ட தசோபநிஷத்துக் களும் வேதமென்று நம்மவரனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. கிருஷ்ண யஜுஸ்ஸிலிருந்து தைதிரியஉபநிஷத்தும்சுவேதாசுவதர உபநிஷத்தும், ருக்குவேதத்திலிருந்து ஐதரீயஉபநிஷத்தும், சுக்லயஜுஸ்ஸிலிருந்து வாஜஸநேய உபநிஷத்தும், ஸாமவேதத்திலிருந்து கேநோபநிஷத்தும், சாந்தோக்கிய உபநிஷத்தும், பிரஹதாரண்ணியசுருதியிலிருந்துபிரஹதாரணியோபநிஷத்தும், இன்னுமிப்படியேவேதங்களின் பூர்வபாவங்களில்பிரும்மப் பிரதிபாதகமாயுள்ளவற்றையெடுத்து தசோபநிஷத்துக்களாக பூர்வீகர்களால் வைக்கப்பட்டு, ராவணாதிகளுடைய கணக்கில் உள்பட்டு, பாஷியக்காரர்களாலும் நிருக்தக்காரர்களாலும் அவற்றிற்குபாஷியங்களும் நிருக்தங்களும் வியாக்கியானங்களும் எழுதப்பட்டுமிருக்கின்றன. நம்மவரில் நவீனமாயேற்பட்ட பலகுத்ஸித வேற்பாடுகளுக்கு இத்தன்மையான உண்மையான சுருதிகளிலாவது ஸ்மிருதிகளிலாவது யாதொரு ஆதாரமுமில்லாமற் போகவே அந்த ஏற்பாடுகளை முடிக்க வகுப்பார் ஸ்தலபுராணங்களை ஸிருஷ்டிக்கும் மரியாதையை யனுசரித்து வேதங்களி லிருந்து இரண்டொரு வாக்கியங்களை யெடுத்துக்கொண்டு அவற்றுடன் விஸ்தாரமாகச் சொந்த சரக்கைச் சேர்த்து

;கொண்டுஅவற்றிற்குஉபநிஷத்துக்களென்றுநாமகர
ணஞ்செய்துவைத்திருக்கிறார்கள். வைஷ்ணவர்களிடு
ம்நாமத்திற்காதாரமாகவராஹஉபநிஷத்தும்,அஷ்டா
க்ஷரத்துக்காதாரமாக நாராயண உபநிஷத்தும், அவ
தூத ஸன்னியாஸத்துக்கு ஆதாரமாக பரமஹம்சோ
பநிஷத்தும்பரிவிராஜகோபநிஷத்தும் இன்னுமிவ்வா
றே பலபல உத்தேசியங்களையொட்டி பலஉபநிஷத்
துக்கள் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. சதோபநிஷ
த்தென்று பேரிடப்பட்ட இரண்டுபுத்தகங்களை வரவ
ழைத்துப் பரிசோதிக்கையில் ஒன்றில்நூற்றுமூன்று
உபநிஷத்துக்களும்,மற்றொன்றில்நூற்றுப்பதிநான்கு
உபநிஷத்துக்களும்இருக்கக்கண்டோம். இவ்வொருச
ங்கதியினாலே அவற்றிற்குச்சதோபநிஷத்தென்று நா
மகரணம்செய்தபிறகுஒருதேசத்தில்மூன்றுஉபநிஷத்
துக்களும் மற்றொன்றில் பதிநாலு உபநிஷத்துக்களு
ம் புதிதாய் முளைத்திருப்பதாய் ஏற்படுகிறதல்லவா?
இந்நாட்டிலே இவ்வளவாகில் காவேரிப்பாய்ச்சலால்
செழிப்புமிகுந்த கும்பகோணத்தில் இன்னும் விசே
ஷ விருத்தியாயிருக்கலாமென்பதற்கு அவ்விடத்திற்
கிடைக்கத்தக்க சதோபநிஷத்து என்னும் கிரந்தத்
தை வரவழைத்துப் பார்த்தால் ருஜு விளங்குமென்
று நம்புகிறோம். நவீனமாய் விருத்தரத்நாகரம் என்
னும் சந்தோகிருந்த மேற்பட்டபிறகு அதின் சகாய
த்தால் அனுஷ்டுபுமுதலிய விருத்தங்களில் திராக்ஷா
பாகமான சைலியைக்கொண்டு நேற்றுநடந்த கதை

உ0

களையெல்லாம் திரட்டி எழுதப்பட்டிருக்கிற இந்தஉ பநிஷத்தென்னும் கிரந்தத்துக்கும், வியாகரணம் பிறந்ததற்கும் முன்பட்ட பிராசீனவேதங்களுக்கும் உள்ளபேதத்தை யறிந்துகொள்வது கடினமல்லவென்றுநம்புகிறோம். இவ்வளவேயன்று: இவ்வுபநிஷத்துக்களுக்கு யாஸ்கர்முதலாக ரங்கராமாநுஜ ஜியர் வரையிலுள்ள பாஷியக்காரர்களில் யாரேனும்பாஷியம் செய்ததாயாவது, அவற்றைக்குறித்து பிரஸ்தாபம் செய்ததாயாவதுவிளங்கவில்லை. இதரவேதங்களுக்கு கணக்கிட்ட ராவணனுடைய இருபதுகண்களில் ஒன்றிற்காவது இவ்வுபநிஷத்துக்கள் பட்டிருந்தபக்ஷத்தில் அவன் அவற்றிற்கும் செக்குபந்தி யேற்படுத்தாமற்போனதற்குக் காரணமகப்படவில்லை. கடைசியாக நம்மன்பரை யாதரிக்கும் பண்டிதர்களுக் குள்ளே ஒருவர். வேதமென்று சாதிக்கும் உபநிஷத்துக்களை மற்றொருவர் காளிதாசன் செய்த சாகுந்தள நாடகத்தவ்வளவும் மதிக்கமாட்டார்களென்பது நிச்சயம். தக்ஷிணமூர்த்தியுபநிஷத்து, அன்னபூர்ணியுபநிஷத்து, அவதூதோபநிஷத்து, பஸ்மஜாபாலோபநிஷத்து, கைவல்லியோபநிஷத்து, காலாக்கினி ருத்திரோபநிஷத்து, நிராலம்போபநிஷத்து, கணபத்தியுபநிஷத்து, ருத்திரப்பிரும்மஜோபநிஷத்து, பாசுபதப்பிரும்மோபநிஷத்துமுதலிய அநேக உபநிஷத்துக்களை வைஷ்ணவர்கள்கல்பனையென்றுசொல்வார்களென்பதில் நாங்களீஷத்தாவது சந்தேகிக்கவில்லை. சைவர்களுக்

துவைஷ்ணவத்தில் அவ்வளவுதுவேஷமில்லாவிடினு
ம் அவர்கள் பிரமாணமா யொப்பியவற்றை வைஷ்
ணவாகள்தூஷிக்கும் வரையில் அவர்களும் நாராய
ணோபநிஷத்து, வராஹோபநிஷத்து, வாஸுதேவோ
பநிஷத்து, ஸீதோபநிஷத்து, ராமதாபநிஉபநிஷத்
து, நரசிம்மதாபிநி உபநிஷத்து, காருடோபநிஷ
த்து, ஹயக்கிரீவ உபநிஷத்து, கிருஷ்ணோபநிஷத்து,
கோபாலதாபிநியுபநிஷத்து, களஷீதக் கியோபநி
ஷத்து, முதலியவற்றைக் கல்பனை யென்பார்களெ
ன்பதில் சந்தேகமில்லை. இவ்வாறு பலவகுப்பாரு
ம் சிலசிலவாய் ஆக்ஷேபித்து இந்த உபநிஷத்துக்க
ளில்கிழித்துவிடுவார்களாகில் கடைசியில் அதினுடை
யஅட்டைதவிரவேறொன்றும்மீராது. இம்மாதிரியாக
வே தசோபநிஷத்தையும் மற்றவேதங்களையும் செய்
வார்களா, செய்யக்கூடுமா, வென்றுசற்று கவனிக்க
வேண்டியது. பகவத்கீதைமுதலிய சிலக்கிரந்தங்களை
அவற்றிலடங்கிய விஷயகவுரவத்தால் உபநிஷத்துக்
களென வியவஹரித்தபோதிலும் அவற்றை வேதங்க
ளுடன் ஒப்பிடும்போது ஒருபிரமாணமாகவேநம்மவ
ர் மதிக்கமாட்டார்களெனில் புராணங்களிலிருந்து எ
டுக்கப்பட்டவையென்னும் கவுரவத்தைக் கூடபெரு
தஇந்த உபநிஷத்துக்களை மதிக்கவேண்டிய வழியை
நாங்களுரைக்க வேண்டியதில்லை. முடிவில் நம்மன்ப
ர் பட்டியமான வேதத்திலுள்ளதாய் உதஹரித்தசுரு
திப் பிரமாணங்களை மொழிபெயர்த்து இதில் பிரசுர

ப்படுத்துவதினாலே நம்மன்பர் பேச்சின் சுவபாவம் நன்றாய்விளங்குமாகையால் இவ்வளவுமஹிமை தங்கிய ராமோபநிஷத்தையும், நரசிம்மோபநிஷத்தையும், மொழிபேர்க்காமையால் விசேஷபாதக மிருப்பதாய் நம்மவர் நினைக்கமாட்டார்களென்கிறதைரியம் எங்கட்குண்டு. இவற்றைப்போன்ற இதரசுருதிகளின்பேரை யெடுத்துரைக்கக் கூடாமையாலோ மனமில்லாமையாலோ "இப்படிக்கின்னமனேகசுருதி"களிருப்பதாய் அவர் பொதுப்பட உரைத்திருக்கிறார். அந்தமற்றசுருதிகளும் இவற்றைப்போன்ற வெண்ணைவெட்டிச்சிபாய்களேயாகில் இவைபெற்றஜயத்தையே அவையுமடையட்டும். "அவதாராதிபகவல்லீலைகளும் "வெளியாகிற தல்லவா" என்பதைக்குறித்தோ வெளில் பிரகிருதத்தில் அர்ச்சாவிஷயத்தைக் குறித்தவிசாரத்தில் அதற்கு விடையுரைக்க நாங்கள்கடமைப்பட்டிருக்கவில்லை.

கஉ. "உருவமில்லாததைத் தொழுவதென்பதுச "ரியாகுமா, பிம்போபாஸ்தி யில்லாவிட்டால் மோ "க்ஷம் சித்திக்காதே" என்கிறார். நாங்கள் முதலத்தியாயத்தில் எடுத்துரைத்த அனேகப் பிரமாணங்களால் உருவமில்லாததைத் தொழுவதேசரியென்றும், அப்படி தொழுவோரொருவருக்கே மோக்ஷம் சித்திக்குமென்றும் ஏற்படுகையில் இவர்வெளியிடுகிற வேதார்த்தம் அதற்கிசைந்திருந்தால்தமக்கொருமஹிமையும் விளங்காதென்று இம்மாதிரியாக உரைத்தார்

போலும். இவ்வாக்கியத்திற்கு ஆதாரமாக யாதொரு பிரமாணத்தையாவது யுக்தியையாவது அவர்உரைக்கவில்லை யாகையாலும் அதற்கு விரோதமாக நாங்களனேகயுக்திப்பிரமாணங்களை இதுவரையிலே உதஹரித்துவிட்டபடியாலும் இனிவீண்பொழுதுபோக்க ஆவசியகமில்லையெனநம்புகிறோம்.

கந. "மூர்த்தி யில்லாவிட்டால் ஸ்பூர்த்தியுண் "டாகாதே" என்கிற வாக்கியம் காதுக்கினிப்பா யிருக்கினும் அதின் பொருளின்னதென்றுவது அப்பொருளுக்காதார மின்ன தென்றுவது விளங்க வில்லையாகையால் அதைக்குறித்துவிசேஷமாய்ப் பிரஸ்தாபிக்கவேண்டியதில்லை.

கச. "அன்றியும் அகண்டாகாரமாய் சர்வதோ "முகமாய்மனதிற்கும்வாக்குக்கும்எட்டாததேஜோம "யமாகியப் பிரும்மத்தை எப்படி ஹிருதயத்தில் தி "யானிக்கிறது. அது அசக்கியமான விஷயமென்றே "நம்பவேண்டியது" என்கிறார். சில வரிகளுக்குக் கிழே "பகவான் இவ்விதமாக அருளிய நியமனத்தில் "சுலபமானது தியானமும் விக்கிரஹ ஆராதனமும்" என்று இவருரைத்த வாக்கியத்திலே அவரைத்தியானிப்பது சுலபமென்று எற்படுகிறபடியால் இதற்கு நாங்கள் விசேஷித்து விடையுரைக்கவேண்டியதில்லையாகிலும் இதின் மூன்றுவது அத்தியாயத்தில் உதஹரித்த சாந்தோக்கியஉபநிஷத்தின்-கூ-வது அத்தியாயத்தையும் அதற்குப் பின்னுரைத்த பிரசிஞோ

பநிஷத்து. ௫-வது பிரசினத்தையும் படித்துப்பார்த்தால் அதற்குரிய சுலபமானவழி யின்னதென்று விளங்கும். தியானமார்க்கம் கஷ்டமானதென்றே ஏற்பட்டபோதிலும் அது ஒவ்வொருவனும் சாதிக்கவேண்டியது தலைச்சுமையான கடமையென அனேக சுருதிவாக்கியங்களால் ஸ்தாபிக்கப்பட்டது. ஒருகாரியத்தைச்சாதிக்க உரித்தானமார்க்கம் கஷ்டமானதென்று அதற்கு மார்க்கமாகவே யிராததை யவலம்பித்தால்அக்காரியம்கைக்கூடுமோ? மேற்குச்சமுத்திரத்துக்குப்போய்வருவதாயும் தப்பினால், ௫௦௦அடிபட்டுக்கொள்வதாயும் உடன்பட்ட ஒருவன் நடக்கவும் சக்தியில்லை ரெயிலுக்குக் கூலிகொடுக்கவும் சக்தியில்லையாகையால் தன்வீட்டில் குப்புறப்படுத்துக் கொண்டால் அவ்விடம் சேரலாமென்றுநினைத்து அப்படியே செய்வானாகில் அவன்மேற்குச் சமுத்திரத்தைக் காணக்கூடுமோ? காணாதவரையில் அவனுடன்பட்ட அடி தப்புமோ? இவ்வாறே * "அது (பிரும்மம்)ரூபமும்து "ன்பமுமற்றது, என்றுஅறிந்தவர்கள் மாத்திரமேஅ "மிருதராவார். மற்றவர்துன்பமேயடைவார்." என்கிறசுருதிக்குத் தலைவணங்கிக் கையொப்பமிட்டுவிட்டு பொம்மைகளைத்தொழத்தொடங்கினால்நாமடையவேண்டியகதியைவிசாரிக்கவேண்டுமோ? ஒருஉபாசனையு

---

* 𑌤𑌤𑍋 𑌯𑌦𑍁𑌤𑍍𑌤𑌰𑌤𑌰𑌂 𑌤𑌦𑌰𑍂𑌪𑌮𑌨𑌾𑌮𑌯𑌮𑍍 𑌯 𑌏𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍁𑌰𑌮𑍃𑌤𑌾𑌸𑍍𑌤𑍇
𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌅𑌥𑍇𑌤𑌰𑍇 𑌦𑍁𑌃𑌖𑌮𑍇𑌵𑌾𑌪𑌿𑌯𑌨𑍍𑌤𑌿.

மில்லாவிடினும்வித்தியையுமில்லைகர்வமுமில்லை யென்ற படி நமதுநிலைமைக்கு மோசமிராதாகிலும் வேறுவித உபாசனையிலிறங்கினால் இதைக்காட்டிலும் பலமடங்கு கொடியதுன்பத்தை யடைவோமல்லவா?

கரு. "ஆனால் ஈசுவரோபாசனை செய்துமோக்ஷத் "தை யடைகிறதெவ்வித மென்றாலோஅதைக்கூடிய "வரையில் விவரிக்கிறேன்"என்று நம்மன்பர் பிராசீனவேதத்தைப் பூர்வபக்ஷம்செய்து புதிதாய் வெளியிடும் இந்த பத்தொன்பதாவது நூற்றாண்டின் வேதத்தைக்கவனமாகவே கேட்கிறோம்.

கசு-"ஆதிகாலத்தில் பிரமாதி தேவதைகள் பக "வானைக்குறித்து அனேகவிதமாகக் கொண்டாடி ஓ "ய்பரமாத்மாவே! உம்மை யடியோங்கள் எவ்வி "தமாகத் தொழுவதென்று வெகுவாகமுறையிடுகிற "போது பிரம்மம் தேவதைகளுடைய முறைக்கிரங் "கித்தன்னை யெல்லாரும் லகுவாயாராதித்துத்திவ்வி "யசுகங்களை யடையக்கடவரென்று கருணைகூர்ந்து "பரவியூகவிபவ அந்தரியாமி அர்ச்சையென்கிற ஐந் "துவிதமாகத் தொழுதேற்றுங்கோளென்று அனுக்கி "ரகம்செய்தது" என்று நம்மன்பர் சொல்லியிருக்கிறார். இவ்வாறுப் பிரும்மமனுக் கிரஹித்ததற்கு நம்மன்பரேசாக்ஷியெனில் நாங்களதை யாக்ஷேபிக்க வேண்டியதில்லை. இதற்குப் பிரமாணமுண்டென்பாராகில் பாஞ்சராத்திரமும் அதற்கும் தாழ்ந்த கவுரவமுடைய கிரந்தங்களும்தவிர வேறொன்றையும் அவரா

ல் உதஹரித்து முடியாதென்று நிச்சயமாய்நம்பலா
ம். இந்தப் பாஞ்சராத்திராதிப் பிரமாணங்களைக்குறி
த்து இதனிரண்டாவது அத்தியாயத்தில் போதுமான
வரையில்பிரஸ்தாபித்திருக்கின்றமையால் அதைப்பா
ர்த்தபிறகு நம்மன்பர் இந்த தஸ்தவேஜை வாப்சுவா
ங்கிக் கொள்ளுவா ரென்பதில் சந்தேகமில்லை. இ
வருரைக்கும் பஞ்சவிக்கிரஹங்களுக்குள் வியூஹமெ
ன்பதைச்சைவர்ஒத்துக்கொள்வார்களெனில்பிறகு இ
ந்தப்பிரிவுகளை யேற்படுத்திய கிரந்தம் அவர்களுக்
குள்ளாவது சார்வத்திரிகமான பிரமாணமாகும். பி
ரும்மாதி தேவர்களுக்கும் பிரும்மம் அப்பிரத்திய
க்ஷமா யிருந்ததாயும், அவர்கள் பிரார்த்தித்துக்கே
ட்டுக் கொண்டமேல் இவ்வித ஏற்பாடு செய்து அ
வ்வேற்பாடுகளுக் கனுகுணமாகப் பிரும்மம் விளங்
கினதாயும்இவர்உரைக்கிறாரல்லவா? அப்பிராகிருதச
ரீரமுடையதேவர்களுக்கும்பிரும்மசுவரூபம் அதிருசி
யமென்று சொல்லியதுந்தவிரநம்மன்பர்அத்தேவர்க
ள்அவரைநோக்கிக்கேட்டுக்கொண்டார்களெனஉரை
க்கிறார். சுவப்பிரயோஜனத்தைஉத்தேசித்து எத்தன்
மையானகட்டுப்பாடுகள்செய்தாலும் சகலரும்அதை
யாக்ஷேபிக்காமல்ஒத்துக் கொள்ளுகிறதென்னும் மரி
யாதையுள்ளவரையில்,பிராம்மணர்எவ்விதக்கிரந்தங்
களையும்ஒழுதப்பின்னிடையமாட்டாரல்லவா?பிரும்ம
த்துக்குப்பதில்விக்கிரகமும், விக்கிரகத்துக்குப்பதில்
அபயஹஸ்தமும் வைத்துக் கொள்ளுகிறவாறே, வே

ரத்தைக் கரைகாண்ப தருமையாகையால், தமிழ்வே
ரமென்கிற பெயர்வைத்து ஆழ்வாராதிகள் நாலாயி
ரம்பாட்டுகள்செய்தார்களென்பதும்; இந்தப்பாட்டுக
ளைப் படிப்பதும் கடினமென்றுகருதி, பிரபந்தசார
மென்று வேதாந்தாசாரியர் பதினெட்டுப்பாட்டுகள்
செய்தருளியிருக்கிறு ரென்பதும்; அனைவர்க்கும் தெ
ரிந்தவிஷயமாகிலும், இவற்றின் சுவரூபத்தை விசாரி
ப்பவர்மாத்திரம் வெகுசிலர். இந்தப்பாட்டுகளில், இ
ன்னவருஷம் மாதம் நக்ஷத்திரத்தில் பிறந்த இன்ன
ஆழ்வார் இத்தனைபாட்டுகள் செய்தாரென்பது தவிர
வேறென்றும் கூறப்படவில்லை. இதின் உண்மைவிள
ங்கும் பொருட்டு இவ்விடத்தில் நாலுபாட்டுகளை யு
ரைக்கிறேம்.

க. எண்ணின்முதலாழ்வார்கண்மூன்றுநூறு
மெழின்மழிசைப்பிரானிருநூற்றிருபத்தாறு,
முண்மைமிகுமாறன்மறையாயிரத்தோ
டுற்றவிருநூற்றுத்தொண்ணூறுமாறும்,
வண்மையுடைமதுரகவிபத்துமொன்றும்
வஞ்சியர்கோனூற்றைந்தும் பட்டநாதன்,
பண்ணியநூற்றேழுபத்துமூன்றும்
பாக்கோதைநூற்றேழுபத்துமூன்றே.

உ. பத்தரடிப்பொடிபாடலைம்பத்தைந்தும்
பாணர்புகழ்பத்துடனேபரகாலன்சொல்,
அத்தனுயர்வேங்கடமாற்காயிரத்தோ
டானவிருநூற்றேரைம்பத்துமூன்று,

முத்திதருமெதிராசர்பொன்னடிக்கே
மொழிந்தவமுதர்பாடனூறுமெட்டும்,
எத்திசையும்வாழவிவைபாடிவைத்த
வென்பவைநாலாயிரமுமெங்கள்வாழ்வே.

௩. வையகமெண்பொய்கைபூதன்பேயாழ்வார்
மழிசையர்கோன்மகிழ்மாறன்மதுரகவி,
பொய்யில்புகழ்கோழியர்கோன்விட்டுசித்தன்
பூங்கோதைதொண்டரடிப்பொடிபாணுழ்வார்,
ஐயனருட்கலியனெதிராசர்தம்மோ
டாறிருவரோரொருவரவர்தாஞ்செய்த,
துய்யதமிழிருபத்துநான்கிற்பாட்டின்
றொகைநாலாயிரமுமடியோங்கள்வாழ்வே.

௪. அந்தமிலாவாரணநாலாகிநின்ற
வதன்கருத்தையாழ்வார்களாய்ந்தெடுத்துச்,
செந்தமிழாலருள்செய்தவகைதொகையுஞ்
சிந்தாமலுலகங்கள்வாழவென்று,
சந்தமிகுதமிழ்மறையோன்றூப்புற்றோன்றும்
வேதாந்தகுருமொழிந்தப்ரபந்தசாரஞ்,
சிந்தையினலனுதினமுஞ்சிந்திப்போர்க்குச்
சேமமதாந்திருமாறன்கருணையாலே.

இந்தப்பாட்டுகளைத் தினந்தோறும் அனுசந்தானம் செய்வதினல் வெகுபயனுண்டென க்கடைசிபாட்டில் உரைத்ததைநம்பி அவற்றைத்தினந்தோறும்அனுசந்திக்காதவர்வெகுசிலர். இனிவரும் ஆசாரியர்கள் இதுவும் கஷ்டமெனமதித்து "நாலாயிரம், நாலாயிர

ம்”என்று உச்சரிப்பதினாலேயே சகலபாபங்களும்
வாரணமாகுமெனஏற்பாடுசெய்வார்களென்பதிலா
து, அதைப்பாமரஜனங்கள் நம்பிஅனுஷ்டிப் பார்க
ளென்பதிலாவது சந்தேகிக்கவேண்டாம். ஆகினும்
கடவுளானவர் இத்தன்மையான மோசத்துக்கும்பிர
மத்துக்கும் எவ்வளவு இடங்கொடுப்பாரோ என்ப
தைமாத்திரம் யோசிக்கவேண்டியதாகிறது.

௧எ. “இதிற் பரமென்பது வேதவேதாந்தத்தினா
லும் அறியத்தகாத விரிந்த பேருருவம். வியூகமென்
“பது சங்கருணணவா சுதேவபிரத்தியும்ன அநிருத்
“தாதி உருவங்கள். விபவமென்பது ஸ்ரீவராக நர
“சிங்கவாமன ராமகிருஷ்ணாத்தியவதாரம். அந்தரி
“யாமியென்பது அங்குஷ்டப் பிரமாண ரூபியாகிய
“இருதய கமலவாசி. அர்ச்சையென்பது ஸ்ரீரங்கமு
“தலிய திவ்வியதேசத்திலும் தில்லைமுதலிய சிவா
“லயத்திலும் எழுந்தருளிய பகவானேயாம்” என்று
சொல்லியிருக்கிறது. இவ்வாறு இவரால்செய்துக்கொ
ண்டவகுப்புகளுக்கு இவர் எவ்வாறுலக்ஷணம்கூறிலு
ம் எங்கட்காக்ஷேபமில்லை. ஆகிலும்சுவபாவத்தில்“தி
“ருச்சக்கிரபாணிதிருக்கோபுரத்தின்திருநிலைகள்திரு
“வேழு; கும்பன் செங்கல்மேட்டுத்துளை, பதினொன்
“ று”என்று வியவஹரிக்கும் வைஷ்ணவர்கள் எங்க
ள்மீது படையெடுக்கும் பொருட்டாவது சைவர்களை
யும் சேர்த்துக்கொண்டு “தில்லைமுதலிய சிவாலயத்தி
“லும் எழுந்தருளியது பகவானே”யென்று ஒத்துக்

கொள்வதைக்கேட்டு நாங்களுண்மையாகவே மகிழ் கிறோம். ஆகிலும் நீடித்த பற்றுவிடமாட்டா தென்ப தற்கு திருஷ்டாந்தமாகவிஷ்ணுஸ்தலங்களை திவ்விய ஸ்தலங்களென்றும், சிவஸ்தலங்களைக் கேவலம்சிவா லயங்களென்றும் நம்மன்பர் உரைத்தபோதிலும், அ தைக் கவனிக்கவேண்டிய தில்லையென்று எச்சரிக்கி றோம். * "வளர்த்திச் சொல்லிப்பயனென்ன. வை
" ஷ்ணவரா யில்லாதவர் பிராம்மணராகிலும் அவர்
" களைத்தொடவும்கூடாது, அவர்களுடன் பேசவும்
" கூடாது, அவர்களைப் பார்க்கவும்கூடாது" என்கிற
பாத்மோத்தர சுலோகத்தை வைஷ்ணவர்களும்; †
"விஷ்ணுவைக் காண்பதினாலே சிவத்துரோக முண்
"டாகிறது, சிவத்துரோகத்தால் கடுநரகம்வருவது நி
"ச்சயம், ஆகையால்விஷ்ணுநாமத்தைக்கூட ஒருக்கா
" லும் உச்சரிக்கக்கூடாது" எனகிறபாத்மபூர்வவாக்கி
யத்தைச் சைவர்களும் கிழித்தெறிந்துவிட்டுஅவற்றை

---

* கிமத்ர பஹுநோக்தேந ப்ராஹ்மணா யெஹ்யவைஷ்ணவா:. நஸ்ப்ரஷ்டவ்யா நவக்தவ்யா நத்ரஷ்டவ்யா: கதாசந.

† விஷ்ணுதர்சநமாத்ரேண சிவத்ரோஹ: ப்ரஜாயதே. சிவத்ரோஹாந்ந ஸந்தேஹோ நரகம் யாதி தாருணம். தஸ்மாச்ச விஷ்ணுநாமாபி ந வக்தவ்யம் கதாசந.

டியோடுமறந்து ஐகமத்தியமாய்வாழ்வார்களெனில்
திஞல் எங்கட்குவிளையும்ஆநந்தமானது அர்வகளெ
கள்மீது படையெடுப்பதினல் விளையும் வருத்தத்
தக்காட்டிலும் பலமடங்கு மேலானதாகவிருக்கும்.
வதத்தில் அங்குஷ்டமாத்திரமென்று ஹிருதயத்து
குரைத்த விசேஷணத்தை நம்மன்பர் அந்தரியாமி
டத்தில் ஏறிட்டது, அவர் சுவபாவத்துக் கடுத்ததா
கையால் அதைப் புதுமையாய் நினைக்கவேண்டாம்.

கஅ. "பகவான் இவ்விதமாக அருளியநியமன
த்திற் சுலபமானது தியானமும் விக்கிரஹஆரா
தனமும் தானென்று நிச்சயித்தார்கள். இவ்விரண்
டினுள்ளும் தியானமென்பதுகாமக் குரோதலோ
பமோகமதமென்கிற ஐந்தையுங்கடிந்து தேகாபி
மானத்தையும் வெறுத்த புண்ணியவான்கள் செ
ய்யத்தக்கது. இதுகூட வருத்தமானதென்றெண்
ணினர்கள்." இவற்றுள் "தியானமும், விக்கிரஹஆரா
தன்முந்தான்" சுலப மானவையென்று யார்நிச்ச
யித்தார்களோ தெரியவில்லை, அவர்கள் பெயரையு
ரைப்பதற்கு ஆக்ஷேபமிருக்கும்பக்ஷத்தில், அவர்க
ள்செய்த நிச்சயத்தையும் அவலம்பிக்கவேண்டியஆ
வசியகமில்லை. அவர்கள் பெயர்வெளியில்வரும்போ
து அதைக்குறித்து ஆலோசித்துக்கொள்ளலாம். "இ
"வ்விரண்டினுள்ளும் தியானமென்பது காமக்கிரோத
" லோபமோஹ மதமென்கிற ஐந்தையுங்கடிந்துதே
" ஹாபிமானத்தையும் வெறுத்த புண்ணியவான்கள்

"செய்யத்தக்கது" என்கிறார். மனுஷியதேகமுள்ள
வரையில் இவ்வைந்தையும் அடியோடுகளைந்து முடி
யுமென்றுவது; எத்தன்மையான மனிதனுவது எப்
போதும் இவ்வைந்துக்கும் ஆள்பட்டேயிருப்பானெ
ன்றுவது; நம்மன்பர் சாதிக்கமாட்டு வாரோ? வி
சுவாமித்திரரைப் போன்ற ருஷிகளும் அவற்றைஅ
டியோடு கடியமாட்டாரென்பதும், அதிநீசனுன ம
னிதனும் தினந்தோறும் அவன்செய்யும் தீமையைக்
காட்டிலும் நன்மையே அதிகமாய்ப் புரிகிறுனென்
பதும், சந்தேகமில்லை. பிராமாணிக்கியதை யின்றி
மனிதர்க்கு ஒருகாரியம் முடியுமென்றுவது, உலகம்
ஒருநாழி நிலைக்குமென்றுவது மலைக்க வேண்டாம்
கொள்ளையிடப் புறப்படும் பலருக்குள் ஒருவர்க்கொ
ருவர் பிராமாணிக்கியதை யில்லாதபக்ஷத்தில் அவ
கள்ஒன்றுய்க்கூடமாட்டார்களல்லவா?இவ்வாறுமனி
தர்க்கு புத்திதெரிந்ததுமுதல் தலைசாயும்வரையில் ஒ
வ்வொரு நிமிஷமும் பிராமாணிக்கிய மில்லாமல் அ
வர்களுக்கு முடியத்தக்ககாரிய மொன்றேனுமிராது
காமக்கிரோதாதிக ளோவெனில், பகுத்தறிவு வந்தத
ன்மேல் உடல் தளரும்வரையில் மாத்திரமே காமத்
துக்கும் மதத்துக்கும் பிரவிருத்தியுண்டு. இந்தஇடை
யிலும் அவை நிரந்தரமா யிருக்கமாட்டாது; தின
த்துக்குச் சிலமணிநேரங்களைக் காட்டிலுமதிகமாய்
எத்தன்மையான நீசனும் அவற்றிற்கு உள்பட்டிருக்
கமாட்டாள். கல்விகற்றுல் மோஹம்நீங்கும். இன்னு

வ்வாறே உரிமையான உபாயங்களால் இவையனை
தையும் நீக்கலாம். இவைபகுத்தறிவுக்கும் பகுத்த
வு இவற்றிற்கும் வைரிகளாகிலும் இவற்றால் பகு
தறிவுவெளிப்படாமலிருக்கையில், பகுத்தறிவு இவ
றைவெகுவிரைவில் வெளிப்படுத்துகிறதென்று சுவ
ப விசாரமுடையவருக்கு விளங்கும். நாம்பிரும்மத்
தைத் தியானிக்க அடியோடு அசக்தரெனப்பொருந்
மோ? அப்படிக்கில்லெனில் அதையப்பியாசிக்கத்
தொடங்குவோமாகில் முதலில் அசாத்தியமாய்த்
தோன்றுவது பிறகு கடினசாத்தியமாயும், இன்னும்
வற்பதினம்கழிந்தமேல் சுசாத்தியமாயும், இனிப்பு
ள்ளதாயும், விளங்கும். ஒருகாரியத்தை அப்பியஸிக்
கும் முன் அது கடினமாய்த் தோன்றுவது சகஜமே
ஆகிலுமதை கைவிடக்கூடுமோ? எழுதப் படிப்பதை
யெவ்வளவு சிரமப்பட்டு அப்பியசிக்க வேண்டியிருக்
கிறது? இந்த சிரமத்தையோசித்துமூடராயிருக்க ஒ
ப்புவோமோ? சுவல்ப ஐஹிகப் பிரயோஜனத்தை
க்கருதியே நமது ஆயுவில் பாதிகாலத்தை இந்தஅப்
பியாசத்திற்காக ஒழிப்போமாகில் நித்தியமான ஆமு
ஷ்மிகத்துக்காக இதில் பத்திலொருபங்காவது செல
வழிக்கவேண்டாமோ? அவ்வளவுகாலம் செலவழி
த்தால் தியானமார்க்கம் துஸ்ஸாத்திய மெனக்கூடு
மோ? அதுகடினமென்று அதற்குப்பதிலாய் அர்ச்சை
யை வத்துக்கொள்வோமாயின் இந்த அர்ச்சையை
யும் விசேஷத்திரவிய விரயமும் காலவிரயமுமின்

றிச் சகலரும் அனுஷ்டித்து முடியாதாகையால் இ
னிநால்வர்சேர்ந்து சகலத்திலும் சுலபமாயும் இன்ப
ம் தருவதாயுமுள்ளமார்க்கம் அவனவன்குறையின்றி
உண்டுகுடித்துஉறங்குவதும் காமக்குரோதாதிகளைத்
திருப்திப்படுத்துவதுமேஎன்பார்களாகில்அதையனுச
ரிக்கவேண்டியதும்விதியாகுமோ? இந்தஅர்ச்சைவந்
தவழியும்இத்தன்மையதேயாகையால் இதைமாத்திர
ம்ஏனனுஷ்டிக்கவேண்டியதோதெரியவில்லை. ஆழ்வா
ராதிமுதலியவரால்பாடப்பெற்றஸ்தலங்களுடையவு
ம்,அவற்றிலுள்ளவிக்கிரஹங்களுடையவும்,பேர்களைச்
சற்று கவனிப்போமாயின், இந்த அர்ச்சைசூத்திரர்க
ளாலே அவர்கள்பொருட்டே ஆதியிலுண்டாக்கப்பட்
டதென்பதற்கும்,அதைப்பிறகுபிராம்மணரும்சுவப்பி
யோஜனத்தைப்பற்றி யனுஷ்டிக்கத் தொடங்கினார்க
ளென்றும்,நிர்விவாதமாய்விளங்கும். இந்தஸ்தலங்க
ளிலும் அவற்றிலுள்ள விக்கிரஹங்களிலும்பெரும்பா
ன்மைக்கும்எவவளூர்,உறையூர்,அப்பக்குடத்தான்,உ
ப்பிலியப்பன், என்பதுபோலத்தமிழ்ப்பெயர்கள்ஆ
தியிலிடப்பட்டு,வெகுகாலம்கழிந்தபிறகுஅவற்றில்பி
ராம்மணர்புகுந்து புராணங்களெழுதத் தொடங்கிய
போது இப்பெயர்களுக்கு ஸமஸ்கிருதத்தில் மொழி
பெயர்த்தார்களென்றும், விளங்கும்.இவ்வாறுமொழி
பெயர்ப்பதில் சிலஸம்ஸ்கிருத நடைக்கு இணங்கிய
போதிலும் பலமொழிபெயர்ப் பென்றேஸ்பஷ்டமா
ய்விளங்குகின்றன. திருவெவ்வளூர்,ஸ்ரீபெரும்பூதூ

ர், முதலியவற்றிற்கு, கிங்கிரஹபுரம், பூதபுரம் என்றும், இன்னுமிவ்வாறே அனேகஸ்தலங்களுக்கும் அவற்றிலுள்ள விக்கிரகங்களுக்கும் பெயர்களிட்டிருப்பதும் எங்கள்பேச்சினுண்மையைஸ்தாபிக்குமாகையால் இதில்சந்தேகமுள்ளவர்கள் சோழநாட்டுத்திருப்பதிகளிலுள்ள ஸ்தலங்களுக்கும் விக்கிரகங்களுக்கும் ஸம்ஸ்கிருதப் பெயர்களை விசாரித்துத் தெளிவார்களென நம்புகிறோம்.

கக. "அசஞ்சல சித்தமுண்டாவதும் ஐம்புலன்க
"ளைச் செயிப்பதும் அருமையானதாகையால்எல்லா
" வற்றையும்விடவிக்கிரஹஆராதனமே மிகவும்சிறந்
" ததென்று பிரும்மாதிதேவதைகளும், சனகசனந்த
" நாதியோகிகளும்,வியாசகௌதம பராசராதி ருஷி
" களும், மனுமாந்தாதாமுதலானவர்களும், மனிதர்க
" ளும் அனுஷ்டித்து மிகுந்த பேறுபெற்றிருக்கிறார்க
" ளென்று நமதுபெருநூல்களெல்லாம் முறையிடுகி
" ன்றனவல்லவோ"என்றுசொல்லியிருக்கின்றது. ஐம்புலன்களையும் அவற்றின் விஷயங்களையும் நமது தர்மப்பிரவர்த்திக்குத் தடங்கலாகாமல் தடுக்காதவரை அர்ச்சையினாலாவது மற்றெந்த உபாசனமார்க்கத்தாலாவது பயனுண்டென்றாவது, பாபத்துக்கு ஹேதுவாயில்லாத விதமாக எவ்வளவு அனுபவித்தபோதிலும் அது நாம் முக்தி யடைவதற்குத் தடங்கலாமென்றாவது நம்மபர் ஸ்தாபிக்க மாட்டுவாரோ? ஐம்புலன்களையடக்காதவரையில்அர்ச்சைநமக்குக் கதிய

ளிக்குமென்றுவது,ஐம்புலன்களையடக்கஅர்ச்சைாவஷ்
த்தேனுமுதவுமென்றுவதுகொள்ளக்கூடுமோ ? காமக்
கிரோதாதிகளைமிதமின்றிவிருத்திசெய்வதற்குச் சகல
சாதனங்களும் அளவுமிதமின்றி கோயில்களில்வைத்
துக்கொண்டிருக்கையில்ஐம்புலனைச்சுட்டறுப்பதும்,
அழிவிலாகெதிபெறுவதும்அர்ச்சையினுலேயென்றுந
ம்மன்பர்சொல்லத்துணிந்தது வெகுவிநோதமாகவிரு
க்கிறது. உலகத்தில்பிசகிப்போனவர்பிரமாணந்தேடு
வதுசகஜமேயாகையால்,வியாசாதிருஷிகளும்மனுமா
ந்தாதாக்களும் இக்கொடிய தொழிலையனுசரித்தார்க
ளென்றுஇந்தபெரும்பழியைநம்மன்பர் அவர்தலையில்
சுருட்டிவைக்கத்துணிந்ததுஅதிசயமல்ல. அவர்கள்பி
ரகிருதத்தில்ஜீவித்திருக்கில்,இப்பொய்யுரைக்காகநம்
மன்பர்படவேண்டியபாட்டிற்குஅவர் ஹிருதயமேசா
க்ஷி. தேவர்களும் ருஷிகளும் இந்த அர்ச்சையையனு
ஷ்டித்தார்களென்பதற்கு மிகவும் மகிமைதங்கிய ஸ்
தலபுராணங்கள்தவிர இதரசாதர்ரணகவுரவமுள்ளக்
கிரந்தங்களினின்றுவது எதாவதுபிரமாணம் எடுத்து
ரைப்பாராகில் நாங்களவருக்கு என்றென்றும் கட
மைப்பட்டிருப்போம் ; அல்லது தாமே சாக்ஷியென்
பாராகில் நாங்களதின் கவுரவத்தை யாக்ஷேபிக்கவி
ல்லை. திரிகாலக்கியர்களென்று இப்பெயர்பெற்றவ
ர்களெல்லாம் தியானிக்கச் சக்தியின்றி அர்ச்சை
யைக் கட்டிக்கொண் டழுதார்களெனச் சொல்லத்
துணிவோர்க்குப் பொருந்தும்படிப் புளுகத்தெரியா

ற்போனதற்காக நாங்கள்உண்மையாய் ப்ச்சாதா
ப் படுகிறோம். இக்கலியுகத்துக்கு முன்வரையில்
ாதாரண மனிதர்க ளெல்லாம் தியானத்தினாலே
பறடைந்தார்களெனில் நம்மன்பர் பொருட்டுவியா
பராசராதிகட்கு இந்தச்சக்தியில்லாமற்போனது பு
மையல்ல. பிரும்மமேதனது சக்திகளையுங்குணங்க
ும் ஒழித்துவிட்டுநம்மன்பர்நிமித்தம் அசேதனபதா
த்தமாயிற்றெனில்,வியாசகௌதமாதிகள்தியானமா
ர்க்கத்தையாவது இவர்பொருட்டு ஒழிப்பதுஆச்சரிய
மாகுமோ? கடசியாக ஆச்சையை யவலம்பித்துஅதி
லெதொண்டுபட்டவர் பொங்கல்தத்தியோதனம்முத
லியஓஹரைகளும், நீங்கலாநோயும்தவிர வேறெந்தப்
பேறுகளைப்பெற்றார்களோநாங்களறியோம். ஆயினும்
எங்கள் திருப்தியின்பொருட்டு நம்மன்பர் அதைவிவ
ரித்துக்கூறுவாரெனப் பிரார்த்திக்கிறோம்.

உ௦. "இவையெல்லாம் நம்மால் செய்யப்பட்ட
" னவாகுமோ"என்கிறார். இவற்றில்சிலநம்மாலும்,சி
ல நம்ம தகப்பன்மார்களாலும், செய்யப்பட்டன
வேயன்றி, எல்லாம் நம்மால் செய்யப்பட்டனவென்
றுநாங்கள் சொல்லத்துணியோம். இவற்றைச் செய்
தபாவத்திற்கு நம்மபாட்டன்மாரை உட்படுத்தஎங்க
ட்கு மனமில்லை. ஆகிலும் தப்பிதம்செய்தவர்யாராகி
லும்சிக்ஷயடையவேண்டியதுநியாயமே யாகையா
ல், நம்மன்பர் தயைசெய்து நம்ம பாட்டன்மாருக்கு
ம் இவற்றில் ஏதாவது சம்மந்தத்தை ருஜுப்படுத்து

வாராகில் அப்போது இதற்காக நாமடைந்த வெகு
மானத்தில் அவர்கட்கும் பங்களிப்போம். ஆகிலும் ந
ம்மவர் திருப்தியின்பொருட்டு இதினின்றும் நம்மபா
ட்டன்மார் தப்பிப் போவார்களென்று உறுதியாய்க்
கூறுகிறோம்.

உக. "இப்படியாக பகவான் அதிசுலபமான தி
"வ்விய ரூபங்களாகி, நம்மாற் செய்யப்பட்ட ஆரா
"தனங்களைக்கைக்கொண்டுஇகத்தில் பாவமன்னிப்பு
"ம் பரத்தில் மோக்ஷமென்கிற பிரும்மா னந்தத்தை
"யும் கொடுத்துரக்ஷணைசெய்கிறாரென்று பகவத்வா
"க்கியமாகிய பாஞ்சராத்திரமும் வைகானஸமும்மு
"றையிடுகின்றனவே" என்று சொல்லி யிருக்கிறார்.
இத்தன்மையானக் கிரந்தங்களில் இவ்வாறு கூறியி
ருப்பது ஆச்சரியமல்லவென்பதற்கு "ஊஜ்யாசோவ
வு" என்கிற பிராணதோஷிணி வாக்கியத்தை உதக
ரித்ததுமன்றி, இந்தப்பாஞ்சராத்திராதி தந்திரங்களி
ன் மஹிமையை ஐயமற இதுவரையில் நிரூபித்திக்கி
ன்றமையால், இவ்விடத்தில் வீண்பொழுது போக்க
வேண்டிய ஆவசியகமில்லை. ஆகிலும் நம்மவரில் திரி
மதஸ்தாளும் பிரமாணமாயொப்புக்கொண்டிருக்கும்
*"பலஜன்மங்களெடுத்தபிறகும் கியானவான் மாத்தி
"ரமே யென்னையடைகிறான்" என்னும் கீதாவாக்கிய

* வஹுநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்
மாம் ப்ரபத்யதே.

ந்தை, வைஷ்ணவர்களிலும் சிலர்மாத்திரம்பிரமாண
ாய்க்கொண்டிருக்கும் தந்திரங்களைக் கொண்டு நம்
மன்பர் ரத்துசெய்ய முயலுகிறாரென்பதை மாத்திர
ம் எச்சரிக்கிறோம். இனி நம்மன்பர்கூறும் மற்றொரு
சுருதிப்பிரமாணத்தைச் சற்றுகவனிப்போம்.

௨௨. "இதுதவிர யஜுர்வேதம் ஐந்தாங்காண்டம் 'முதற்பிரஸ்னம்பதினொன்றுமனுவாகத்தில்சொல்லு 'கிற சுருதியினால் விக்கிரஹ ஆராதனமே எல்லோர் 'க்கும்சரியானசன்மார்க்கமென்றுசொல்லப்படுகிற 'தே" என்று சொல்லியிருக்கிறார். இந்தச்சொல்லின் தன்மையைரூபிக்க அந்த சுருதியின் மொழிபெயர்ப்பை இவ்விடத்திலுரைப்பதே போதுமாகையால் வித்தியாரண்ணிய பாஷிய சகாயத்தால் அதின்கருத்தை இவ்விடத்தில் உரைக்கிறோம். இது ஆசுவமேதத்தில் ஆப்பிரி என்னும் விறகைப்பற்றிய பிரகரணமென்று அனைவரும்ஒத்துக்கொள்வார்கள். இதில் விக்கிரஹப் பிரஸ்தாபமே வருவதற்கிடமில்லாம லிருக்கையில் "விக்கிரஹஆராதனமே" சரியானதென்று நம்மன்பர் ஏவகாரத்தோடு உரைத்தது வெகுவிந்தையாக விருக்கிறது.

*"ஓஅக்கினியே! நீர்ஒளிபொருந்தியவராக மனதி "லுள்ள ரஹசியத்தை வெளிப்படுத்தி உருசியுள்ள

---

* ஸமிதொ அஞ்ஜந் க்ருதம் தீநாம் வநு
தெ௦ நு மயாதிங்வோ நஃ வாஜீவஹநுவாஜிநம்

"நெய்யைக் குடித்துவிட்டு, ஓஜாதவேதஸே! வேகமு
" ள்ளநீர் ஹவிஸ்ஸைக்கொண்டு தேவர்களுடைய பி
" ரியசமுகத்தில் சேர்ப்பீராக. நெய்பூசியஹவிஸ்ஸா
" கிய இந்தக் குதிரையானது தேவர்களைப்போயடை
" யட்டும். ஓஅசுவமே! உன்னைத்திக்குகள்தடுக்காருதி
" க்க. இந்தயஜமானனுக்கு ஷுமெயை(சோற்றை)
" க்கொடு. அசுவமே! நீஸ்துதிக்கத்தக்கவன்,சேவிக்க
" த்தக்கவன்,வேகமுடையவன்,யக்கியார்ஹன்வஸ-
" அக்கினி ஹவிஸ்ஸை வஹித்துக்கொண்டு துஷ்டியுள்
" ள உன்னைத்தேவருடன் சேர்பிக்கட்டும். பர்ஹிஸை
" நன்ருய்ப் பரப்புவோம். அவ்வாறு பரப்பப்பட்டும்,
"பூமியில்பரந்து வளர்ந்து கொண்டும், பெரிதாயுமு
" ள்ள அந்த பர்ஹிஸை சுத்தமாக்கிக்கொண்டு பிரீதி
" யுள்ள அதிதிஸ்வர்க்கத்தில்ஸ்தாபிக்கப்படட்டும். ஓ

---

ஜாதவேதொதெவாநாං வக்ஷிப்ரிய ஊஸய
ஷுං. ஸ்ருதெநாංஜநுஸ்ஃவயொதெவயாநாநு
ப்ரஜாநஙாஜ்யெவ்யதெவாநு, சுநுசுவா வ
வெந்ருதிஸஃ, ஸவஞாசஃஸூயாஊவெஸ், யஜ
ஊநாயயெஹி. ஸஃஸ்துஹாஸிவஜ்ஹ்ஸு, வாஜீ
நு ஸூஸுஹாஸி, ஊயஹ்ஸவெந்து! சுஹ்ஷ்ணா
தெவெவஸுஸுஹிஃ, ஸஜொஷாஃ ஸ்ரீதஃவ
ஹ்நிஃ வஹதஃ ஜாதவெஃதாஃ, ஸ்தீணஃ ப

‘ ருத்துவிக்குகளே! உங்களுக்கு இந்தத்துவாரங்கள்
‘ நல்ல ஐசுவரியமளிப்பனவாயும்,பலஉருவினவாயும்,
‘ உயரெடுக்கப்பட்டகதவுகளால்விரிந்தும்,அசைக்கத்
“ தகுந்தும், பெருத்தும், நன்ருயும், ஒலித்துக்கொண்
“டும்,பிரகாசித்துக்கொண்டும்,சுகமாய்ப்புகத்தகுந்து
“மிருக்கட்டும். (ஓபத்னியஜமானர்களே!) உங்கள்ய
“ க்கியஸபையில் மித்திராவருணருக்கிடையில் சஞ்ச
“ ரித்துக்கொண்டும், யக்கியங்களுக்குமுகமாயுமிருக்
“ கிற(அக்கினிஹோத்திரகாலத்தில் பிரயாணத்துக்கா
“ க)பரஸ்பரம் பேசிக்கொண்டும், சோபனமானஹிர
“ ண்ணியத்தைதரித்தும், பரஸ்பரம்ஸமானமாயுமிரு
“ க்கிற இரவுபகலைஇவ்விடத்தில் ஸ்தாபிக்கிறேன். (ஒ
“ பத்னியஜமானர்களே!)ஸமமான தேருடையவராயு
“ ம்,நல்லொளிபொருந்தியும்,தேவர்களாயும்,ஸமஸ்த

---

𑌹𑌿𑌰𑍁𑌃 𑌸𑍁𑌷𑍍𑌟𑍁𑌭𑍀𑌕𑌾, 𑌜𑍁𑌷𑌾𑌣𑍋𑌽𑌸𑍁𑌪𑍍𑌰𑌯𑍁
𑌪𑍍𑌰𑌯𑌜𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌯𑌿𑌵𑍍𑌯𑌾𑌂 𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯𑌃𑌸𑍁 𑌕𑍍𑌤 𑌜𑍀
𑌤𑌿𑌃 𑌸𑌜𑍋𑌷𑌾𑌃 𑌶𑍍𑌯𑌾𑌨𑌂𑌕𑍃𑌣𑍍𑌵𑌾 𑌨𑌾𑌸𑍁𑌵𑌿
𑌦𑍇𑌧𑌯𑌾𑌤𑍁. 𑌅𑌤𑌾𑌉𑌵𑌃 𑌸𑍁𑌹𑌮𑌾𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍁
𑌣𑌾 𑌵𑌿𑌪𑌕𑍍𑌷𑍋𑌭𑌿𑌃, 𑌶𑍍𑌰𑌯𑌮𑌾𑌣𑌾 𑌉𑌦𑌾𑌤𑍈𑌃,
𑌋𑌷𑍍𑌵𑌾𑌃𑌸𑌤𑍀𑌃 𑌕𑌵𑌷𑌃 𑌶𑍁𑌂𑌭𑌮𑌾𑌨𑌾 𑌦𑍍𑌵𑌾𑌰𑍋
𑌦𑍇𑌵𑍀𑌃 𑌸𑍁𑌪𑍍𑌰𑌾𑌯𑌣𑌾𑌭𑌵𑌨𑍍𑌤𑍁. 𑌸𑍁𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌾
𑌵𑌰𑍁𑌣𑌾𑌯𑌰𑍍𑌶𑍀 𑌈𑌲𑍁𑌵𑌂𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾 𑌅𑌧𑌿𑌸𑌂𑌵𑌿𑌦𑌾
𑌨𑍇, 𑌉𑌷𑌾𑌸𑌾𑌵𑌾𑌦𑍍𑌯𑌂 𑌸𑍁𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑍇, 𑌸𑍁𑌶𑌿

" மானஜகத்துக்களையும்பார்ப்போராயும்,உங்கள்காரி
" யங்களைப்படைப்போராயும்,தர்ஜனியினால் ஒளியை
"க்காட்டிக்கொண்டும்யிருக்கிறதெய்வஹோதாக்களை
" த்திருப்திசெய்கிறேன். ஆதித்தியர்களுடன் கூடிய
" பாரதிஎங்கள் யக்கியத்தைக் கோருவாளாக. ருத்
" திரனுடன் கூடியஸரஸ்வதிஎங்கள் யக்கியத்தை ர
" க்ஷிப்பாளாக. எங்களாலழைக்கப்பெற்ற வசுக்களு
" டன்கூடிய இடையென்பவள்எங்கள் யக்கியத்தை
" ரக்ஷிப்பாளாக. ஓதேவிகளே! நீங்கள் எங்கள்யக்கி
" யத்தை தேவர்களுக்குள் ஸ்தாபிப்பீர்களாக. தேவ
" ர்களிடத்தில் பிரீதிவைக்கத்தக்க வீரனாகிய(புத்தி
" ரனை)த்வஷ்டா உண்டாக்கினார். த்வஷ்டாவினிடத்

---

ஜுஷ்டஸ்யோநா விஹஸாஜயாசி. ப்ர
ஸாவார்ம் ஸாயீநா ஸுவர்ணா தேவளவ
ஶ்யந்தா புவநாநி விஶ்வா, கவி ப்ரியம் தோத
நாவாம் தீதாநா ஹோதாரா ஜ்யோதி: ப்ரதிஶா
திஶந்தா. ஆதித்யைர்நோ பாரதீ வஷ்டு ய
ஜ்ஞம் ஸரஸ்வதீ, ஸஹ ருத்ரைர்ந ஆவீத், இ
டோபஹூதா வஸுபி: ஸஜோஷா யஜ்ஞம்
நோ தேவீ ரம்ருதேஷு தத்த. த்வஷ்டா வீரம்
தேவகாமம் ஜஜாந த்வஷ்டு ரர்வா ஜாயத ஆஶு
ரஶ்வ:, த்வஷ்டேதம் விஶ்வம் புவநம் ஜஜாந ப

“ தினின்றும் வேகமாய்ப் போகத்தக்க குதிரையுண்
“ டாகிறது. இந்தப்பிரபஞ்சமனைத்தையும் த்வஷ்டா
“ உண்டாக்கினார். அனைத்திற்கும்கர்த்தாவையும்பொ
“ ருட்டு ஓஹோதாவேநீர்யாகம் செய்வீராக. நெய்பூ
“ சியகுதிரை அந்தந்தயக்கியத்தில் தேவருக்குஹவி
“ ஸ்ஸாயாகட்டும். வனஸ்பதியானவர் அக்கினியினால்
“ உண்ணப்பட்ட ஹவிஸ்ஸை தேவலோகத்துக்குக்
“ கொண்டுபோகட்டும். ஓஅக்கினியே நீர்பிறந்தமாத்
“ திரத்தில் பிரஜாபதியின் தபஸால்வளர்ந்து யக்கிய
“ த்தைதரிக்கிறீர், ஸ்வாஹாவென்றளிக்கப்பட்ட ஹவி
“ ஸுடன் முன்சொல்லும் நீர்வகிக்கும் சிரேஷ்டமா
“ னஹவிஸ்ஸைத்தொழத்தக்கதேவர்களுண்ணட்டும்.”
என்று சொல்லியிருக்கிறது. இந்தசுருதியினால் அர்ச்
சைக்கு எவ்வளவுஆதாரம்ஜனிக்கிறதோ அதுதானாய்
விளங்குமாகையால், அதைக்குறித்து நாங்களொன்

---

𑌬𑌹𑍋𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌿𑌹 𑌯𑌕𑍍𑌷𑌿 𑌹𑍋𑌤𑌃. 𑌅𑌶𑍍𑌵𑍋
𑌘𑍃𑌤𑍇𑌨 𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌾𑌸𑌮𑌕𑍍𑌤 𑌉𑌪𑌦𑍇𑌵𑌾𑌂 𑌋𑌤𑍁𑌶𑌃
𑌪𑌾𑌥 𑌏𑌤𑍁 𑌵𑌨𑌸𑍍𑌪𑌤𑌿𑌰𑍍𑌦𑍇𑌵𑌲𑍋𑌕𑌂 𑌪𑍍𑌰𑌜𑌾
𑌨𑌨𑍍𑌨𑌗𑍍𑌨𑌿𑌨𑌾 𑌹𑌵𑍍𑌯𑌾𑌸𑍍𑌵𑌦𑌿𑌤𑌾𑌨𑌿 𑌵𑌕𑍍𑌷𑌤𑍍. 𑌪𑍍𑌰𑌜𑌾
𑌪𑌤𑍇𑌸𑍍𑌤𑌪𑌸𑌾 𑌵𑌾𑌵𑍃𑌧𑌾𑌨𑌃𑌸𑌦𑍍𑌯𑍋𑌜𑌾𑌤𑍋
𑌦𑌧𑌿𑌷𑍇 𑌯𑌜𑍍𑌞𑌮𑌗𑍍𑌨𑍇𑌸𑍍𑌵𑌾𑌹𑌾 𑌕𑍃𑌤𑍇𑌨 𑌹𑌵𑌿𑌷𑌾
𑌪𑍁𑌰𑍋𑌗𑌾 𑌯𑌾𑌹𑌿 𑌸𑌾𑌧𑍍𑌯𑌾 𑌹𑌵𑌿𑌰𑌦𑌨𑍍𑌤𑍁
𑌦𑍇𑌵𑌾𑌃.

றும் விசேஷமா யுரைக்கவேண்டியதில்லையென நம்
புகிறோம்.

உ௩. "எங்குநிறைந்தவராயும் சர்வவல்லவராயுமி
"ருக்கின்ற பகவானுக்கு விக்கிரஹத்திலிருக்கவும்,அ
"தினல் நமக்குவேண்டிய பலன்களைக்கொடுக்கவும்
"சக்தியில்லாமற் போகுமா. அணுவுக்குள்ளணுவாயு
"ம்பெரிதுக்குட் பெரியவராயு மிருக்கிறரென்கிறசு
"ருதிவசனத்தை ஆலோசிக்கவேண்டாமா. இந்த
"விக்கிரஹ ஆராதனத்தை வைஷ்ணவம் ஸ்மார்த்
"தம்,சைவம், சாக்தேயம்,காணபத்தியம்,பாஸ்கரப
"த்தியமென்கிற ஷண்மதஸ்தரும் ஒப்புக்கொண்ட
"விஷயமென்றறியீரா. மேலும் நமது சடகோப
"ர்முதலிய ஆழ்வாராசாரியர்களும் அப்பர் முதலிய
"சமயா சாரியர்களும், மற்ற நாயன் மார் களும்
"விக்கிரகததையே, பிரம்மமென்று அபேதமாய்பா
"டி பேறுபெற்றிருக்கிறர்களல்லவா" என்று சொல்
லியிருக்கிறது. பிரும்மத்துக்கு எவ்விடத்திலும்எவ்வி
தமாயுமிருப்பதற்குச் சக்தியுண்டெனினும் அவருடை
ய இதரகல்யாணகுணங்களுக்கும் நியமங்களுக்கு
ம்பாதகம் ஜனிக்கும்படி நடப்பாரென்பது அசம்பா
வியமென இதற்குமுன்னே நிரூபிக்கப்பட்டது. இது
வரையில் பலரனுஷ்டித்தார்களே என்பதற்கு "யா
"ந்யநவத்யாநிகர்மாணி" என்கிற சுருதியையும்
அதின் பாஷியங்களையும் கவனிக்க வேண்டியது.
சிலநாள் முன்வரையில் அம்மைப்பிடாரி காட்டேரி

முதலியவற்றிற்கு நம்மபெரியவரனைவரும் பொங்க லிட்டுவந்து,பிறகுஅவற்றை க்ஷுத்திரதெய்வங்களென்றும், உபாசிப்பதக்கனவல்லவென்றும் ஒழித்தார்களல்லவா! முன்னோரனுஷ்டித்தார்களென்கிற ஹேதுவே பலீயஸாகில், மேற்படிக்ஷுத்திரஉபாசனையை ஒழித்ததும் பழுதென்றேசொல்ல வேண்டியிருக்குமல்லவா? இத்தியாதி அநந்தஹேதுக்களால்இவையெல்லாம் ஆதியில் சூத்திரருக்காக வந்தவையென்றும்,அவற்றைப் பிராம்மணரும் மதிக்கேட்டால் அனுஷ்டிக்கத்தொடங்கியபோதிலும், தெளிவுபிறந்தபிறகு பலவற்றை விட்டொழித்தார்களென்றும், இனிபற்றற்று யோசிப்பவர் மற்றபாகத்தை ஒழிப்பார்களென்றும், ஒழிக்கவேண்டியதென்றும் ஏற்படுகிறதல்லவா.

உச. "நீதிநூலாகிய குறளில்"சிறப்பொடுபூசனை "செல்லாதுவானம்வறக்குமேல்வானோர்க்குமீண்டு" "என்றுதிருவள்ளுவர்சொல்லியிருக்கிறார். இதினாலு "ம்விக்கிரஹஆராதனமேமுக்கியமானதென்று நிச்ச "யிக்கப்படுகிறதே"என்றுசொல்லியிருக்கிறார். இதற்குநம்மன்பர் கூறியபொருள், இவர் உதஹரித்த சுருதிகள் விஷயத்தில் கொண்டபொருளுக்குத் தாழ்ந்ததல்ல. திருவள்ளுவநாயனார் வான்சிறப்பைக் கூறுகையில், மழையில்லாவிடில் மக்கள்சௌக்கியம்குன்றுவதுமாத்திரமேயன்றி விண்ணோரை உத்தேசித்துயாகம் செய்தலும் முடியாதென்பது இதன் கருத்தாகவிருக்கையில் விண்ணோர் ஸ்தானத்தில் பொம்மை

களையும், யக்கியத்தின் ஸ்தானத்தில் பைத்தியக்கார உச்சவங்களையும் வைத்துநம்மன்பர் பொருள்கூறிய து அவர்மனதுக்கேனும் இசைந்தால் போதும். வேத த்தைப் பூர்வபக்ஷம்செய்யத் திருவள்ளுவர் சொல் லைக் கிரஹித்த நம்மன்பர் பிரமாண கவுரவ தா ரதம்மியங்களை நன்குயறிந்தவரே போலும். ஆழ் வார்கள்பாடிய பாடல்களுக்குத் திருவள்ளுவர் சொல்குறைந்ததென்பதல்லஎங்கள்கருத்து. ஏட்டில் எழுதியதெல்லாம் துல்லியப்பிரமாணமென்று நம்ம அன்பர் கிரஹித்ததுமாத்திரமே ஆச்சரியமாக விருக் கிறது. இவ்வாறு அவர்கொள்ளாவிடில் பழமொழிக ளையும் சுருதிக்குச்சமானமாகக் கூறுவாரோ. ஏனெ னில் "ஆலயந்தொழுவதுசாலவுநன்று" "வையந்தோ "றுந் தெய்வந்தொழு என்று ஔவைகூட சொல்லி "யிருக்கிறுளல்லவா.?" என்று நம்மன்பர்கூறுகிருர். இவ்விரண்டு பழமொழிகளுள் இரண்டாவதினுல் ந ம்மவருக்கு என்னஆதார முண்டாகிறதோ தெரியவி ல்லை. மற்றொரு பழமொழியைப் பற்றியோவெனில் அதை அக்காலத்திலுள்ள சூத்திரரை உத்தேசித்து ஔவைசொன்னளென்பதில் சந்தேகமில்லை. அக்கா லத்திலுள்ள பிராம்மணரைநோக்கி இவ்வாறுரைத்தி ருந்தால் அவர்களுண்மையாக வேகோபித்திருப்பார் களென்பதில் சந்தேகமில்லை. அப்படிக்கில்லாவிடில் "ஆனை துறத்திலுைம், ஆலயத்தில் நுழையாதே" எ ன்று பிராம்மணுள் கூறியதற்குக் காரணம்விளங்கவி

ல்லை. இதினாலேயே அக்காலத்தில் சூத்திரரால் அவலம்பிக்கப்பட்டிருந்த இந்த அர்ச்சையைப் பிராம்மணர்வெகு அகவுரவமாகக் கொண்டிருந்தார்களென்பது ஸ்பஷ்டமாகிறது.

௨௫. "இந்தவிக்கிரஹத்தை நாமேசெய்து நாமே "பூசிப்பதென்றால் பிரத்தியக்ஷ விரோதமா யிருக்கி "றதென்றும் அற்பபுத்தி யுடையவர்களுக்காக இந் "தப்பிரதிமை யுண்டாகியதென்றும் சொல்லவந்தா "லோ நம்மாற்செய்கிறதென்பதும் நாம்என்கிற வக "ங்காரமும் இந்த அர்ச்சை விஷயத்தில் விட்டுவிட "வேண்டும்"என்று சொல்லியிருக்கிறது. மற்றவிஷயத்திலெல்லாம் அகங்கார மிருக்கவேண்டுமென்றும், இந்த அர்ச்சாவிஷயத்தில்மாத்திரம் அதைவிட்டுவிட வேண்டுமென்றும், நம்மன்பர் கூறுவதற்குக் காரணம்தெரியவில்லை. உலகத்தில்வாதமேருதபோது"ஶாஷங்கொபெநவ—ஷயெசு"(மிருதியைக் கோபத்தால்பூரிக்க)என்கிறநியாயப்படிக்குத் தண்டிரடியடியெனப்பேசுவதும்,யுக்திக்கும்பிரமாணத்துக்கும் விரோதமா யிருக்கிறதேயென்றால் ஐயாசாதித்ததை யாக்ஷேபிக்காதேயென்பதும், நம்மபண்டிதர்களுக்கு சுவபாவமாக விருக்கிறது. இந்தவிக்கிரஹங்களை நாமேசெய்துநமேகாத்து,நாமேஅழிக்கிறோமென்பதும் இவைபாமரரையேமாற்ற ஏற்படுத்தப்பட்டனவென்பதும் பொய்யாகுமோ.? அப்படியாகில் இவருடையப்பிரமாணங்களாகிய இதின் முதலத்தியாயத்தி லு

ரைத்த உத்தரகீதை, ஸ்காந்தம், மஹாநிர்வாணம், முதலிய கிரந்தங்களெல்லாம் இவர்கிழித்தெறிந்துவி டுவாராகில்பின்பு இவ்வாறுசுகமாய்க்கூறட்டும். நாம் நமதென்கிறஅஹங்காரலேசமில்லாதநம்மன்பரோமுத லில் அவர் கிரந்தத்தை யெழுதுங்கால் சேஷத்து வகுண பரிபூர்ணராகவிருந்து எங்களை"வேதகாதகச மாஜ"மென்று எழுதினர். இவர் அர்ச்சாவிஷயத் தில் மாத்திரம் அஹங்காரம் கூடாதென்று உபதே சித்தவாறே நம்மவரனுஷ்டானங்களைப் பற்றிய எவ் விஷயத்திலும் அஹங்கார மமகாரங்கள் கூடாதெ னஎங்கட்குபதேசி த்திருப்பாராகில் நாங்களவருக்கு உண்மையாகவே உடன்ப்பட்டிருப்போம். "கூர்மை யான புத்தியுடனும் நேர்மையான பக்தி யுடனும்" நம்மன்பர் "எங்கள்புன்மதிக்கும் மதிமயக்கத்துக் "குமிரங்கி" அஹங்காரத்தை விட்டொழிக்கும் ப டிஉபதேசித்ததை, "ஆத்மஸ்துதி, அர்த்தாசை, ப "ரனிந்தனை யில்லாத என்னைப்போன்ற மகானுபா "வனுக்கும்ஒருபணம் இந்த முண்டத்துக்கும்ஒரு"ப ணமா" என்றுரைத்த உத்தராதிப் பிராம்மணன்கதை யைப்போல் மதிக்காமல் நல்லதையார்சொன்னாலும் கிரஹிக்கவேண்டியதென்கிற விதியினால் நம்மன்பர் அன்புகூர்ந்துஇவ்வளவு உரைத்ததற்காகநாங்கள் உ ண்மையாய் எங்கள் நன்றியறிவை விளக்கிறோம். எ ங்களுக்குமவர்க்கு முள்ளகாரியங்களிலெனில் இவர் சொல்வதை நாங்கள் தடுக்கக்கூடாதாகிலும் கடவு

னால் எங்கள்மீது சுமத்தப்பட்ட உத்தரவாதங்களைச் செலுத்தும்பொருட்டு விஷயவிசாரம் செய்துகிரஹிக்க வேண்டியதைக் கிரஹித்துத்தியஜிக்க வேண்டியதைத்தியஜிப்போமாகில் அந்நிமித்தமாக எங்களைஅஹங்காரிகளெனக்கூறுவது நம்மனபருக்குத் தருமமாகுமோ.

உசு. "அது எதைப்போல வென்ருல் இ'ப்பூமியி லிருக்கிற மனிதர் முதலிய சராசரங்'களெல்லாம் சிலஸ்திரீபுருஷ சம்மந்தத்தி ஞலும் சிலஜலப்பிரதவி சம்மந்தத்திஞலும் உண்டாகித்தா'மாய் வளர்ந்து மடிந்துபோவதை யெப்படி பக'தாக்கியை யென்று நிச்சயிக்கிருமோ அப்ப'டியே விக்கிரஹ விஷயயத்திலும் நினைக்க வே'ண்டியது மனிதர்களுடைய கடமையாக விருக்'கிறது"என்று சொல்லியிருக்கிருர். இதில் திருஷ்டாந்த திராஷ்டாந்தசம்மந்த மின்னதென்று விளங்கவில்லை. நம்மையெல்லாம் சிருஷ்டிப்பதுபோலவே கடவுள்விக்கிரஹத்தையும் சிருஷ்டிக்கிருரென்பதோ அல்லதுநம்மைக்கடவுள் சிருஷ்டிக்கிறவாறுநாமவற்றைச் சிருஷ்டிக்கிருமென்பதோ அல்லதுநேற்றில்லாமலும்,இன்றிருந்தும், நாளையில்லாமலும்போகும் இந்தவிக்கிரஹம்தன்னைத்தானே சிருஷ்டித்துக்கொண்டதென்பதோ,அல்லது வேறெந்தகருத்தைக்கொண்டோநம்மன்பர் இவ்வாறெழுதியிருக்கிருர். இவருடையஇந்தசுருதிக்கிபாஷியம் செய்யும்பெருமையாகி

லும் எங்கட்குச் சித்திக்குமென நம்பியிருந்தோம். ஆகிலும் எங்கள் கோரிக்கையீடேருமையால் அதை வெளியிடும்படி அவரையே பிரார்த்திக்கிருேம்.

உஎ. "நாம்அமுக்கியர், ஈசுவரன்முக்கியன் ஆ "கையால் பிரம்மமேஅர்ச்சை அர்ச்சையேப் பிரம்ம "ம்"என்று சொல்லி யிருக்கிறது. இந்த பராமர்ச வாக்கியத்தை எந்த தர்க்கத்தைக்கொண்டு பரீக்ஷிக்க வேண்டியதோ தெரியவில்லை. ஒருதர்க்கத்துக்கும் இது இசையமாட்டாதென்பதையறிந்தே இதையாக்ஷேபிக்கக்கூடாதென்னுங் கருத்துடன் எங்கள்வாயைமூடும்பொருட்டு இது "பகவன்னியமனம்"என்று முடித்தார். சுருதியில் அவர் நியமித்ததற்கு நேர்விரோதமாக இப்படியொரு நியமனம் புதிதாய்த் தோன்றியபடியால் அதைச் சற்றுவிசாரிக்கத் துணிகிருேம். இதிலுரைத்தமுதலிரண்டு வாக்கியங்களைப் பிரதிக்கியையும் ஹேதுவு மெனக்கொள்ளும் பக்ஷத்தில் நாம் பிரும்மமல்லவென்றுமாத்திரம் நிகமனமேற்படும். இந்தஇரண்டு அவயவங்களிலும் ஹேதுவாயாவது பக்ஷமாயாவது சாத்தியமாயாவது பிரவர்த்திக்காத அர்ச்சையென்னும்பதம் எந்தசம்மந்தத்திஞல் "பிரு "ம்மமே அர்ச்சைஅர்ச்சையே பிரும்மம்"என்கிற நிகமனத்தில் வந்தேறியதோ-தெரியவில்லை. ஒவ்வொரு பராமர்ச வாக்கியத்திலும் பக்ஷம் சாத்தியம் ஹேதுவென்கிற மூன்றுஅவயவங்களைக் காட்டிலும், அதிகமிருப்பதாய் இதுவரைக்கேட்டிராவிடிலும் இந்தப

ராமர்சவாக்கியத்தில் "நாம்,பிரும்மம், அர்ச்சை, மு
"க்கியம், அமுக்கியம்,"என்கிற ஐந்துபதங்களைக் க
ண்டபடியால்-இவற்றின் சம்மந்தங்களை எங்கள் "பு
ன்மதிக்கு"விளங்கும்படி நம்மன்பர் தெளிவாயுரை
ப்பாரென நம்பி வேண்டிக்கொள்ளுகிறோம். இதில்
வியவஹாரித்தபரிபாஷைகள்செவ்வையாய்த் தெரியா
விடில் நாளதுவருஷம் ஜூலைமாசத்தியதத்துவபோதி
னியைப் பார்த்தால் விளங்குமென எச்சரிக்கிறோம்.

உஅ. "இதுவே மோக்ஷத்திற்குஅதிசுலபமானவ
"ழியென்றுநினைக்காதவர்கள்தாம் அற்பபுத்தியுடை
"யவர்கள்"என்றுநம்மன்பர்கூறுகிறார். உண்மையில்
நாங்கள் அற்பபுத்தியுடைவர்களாகவேயிருக்கலாமெ
ன்பதில்சந்தேகமில்லை. ஆகிலும்வேதவிதியைத்தவறு
மல் அனுசரிப்பதினால் இதுமாத்திரமேயன்றி இன்ன
ம்எவ்வளவுகொடியஅபவாதம் நேரிட்டாலும்பொறு
மையுடன் சகிப்பதேஎங்கள்கடமையாகவிருக்கிறது.
வேதத்துக்கும் அதுபிரதிபாதிக்கும் பிரம்மத்துக்கும்
மேலானவராகிய நம்மன்பர் அர்ச்சைமாத்திரமேய
ன்றிஅதிலும் கோடிபங்கதிகமான ஹேயகிருத்தியங்
களையும் செய்தாலும் அவர் அதிகபுத்தியை யுடையவ
ரேயாவார். முடிவில் எங்கள்ஸுத்திரவாதத்தைச்செலு
த்தவேண்டிய தெங்கட்குப் பிரதானமேயன்றி நம்ம
ன்பருடையவாவது மற்றவருடையவாவது சர்டிபி
கேட்டல்ல.

உகூ. "இம்மகிமை பெருகிய திவ்வியாராதனத

"தைச் செய்யாதவர்களும் இதை யிகழ்ந்தவர்களும்
"கடவுளுடைய தண்டனைக்குட்படுவார்களென்று சு
"ருதிமுறையிடுகிறதே" என்று எழுதியிருக்கிறார். இப்
படிமுறையிடுகிறசுருதியின்னதென்றுஏற்படும்போது
அதற்குப்பதிலுரைக்கவேண்டியது ஆவசியகமாகும்.

௩௦. "மேலும் ஆரணம் முதற்பிரச்னம் இருபத்
"தேழாவது அனுவாகம் பத்தொன்பதாவது வாக்கி
"யம் முதலிற்சொல்லுகிற சுருதிக்கு வித்தியாரண்
"ணியரும் பாஸ்கரபட்டரும் செய்திருக்கிற பாஷி
"யத்தைப்பார்த்தால் உண்மையெல்லாம் வெளியா
"கும்" என்று சொல்லியிருக்கிறார். இந்தசுருதியில் *
"நல்லவஸ்திரந்தரித்துக்கொண்டும் அலங்கரிக்கப்பட்
"டும்(யூபம்)வந்தது. அதுபிறந்தமாத்திரத்தில் சிரே
"ஷ்டமாகிறது. அதை தேவதாப்பிரீதியுள்ள தீரரா
"யும் நல்லமனமுடையவராயு முள்ளகவிகள் புத்தி
"யினால் அதை நடுகிறார்கள்" என்று சொல்லியிருக்கி
றது. யூபத்தைப் பற்றியஇந்தசுருதியினால் விக்கிரஹ
ஆராதனம் பிரதிபாதிக்கப்படுகிறதாய் நம்மன்பர் உ
ரைத்ததுஅவர்கூறிய மற்றசுருதிப்பிரமாணங்களுக்கு
ச்சமானமாயிருக்கிறதென்பதற்குச்சந்தேகமில்லையே!
நம்மன்பர்தொடக்கத்தில் "நன்றாய்கேளும்" என்றவே

---

* ய-ுவாஸ--வாஸாஂ வரிவீத ஆ஗ாச ஸ
உஶ்ரேயாநு ஹவதி,ஜாயமாநஂ தஂயீராஸஂ க
வயஉ நூயநி, ஸ்வாயியொமநஸா லெவயஂஃ

ங்களித்துடன்முடிந்தது. இனிஇதின் பாஷியம்மாத்திரம்பாக்கியிருப்பதால்அதைஇவ்விடத்துஎடுத்துரைப்பதினாலேஅவர்பூர்ணதிருப்தியடைவாரென்பதில்சந்தேகமில்லை. * "ய—வா॰=த்ருடசரீரமுள்ளது=அஷ்டாசிரயலக்ஷணத்துடன்கூடியது,ஸ—வாஸா॰=அழகானரசனையோடுகூடியது:வரிவீத॰ அந்தரசனையினால் சுற்றப்பட்டது, இப்படிப்பட்ட யூபம் "ஆகாசு=வந்தது. ஸஉ=அதுதானே ஶ்ரேயாந் "ஜாயமாந॰=சகல=தமானமரங்களைக்காட்டிலும் "உயர்ந்தது. த○=இப்படிப்பட்ட அந்தயூபத்தையீ "ராஸ॰=புத்திமான்களாயும், உசாதேவயந்த॰=தேவர்களை விரும்புவராயும், ஸ்வாத்ய॰=நன்றாய்=

* ய—வா=ஜுவாம்ஶோஷ்டாஶ்ரயாதி லக்ஷணலக்ஷித ஐத்ய—ர்॰. ஸ—வாஸா॰= ஶோப நவாஸஸா=ரஶநயா—க்த॰. வரிவீத॰ தயாரஶநயாவேஷ்டித॰. ஸவம் வியோய—ஏ வஆமாசு= ஆமஜுதி. ஸஉ=ஸஸவ= ய—ஏ வ॰, ஶ்ரேயாந்ஜாயமாந॰=ஸவெ—ர்ஹ்யாவந ஷ்பதிஹ்யஉகக்ஷ்ஷ்டதயாஸம்பத்யமாநோஹவதி. த○=ஸவம் வியம்ய—ஏவம்யீராஸ॰ வஜ்ஞாஸந ஸா தெவயந்த॰=தெவாந் காமயமாநா॰,ஸ்வாத்ய॰=ஸ—ஷ்ட—=ஸவ—ர்தோய்யாநய—க்தா॰க

"ஸர்வவிதத்திலும்தியாகிப்பவராயும்உள்ள ரூவயஃ=
"தீர்கதர்சிகளாகிய அத்வரியுமுதலானவர்கள், உ௩ய
ஞ்தி=உயரமாய்நடுகிருர்கள்."என்றுசொல்லியிருக்கி
றது. வித்தியாரண்ணியர் நம்மன்பருடைய ஸ்வரூபத்
தை இவ்வளவு நன்ருய் ஆதரித்திருக்கிரு ரல்லவா.?
பாஸ்கரபட்டருடையபாஷியம் எங்களிடத்தி லில்லா
விடினும் மூலத்துக்கும் வித்தியாரண்ணியர் பாஷிய
த்துக்கும் நேர்விரோதமாக அவர்பொருள் செய்திரு
ப்பாரென நம்பக்கூடவில்லை.

௩௦. "இப்படிக்கிதன்மீது சொல்லியடங்கா
"த அனேகசுருதிகளும் உபநிஷதங்களும் ஆகமங்க
"ளும் இந்தவிக்கிரஹ ஆராதனத்தைக் கொண்டாடு
"கிறபோது ஏனிந்தக் கூட்டம் கூடினுர்கள். கூடி
"னுலும் வேதஸமாஜம்என்கிறபெயரை யேன்வைத்
"துக்கொண்டார்கள். இவ்வேற்பாடுமிகவும் ஒழுங்
"கற்றதாயும் உலகப்பழிப்புற்றதாயு மிருக்கிறதே எ
"ன்ன சொல்லுகிறீர்." ! என்றுகேட்க விபக்ஷக இன்
ந்தச்சண்டப்பிரசண்டமானப் பிரமாணங்களுக்குவி
டையுரைக்கமாட்டாமல்,அதிருக்கட்டும் இரண்டாவ
துநிபந்தனையைக் கேளும் என்கிருன். உலகத்தில் சு
ருதிகளும் உபநிஷத்துகளும் விஸ்தாரமிருப்பதுஉண்
மையே. ஆகிலும் அவற்ருலிவருக் கென்ன பயன்கி

---

வயஃ=க௱ஜஉஶிஷ்ெநாயூ௴யஷா ஊயாஃ,உ௦௩ய
ஞ்தி=உ௦௩தஂகூவஷ்ஞ்தி.

டைக்குமோ தெரியவில்லை. இதுவரைசுருத சாக்ஷிய மாயாவது இவர்பெயர்குறிக்கத் துணிந்தசுருதிகளும் பாஷியங்களும் இவர்கக்ஷியை இவ்வளவு திவ்வியமாக ஸ்தாபித்தனவென்றால் இவர்பேரும் உரைக்கமாட்டாத மற்றசுருதிகள் இவருக்கு எவ்வளவு உதவுமோ அதைப்பரீக்ஷிக்கவும் வேண்டுமோ. இதில்“சொல்லவடங்காது”என்பதினால்அந்தசுருதிகள்இவர்கருத்துக்கடங்காதென்பதோ அல்லதுஇந்தப்புஸ்தகத்தில் சொல்லிமுடியாதென்பதோ இவருடையஅர்த்தம். இதுவரையில்நாங்கள் வேதஸமாஜமென்கிற பேரையேன் வைத்துக் கொண்டோமென்று நம்மன்பர் மாத்திரமேயன்றி இன்னும்பலரும் கேட்டார்கள். இந்தவிண்ணப்பத்தைப் படித்தபிறகு அதற்குள்ள ஹேதுதானாய் விளங்குமாகையால் அதைவிரித்துரைக்கவேண்டிய ஆவசியகமில்லை யெனநம்புகிறோம். எங்கள்கூட்டத்தார்உத்தேசியமும் இன்னதென்றுநம்மன்பர்இனி அறிந்துகொள் வாரல்லவா ? நம்மன்பருடைய நீதியை அளவாகக்கொண்டுபரிசோதிக்குமளவில் எங்கள்கூட்டம் ஒழுங்கற்றதேயாம். உலகப்பழிப்புள்ளதாயிருக்கின்றதே யென்றாலோ “யதார்த்தவாதி பகுஜநவிரோதி”என்பது நம்மன்பருக்கே தெரியுமே. ஆகிலும்நாங்கள் பகுஜனவிரோதிகளாயிருக்கலாமேயன்றிஸர்வஜனவிரோதிகளல்லவே. உலகத்திலுள்ள ௬௪௦கோடிஜனங்களில் இத்தேசத்தில் இந்தஅர்ச்சையையேவயிற்றுப் பிழைப்பாய்ப்பாராட்டிக் கொண்டி

ருக்கும் சுமார் ௨ கோடிஜனங்கள்ளங்களைப்பகைத்த
போதிலும்மற்றவரெல்லாம் சிலாகிப்பாரென்பதில்ச
ந்தேகமுண்டோ. கடைசியாகஉலகத்திலுள்ளஜனங்க
ளுடையசிலாகைஅபேக்ஷிக்கத்தக்கதேயாகிலும்கடவு
ளின்கருத்திற்குஇ சையாதபோதுஇந்தசிலாகையெல்
லாம்காரியகாரியல்லவென்பது எல்லோர்க்கும்தெரிந்
தவிஷயம். இதுவரையில் நம்மவரில் பலரெழுதிவந்த
கிரந்தங்களைப் போலவே இந்தவேதசமாஜகண்டன
மும் ஒரு ஆழ்வார்பாடலாகப் பரிமளிக்கவேண்டுமெ
ன்னும் கருத்துடன் நம்மன்பர் அந்தசஞ்சிகையை எ
ழுதினாரென்பதில் சந்தேகமுண்டோ. அதின்சுவரூப
த்தைவிளக்கநாங்கள்முயலாவிடில்அதைப் பாமரஜன
ங்கள் ஆழ்வார்பாடலாயே மதிப்பதுமாத்திரமேயன்
றி அதைஸம்ஸ்கிருதத்திலும் மொழிபெயர்த்துசதே
பரிஷத்திலும் கோத்துவிடுவாரென்பதில் சந்தேகமு
ண்டோ. நம்மன்பர் கிரந்தத்தைத்தொடங்குங் கால்
தமக்குமனவருத்தமுண்டான தாயுரைத்ததற்குக் கா
ரணம் இப்போது நன்ருய்விளங்குமல்லவா. இந்தநா
ன்காவது அத்தியாயம் மற்றமூன்று அத்தியாயங்க
ளைப்போல் ரஸவத்தாயில்லாமைக்கு நாங்கள்காரண
முரைக்கவேண்டியதில்லை. நம்மன்பர்செய்த ஆக்ஷே
பங்களின்சுவரூபத்தையோசிக்குங்கால்அவற்றிற்குச்
சொல்லத்தக்க விடைகள் இதைக்காட்டிலும் ரஸவத்
தாயிருப்பது அருமையேயல்லவா. அவற்றிற்கு வி
டையுரைக்காமலே யிருந்துவிடலாமாகிலும்,அவைக

பேத்தியமானதாகையால் அவற்றிற்குநாங்கள்விடை யுரைக்கமாட்டாமல் விட்டுவிட்டோமெனப் பாமரஜனங்கள் மதிக்கும்படி யிருக்குமாகையால் எங்களிஷ்டத்துக்கு விரோதமாகவே அயலார்பொருட்டு இவ்வளவெழுதும்படி நேரிட்டது.

சாதாரணவிஷயங்களில் ஒருவன் அப்பிரமாணமாய் வாதிக்கத்தொடங்கில் நமக்குஎவ்வளவு மனவருத்தமுண்டாகுமோ அதைச் சற்றுயோசிப்போமாகில் நிஷ்பக்ஷபாதமாய் உண்மையை யறிந்து கொள்ளவேண்டுமென விருப்பமுடைய அநந்தப் பிராணிகளை மனப்பூர்வமாய் மோசம்செய்து,கபடவாதங்களாடி,அவர்களுடைய இஹபரசுகங்களெல்லாம் இழக்கும்படியான துர்மார்க்கத்தைச் சன்மார்க்கமென்று எண்பிக்கும்பொருட்டு, தமக்கு உள்ளும் வெளியும் சாக்ஷியாய்உறைகின்ற கடவுளிற்கும் அஞ்சாமல் பொய்ப்பிரமாணங்களை உதஹரிப்பவர் விஷயத்தில் அவரவர் உபயோகிக்கத்தக்க சொற்கள் எத்தன்மையனவா யிருக்கவேண்டுமென அவரவர்மனதைத்தொட்டுப்பார்ப்பாராகில்,நாங்கள் எங்களைவந்து மூடத்தக்க ஆவேசத்தை யடக்கிக்கொண்டு எவ்வளவோ வினயமாயும் தீனமாயும் எங்கள் விண்ணப்பத்தை எங்களுடைய க்ஷேமலாபத்திற்குடன்பட்ட அன்புள்ளசோதரர்களிடத்தில் அவர்களுடைய பரிசோதனை நிமித்தம் வைக்கிறோமென்பதுஸ்பஷ்டமாய் வெளியாகும். இனி உபயபக்ஷியையும் பரிசோதிக்கும் புத்திமான்க

ள் தீர்ந்தயோசனையின்மேல் யெங்கள்சொள்கையை நிந்தித்தாலும் ஆமோதித்தாலும் அவர்கள் தீர்மான த்துக்குட்பட நாங்கள் கடமைப் பட்டிருக்கிறோம். நம்மசகோதரரைநம்மஅன்பர் அசேதனபதார்த்தங்களாக மதித்து மோசஞ்செய்யத் தொடங்கியவாறன்றி நாங்கள் எங்கள்கக்ஷிக்குள்ள மூலப் பிரமாணங்களை இந்தச்சிறியசஞ்சிகைக்கு இயைந்தவாறு இதில்சங்கிரஹமாயுரைத்ததுமன்றி, எங்கள்சோதரர்களனைவரும் எங்களைப்போலவே கடவுளிடத்தில் கைநீட்டி புத்தியைப் பெற்றிருக்கின்றமையால் அவர்கள்பகவதாக்கியைக்கும் பாபதோஷத்துக்கும் அஞ்சி, பஞ்சபூதசாக்ஷிகமாக உண்மைக்குடன்பட்டு எங்களைநடத்தவேண்டியவாறு நடத்துவார்களென உறுதியாய்நம்பியிருக்கிறோம். முடிவில் எங்கள்பிரார்த்தனையெல்லாங்கூடி இருவகையனவாம். முதலாவது எங்களை எதிரிகளாகமதித்துப் போருக்கிழுத்த நண்பர்கள் உண்மையில் தார்க்கிகர்யாடியிருக்கும் பக்ஷத்தில் கடவுள் அவர்களைக் கடியாமல்காப்பாற்றி அவர்களுக்கும் சீரான அறிவளித்து அவர்கள்எங்களை யுண்மையான சோதரரென்று மதிக்கவேண்டுமென்பதும், இரண்டாவது எங்கள்கொள்கை சீருளளதான பக்ஷத்தில் இச்சன்மார்க்கத்தை நிலைநிறுத்துவதற்குரிய நல்லறிவு நன்முயற்சி முதலியவற்றை எங்களிடத்துவிருத்திசெய்தும் எங்கள்மீதுவரும் விக்ஷேபங்களைத்தடுத்தும் ஒடிந்தகை உடலுடன் கூடுவதுபோல நம்ம

தேசத்தாரனைவரும் நன்மார்க்கத்தில் ஒருமித்துவா
ழவேண்டுமென்பதுமே யாகையால் எங்கள் கோரிக்
கைக்கு இயைந்தவாறு பயனளிக்கும்படி ஞானாநந்
தசுவரூபியாகிய அத்விதீய பரமபுருஷனைநோக்கி, நீ
யேகதி, நீயேகதி, நீயேகதியென கைகட்டிக்காத்தி
ருக்கிறோம்.

முற்றிற்று.